# யார் இந்த நாடோடிகள்!

மானிட இயல் அறிஞர்
பிலோ இருதயநாத்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

ARCHBISHOP'S HOUSE,
Santhome, Madras-4
23rd March, 1970.

Mr. Philo Iruthayanath is one of those rare men who are prepared to do anything and undergo any difficulty or inconvenience to achieve the object proposed for realization. He took it upon himself to study the life and history of the many tribal people who are still found in India. For this he has had to travel to far, out of the way areas, live with the people for days together, experience many inconveniences and even dangers.

The many interesting facts he has gathered and brought out in attractive publications are a real contribution to the history of our country. One may perhaps look down upon the tribal life as primitive, barbarous and uncivilized, but a perusal of these books will show that in their poverty and primitive life these people have many traits of character and life which may, at times, put to shame the so-called modern civilization. His books certainly make very interesting reading and are bound to contribute towards a greater appreciation of our country. I wish therefore that these rather original publications find a place in all the libraries of our country and the Government may recognise his work and further promote his research capacity.

I wish God's blessing on the tireless work of Mr. Philo Iruthayanath.

(Sd.) R. ARULAPPA
Archbishop of Madras & Mylapore,
South India.

# முன்னுரை

அன்புள்ள பெரியோர்களே! முதலில், ''ஆதிவாசிகளின் இதயவாசி—காடர்களைக் கண்ட விதம்'' என்ற என் பயணக் கட்டுரையை வாசிக்க வேண்டுகிறேன். (அடுத்த பக்கத்திலுள்ளது) அப்போதுதான் நான் என் பயணத்தின்போது அனுபவித்த கஷ்டங்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.

நான் என் பயண அனுபவத்தை எழுதுவதற்குக் காரணம் மற்றர்களுடன் அவற்றைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்னும் ஆசைதான். என் நூலை வாசிக்கும் போது ஏற்படும் சில சந்தேகங்கள் பின் விளக்கங்களால் நீங்கும். இது வெறும் கதையன்று. ''மானிடவியல் ஆராய்ச்சி நூல்'' எனவேதான் என் பயணத்தைப் பற்றி எழுதவேண்டிய அவசியம் உண்டாயிற்று.

மேலும் மேலும் எனக்கு இத்துறையில் ஊக்கமளித்த திரு. மயிலை—சீனி—வேங்கடசாமி அவர்களுக்கும், திரு சாண்டில்யன் அவர்களுக்கும், விவேகானந்தா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்களான திரு ஜெகந்நாதாச்சாரி, M. A. திரு. A. S. இராமமூர்த்தி, M. A. அவர்களுக்கும் என் வணக்கங்கள்.

இந்நூலை மனமுவந்து நன்முறையில் உருவாக்கி வெளியிட்டிருக்கும் வானதி பதிப்பகம் உரிமையாளர் திரு ஏ. திருநாவுக்கரசு அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சேற்றிய ஸ்ரீ பரமேஸ்வரி பிரஸ் உரிமையாளர் அவர்களுக்கும் என் நன்றி கலந்த வணக்கம்.

இங்ஙனம்

பிலோ இருதயநாத்

# 'ஆதிவாசிகளின் இதயவாசி' காடர்களைக் கண்ட விதம்!!

மனிதர் தோன்றி, வாழ்ந்து மறைகின்றனர். அதைப் போல், பல செய்திகளும் தோன்றி மறைந்துவிடுகின்றன. சில இரகசிய நல்ல மருந்துகளும், யாருக்கும் கூறப்படா மலே, தனிப்பட்ட ஒருவரோடேயே மறைந்துவிடுகின்றன!

இதைப் போல் சரித்திர காலத்துக்கு முன்னும், பின் னும் பல புராதன வரலாறுகளும், சரித்திரச் சான்றுகளும், இலக்கிய வரலாறுகளும் சிலரால் மறைக்கப்பட்டும், மறுக் கப்பட்டும் போய்விடுகின்றன.

சில மன்னர்கள் 'தாமே எல்லாம்' என்றிருக்க வேண் டும் என்ற பேராசையால் பண்டைக் காலங்களில் நல்ல சான்றுகள் அடங்கிய இடங்களையும், நூல் நிலையங் களையும், தீக்கிரையாக்கிவிட்டனர். அவை சுடர் விட்டு எரியும்போது அம்மன்னர்கள் மது உண்டு சிரித்திருந்த செய்திகளும் சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளன.

இவற்றைக் கண்டு, கண் கலங்கிய குடிமக்கள் பலர் காடுகளுக்குச் சென்று, மறைந்து வாழ்ந்தனர். அம் மக்க ளிடம்தான் இன்று பண்டைக் காலத்துச் சாத்திரங்கள் பழமொழி வாயிலாகவும், நடனப் பாடல்கள் வாயிலாக வும், நாடோடிக் கதைகள் வாயிலாகவும், நடை உடை பழக்கங்கள் வாயிலாகவும், சமைக்கும் முறை வாயிலாகவும் விளங்குகின்றன.

ஆனால், 'கதைகள் எப்பொழுது உண்டாயின?'' என்பதை நிர்ணயித்துச் சொல்ல முடியாது. காரணம் மனிதன் எப்பொழுது சிந்திக்கத் தொடங்கினானோ, அன்றே கதைகளும் தோன்றின என்று கூறலாம்.

ஒரு கட்டடத்திற்கு மண், செங்கல், சுண்ணாம்பு, கருங்கல் முதலியன தேவைப்படுகின்றன. அவ்வாறே நம் நாட்டுக் கல்வெட்டுகள், காசுகள், இலக்கியங்கள், அகழ் வாய்வில் கிடைக்கும் சில பண்டையப் பொருள்கள் ஆகி யவை இந்தியாவின் (உலகில்கூட) தொன்மை வரலாற் றைப் பற்றித் தெரிந்துகொள்ளச் சான்றுகளாக விளங்கு கின்றன. எல்லாவற்றையும் விடக் கல்வெட்டுகள் அதிக அளவில் செய்திகளையளிக்கின்றன.

காட்டில் காடர்களின் குடிசையில் வாரக் கணக்கில், நானும் அவர்களுடைய, ''ஒரு சகோதரன்'' என்ற எண் ணத்துடன் பழகிய பொழுதுதான் அவர் வாழ்வின் இன் பத்தை முழுவதும் உணர முடிந்தது.

நான் காடர்களிடம், ''என்னுடைய தாத்தாவுக்குத் தாத்தா பல ஆண்டுகளுக்கு முன் உங்களைப் போலவே வாழ்ந்தார்'' என்று கூறிய பொழுது, அவர்களுக்கு உண் டான இன்பத்தை என்னால் எழுத இயலாது. ஆதிவாசி கள் இரவில் தீ மூட்டிக்கொண்டு விடிய விடிய நடனமாடு வார்கள். செய்திகளைச் சேகரிக்க நானும் அவர்களுடன் தழைகளை கட்டிக்கொண்டு நடனமாடுவேன். இன்றும் (வயது 68) சில நடனங்களை வீட்டில் ஆடுவதுண்டு.

இந்த நூலிலே சில செய்திகள் சிற்சில இடங்களில் மீண்டும் மீண்டும் கூறப்படுகின்றன. மேற்கோளுக்காகவும் அனுவாதத்தின் பொருட்டும் ஆராய்ச்சிக்குச் சான்றுகாட் டும் பொருட்டும் சில செய்திகள் மீண்டும் மீண்டும் கூற வேண்டுவது அவசியமாக உள்ளது. இவற்றைக் ''கூறுவது கூறல்'' என்னும் குற்றமாகக் கருதக் கூடாது. தனி இலக் கிய நூல்களுக்கே, ''கூறியது கூறல்'' என்னுங் குற்றம் பொருந்துமேயல்லாமல், சரித்திர ஆராய்ச்சி, நூலாகிய இது போன்ற நூல்களுக்கு அக்குற்றத்தைச் சாட்டுவது கூடாது. வேண்டிய இடங்களில் கூறியதையே, மீண்டும்

மீண்டும் கூறாமற்போனால் தெளிவும் விளக்கமும் பெற முடியாதாகையால் அவ்வாறு கூறவேண்டுவது அவசியமாயிற்று.

இவை வெறும் கதைகள் அல்ல. சமுதாய வளர்ச்சியையும் வரலாற்றையும் நிர்ணயித்துக் கதைபோல் எழுதியவைகளே. வரலாற்றைப் படிப்பதால் ஏற்படும் சலிப்பும், தத்துவத்தைக் கற்பதால் ஏற்படும் சிரமமும் இந்த நூலில் தோன்றமாட்டாது.

தும்பிகள் பூக்கள் தோறும் பறந்து சென்று தேனைச் சேகரித்து வைத்தால், அதைக் காடர்கள் கொண்டு வந்து குடித்து மகிழ்வது போல், நானும் பல காடுகளுக்குச் சென்று, பசி தாகம் பாராமல் அவர்களோடு கூழ் குடித்து, அதனால் சில சமயம் எனக்கு நேர்ந்த வயிற்றுளைச்சலையும் பொருட்படுத்தாமல், பலவகை மக்களிடமிருந்து பல வியக்கத்தக்க பழக்கவழக்கங்களைப் பற்றிய தகவல்களாகிய தேனைச் சேகரித்துக்கொண்டு வந்து நிறைத்த பல கட்டுரைகள்தாம் என் நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

இந்தியாவின் சரித்திரம் எந்த அளவுக்கு மூடுபனி போல், பாசியால் மூடியிருக்கிறது என்று இந்த நூலைப் படிக்கும் அன்பர்கள் தெரிந்துகொள்வார்கள். கடந்த ஐம்பத்திரண்டாண்டுகளாக எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல் செய்த தொண்டுகள், இன்று பல நூல்கள் எழுதவும, கட்டுரைகள் எழுதவும் பல இடங்களில் சரித்திரச் சான்றுகளுடன் தைரியமாகப் பேசவும் எனக்கு உதவியாக இருக்கின்றன.

எல்லாப் பத்திரிகைகளின் பேரன்புமிக்க ஆசிரியர்கள் காட்டிய அன்பும், செய்த பெரிய உதவியுமே என் உயிரையும் பொருட்படுத்தாமல் காடுகளுக்குள் நுழையத் தைரியத்தையும் விடா முயற்சியையும் உண்டாக்கின.

சில நண்பர்கள் ''காடுகளுக்கெல்லாம் நீர் எப்படிப் போகிறீர்? உண்மையாகவே போகிறீர்களா? அல்லது மற்றவர்களைப் போல, ''டுப்'' விடுகிறீர்களா?'' என்று கேட்டார்கள். அவர்களை என் இல்லத்திற்கு வரச்சொல்லி நான் காட்டில் சேகரித்த பொருள்களையும் அந்நியர்களாலும், மேலை நாட்டு மானிட இயல் அறிஞர்களாலும், என் நோட்டில் எழுதப்பட்ட செய்திகளையும், ஆயிரக் கணக்கான என் புகைப்பட நெகட்டிவ்களையும் காண்பிப்பேன். அந்த நண்பர்கள் என்னிடம் விடை பெறும் போது, ''இது என் அன்பளிப்பு'' என்று கூறி உதவி செய்வார்கள்.

சிலர், ''உங்களுடைய, ஜீப்—துப்பாக்கி எங்கே?'' என்று கேட்பதுண்டு. அவர்களுக்கு ''இது என் ஜீப்!'' என்று என் சைக்கிளையும், ''இது என் துப்பாக்கி!'' என்று என் காட்டுத் தடியையும், ''இது என்னுடன் வரும் தைரியமுள்ள நண்பர்!'' என்று நான் ஜெபம் செய்யும் ஜெபமாலையையும் நான் வாசிக்கும் பைபிளையும் எடுத்துக் காட்டுவேன். ''மனமிருந்தால் மார்க்கமுண்டு'' என்பதற்கேற்ப எந்தப் பற்றும் இல்லாதவனாய், எந்த ஆகாரத்தையும் விரும்பிச் சாப்பிடும் மனமுள்ளவனாய், கிடைத்ததே போதும் என்று நிம்மதியுடையவனாய் உள்ளத்தை மாற்றிக்கொண்டால் எங்கும் பிரயாணம் செய்யலாம். என் வாழ்க்கையில் மனக்கவலையும், துன்பமும் நோயும் பொருளாதார நெருக்கடியும் தொடர்ந்து வருத்துகிற காலங்களில்தான் என் கட்டுரைகளை எழுதும் சமயமும் நேரமும் வந்து சேரும்.

கட்டுரைகள் எழுதுவதற்கும், நூல்கள் எழுதுவதற்கும் பொருளாதாரக் கஷ்டம் ஒன்றும் பாதிக்காது. ஆனால் குடும்பத்தில் நிம்மதியும், அமைதியும் வேண்டும். அதை எப்படி அடைவது? அது நம்மிடம்தான் இருக்கிறது, முதலில் ஆண்டவன்; பிறகு மனைவி குழந்தைகள். இதை

அடைய வேண்டுமானால், ஆண்டவன் வழிபாடு தினம்—
தினம் செய்யவேண்டும். அப்பொழுது பணச் செலவில்
லாமல் இருக்குமிடத்திலேயே அமைதியும்—நிம்மதியும்
கிடைக்கும்.

பிரயாணம் முடிந்து வீட்டுக்கு வந்த பின், சில சமயங்
களில் அவ்வவ்விடங்களில் சேகரித்த குறிப்புகளையும்,
நான் எடுத்த புகைப்படங்களையும் சரிபார்த்துக் கொண்
டிருக்கும்பொழுது, ''திடீர்—திடீர்'' என்று என் உடம்பு
சிலிர்த்ததைப் பின்னாலிருந்து கவனித்த என் மனைவியும்
என் மகளும், ''என்ன நடந்தது காட்டில்? ஏன் ஆழ்ந்த
சிந்தனையில் உங்கள் உடம்பு சிலிர்க்கிறது? மௌனமாக
ஏதோ யோசனையில் ஆழ்ந்து விடுகிறீர்களே?'' என்று
கேட்டார்கள்.

அப்பொழுதுதான் என் சிந்தனை கலைந்து, ''ஒன்று
மில்லை. புகைப்படங்கள் பிடிக்க வேண்டும், செய்திகள்
சேகரிக்க வேண்டும் என்ற நினைப்பிலேயே காட்டில்
கிடைத்ததைச் சாப்பிட்டுக்கொண்டு காட்டில் சுற்றியதை
யும், சில இடங்களில் தலை தெறிக்கக் கண்மூடித்தனமாக
ஓடி வந்ததையும், சில ஆண்டுகள் ஓடி மறைந்தாலும்,
அவற்றை இப்பொழுதும் மனக்கண்ணால் நினைத்துப்
பார்த்தால், சில இடங்களில் எத்தகைய முட்டாள்தன
மான வேலை செய்துவிட்டோம் என்று நினைத்து வருந்து
கிறேன். என்னைப் பலமுறை, பல இடங்களில் ஆண்டவன்
கருணையுடன் காப்பாற்றியதை நினைத்து அவருக்குக்
கண்ணைமூடி நன்றி செலுத்திக்கொண்டிருக்கிறேன்.
''காட்டில் புத்திசாலியின் தைரியம்தான் வேண்டும்
முட்டாள் தைரியம் உயிருக்கே ஆபத்து, அளவுக்கு மேல்
பொறுமையும் வேண்டும்'' என்று கூறினேன்.

நான், ''மானிட இயல் துறை'' பயின்று பட்டம்
பெற்றவனும் அல்லன். ஆயினும், பண்டைய காட்டு மக்க
ளைப் பற்றியும், அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்

தால் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னமே சில காடுகளுக்குச் செல்லத் தொடங்கினேன்.

பேருந்து வசதியும், வண்டி வசதியும் இன்று இருப்பது போல் அன்று இல்லை. நடந்தும், வைக்கோல் ஏற்றிச் செல்லும் லாரியிலும், யானையின் சாணத்தைச் சேகரிக்க யானைக் காடுகளுக்குப் போன லாரியிலும் இரட்டை மாட்டு வண்டியிலும் சைக்கிளுடன் ஏறிச் சென்றேன். (1985ம் ஆண்டிலும் சைக்கிளில் பிரயாணம் செய்கிறேன்.) ஓரளவுக்குப் பொது மக்கள் யாவரும், தெரிந்துகொள்ள வேண்டுமென்ற கருத்துடன், ஒவ்வொரு இனத்தாரைப் பற்றியும் வரலாற்றுச் சான்றுகள் கொடுத்து, எம்மதத்தினருக்கும், எவ்வினத்தினருக்கும் மனம் புண்படாத வண்ணம் நடுநிலையோடு எழுத விரும்பினேன். எனவே, என்னால் இயன்றவரையில் ஒவ்வொர் இடத்திற்கும் நேரில் பயணம் செய்து ஒரு முறைக்கு ஒன்பது முறை, அந்தந்த மக்களைக் கேட்டுச் சந்தேகங்களை நீக்கிக்கொண்ட பின்னரே, சுருக்கமாகவும், தெளிவாகவும் எழுதிய கட்டுரைகள் இவை.

உலகில் மொழியில்லையானால் நாகரிகமே தோன்றியிருக்காது. ஆகையால், காடர்களின் நாகரிகத்தைப் பற்றிய முழு விவரங்களையும் அறிய வேண்டி, அவர்களுடைய மொழிகளைப் பற்றியும் ஏதோ சிறிது தெரிந்து கொண்டேன். அவர்களுடைய உணவுகளை உண்டு பழகிக்கொண்டேன். ஆதிவாசிகளுடைய மொழிகள் எப்படித் தோன்றின என்று அறிய நானும் அவற்றுள் சில மொழிகளைக் கற்றும், எழுதியும் வந்துள்ளேன்.

நான் எந்தெந்த 'ஊர்கள் போனேனோ அந்தந்த ஊர்களில் கிடைத்த அருமையான காட்டுச் சாமான்களையும், மலைவாசிகள், ஆதிவாசிகள், பழங்குடிகள் உபயோகப் படுத்தும் பழமையான் சாமான்களையும் கொண்டு வந்து பல பத்திரிகை ஆசிரியர்களின் காரியாலயத்தில் காட்டி—

அவை பற்றி விளக்கியிருக்கிறேன். அவர்களின் பாராட்டு கள் எல்லாம் என் குறிப்புநோட்டில் இடம் பெற்றிருக் கின்றன. இவற்றை நான் ஏன் எழுதுகிறேன் என்றால் "ஒரு தமிழனால், ஒரு தனி மனிதனால் இப்படிக் காடு களுக்குப் போக முடியுமா?" என்ற எண்ணத்தைச் சிலரு டைய உள்ளத்திலிருந்து நீக்கவேயாகும். ஆண்டவன் கருணையால் இன்றும் காடுகளுக்குப் பிரயாணம் செய் கிறேன். இப்பொழுது என் நூலை வாசியுங்கள்.

வணக்கம்

**பிலோ இருதயநாத்**

2, செயின்ட் லாசர் கோவில் தெரு,
மந்தைவெளி, சென்னை-28

# பதிப்புரை

காட்டில் வாழும் ஆதிவாசிகளையும் பல்வேறு இனத்தவர்களையும் காட்டு மனிதர்களையும் நண்பர்களாக்கிக்கொண்டு அவர்களோடு இரண்டறக் கலந்து அவர்கள் பழக்கவழக்கங்களையும் அவர்கள் வாழ்க்கை முறைகளையும் தெரிந்துகொண்டு அவர்களின் பூர்வீகக் கதைகளை அவர்கள் வாய்மொழியாகவே கேட்டு அவற்றை எல்லாம் அற்புதமாக நூல் வடிவில் எழுதித் தருபவர் திரு. பிலோ இருதயநாத் அவர்கள். இது எல்லோராலும் எளிதாகச் செய்யக் கூடிய செயலன்று.

காட்டில் சிங்கம், புலி, கரடி, யானை, மான், குரங்கு போன்ற மிருகங்களைக் கண்டு பயப்படாமலும், ஊர்வன, பறப்பன இவற்றைக் கண்டு அச்சப்படாமலும், அவைகளின் இயல்பை நன்கு தெரிந்துகொண்டு அவைகளைச் சமாளித்து அடர்ந்த காட்டினுள் புகுந்து காட்டுவாசிகளைச் சந்தித்து அங்குள்ள சகல தகவல்களையும் சேகரிப்பதற்கு மாபெரும் துணிவும் மதிநுட்பமும் வேண்டும்.

காட்டில் வாழும் பழங்குடி மக்களை மட்டுமல்லாது நாட்டில் வாழும் நாடோடி மக்களின் வாழ்க்கை முறைகளையும், பல்வேறு பழக்கவழக்கங்களையும் சம்பிரதாயச் சடங்குகளையும் தெரிந்துகொள்ள அவர்களில் சிலரைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்தி, சில அன்பளிப்புகள் கொடுத்து அம்மக்களின் வாழ்க்கைச் செய்திகளைத் துருவித் துருவி ஆராய்ந்து அவற்றை நமக்கு ''யார் இந்த நாடோடிகள்!'' என்னும் நூலாக அளித்துள்ளார்.

மானிடஇயல் குறித்து பல ஆண்டுகளாக எழுதிவரும் ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களுக்கு மேலும் மேலும் பல பரிசுகளும் பாராட்டுக்களும் கிடைக்க வேண்டும் என விரும்புகிறேன். ஆசிரியர் திரு. பிலோ இருதயநாத் அவர்களை நன்றியறிதலோடு போற்றுகிறேன்.

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்.



மலையின் மேல் பிரயாணம் நடந்து செல்லுதல்
''மாணிக்கங்கள் மண்டிய காடுகள்''
பக்கம்—1



நீலகிரி கோத்தகிரியில் தங்கியிருந்த பொழுது படத்தில்
நடுவில் உள்ள கட்டுரையாசிரியரின் துணைவியாரும்
ஒருநாள் கோத்தர்களின் அழகுக் கொண்டையைப்
போட்டுக்கொண்டார்.
பக்கம்—5



கேரள நாட்டு குருவிக்காரர் இனத்தைப்
போல் காட்சியளிக்கும் செருமர்
''உலகில் வாழும் நரிக்குறவர்கள் இனம்''



குருவிக்காரர் இனத்தில் மாங்காய் (பெயர்)
கூட்டத் தலைவன்
''குருவிக்காரர் வாழ்க்கை''

பக்கம—13

பக்கம்—20



1) லேஸ் 2) கேசவன் நண்பர்கள்
''யார் இந்தக் குருவிக்காரன்''
பக்கம்—40



''ஓலோய்! ராத்குபீட் சோப் மசாலா கூ!''
5 வயது முதல் 60 வயது வரையில் முதுகு மசாலா உண்டு.
பக்கம்—45



‘நல்லூரா’
‘‘தாண்டாளே தோண்டோ மார்க்காதோ’’
பக்கம்—57



‘‘குருவிக்காரி கொடுத்த செல்வம்’’
பக்கம்—66



''குருவிக்காரியிடம் கண்ட தாய்மை''

பக்கம்—80



''கோடை அங்கி''

பக்கம்—91

# 1. மாணிக்கங்கள் மண்டிய காடுகள்

**ப**கல் உச்சி நேரம். பசியோ காதை அடைக்கிறது. தாகம் நாக்கை வாட்டுகிறது. ''தலைக்கு மட்டும் கொஞ்சம் நிழல் கிடைக்குமோ?'' என்று நடந்தேன். ஒரே மணற்பாங்கான இடம். ஆங்காங்கே பாறைகள் மட்டும் தெரிகின்றன.

களைப்பாக இருந்ததால் நானும், வழிகாட்டியும் ஒரு பாறையின் மேல் உட்கார்ந்தோம். என்னுடைய களைப்பையும் நான் அடிக்கடி நாக்கைத் தட்டி ஈரப்பசையாக்கிக் கொள்வதையும் கவனித்தார் வழிகாட்டி.

''உங்களுக்கு எப்பொழுதும் இதைப்போல் காடு சுற்றும் வேலைதானோ? மனைவி மக்கள் கிடையாதோ? நம்ப ஊர் எதுவோ?'' என்று பல கேள்விகளைக் கேட்டார். வழிகாட்டி கேட்ட விதம், விட்ட பெருமூச்சு முதலியவைகளைக் கண்ட எனக்குப் பழைய சிந்தனைகள் நினைவிற்கு வந்தன. அவற்றை அவரிடம் கூறினேன்.

**வாசகர் கற்பனை :**

நெஞ்சையள்ளும் தஞ்சையிலே பிறந்தார் என் தகப்பனார். நீலகிரியில் பிறந்தாள் என் தாயார். நானோ மைசூரில் பிறந்தேன். நீலகிரியும் மைசூரும் சங்ககால முதற்கொண்டே சரித்திரவாயிலாகத் தொடர்புடையவை. அங்ஙனம் நல்ல செந்தமிழ் கமழும் நாட்டில் பிறந்த நான் பலர் உள்ளத்தில் பலவித இனத்தினனாக உருவாக்கப்படுகிறேன். பலர் என் கட்டுரைகளை வாசித்துவிட்டு,

அவர்களின் உள்ளத்தில் நான் மேலை நாட்டினனாகவும், பெண்ணாகவும், பாதிரியாகவும், ஜெர்மானியனாகவும், இமயமலை வாசியாகவும், காட்டு ஜாதியனாகவும் என்னைத் தம் உள்ளத்தில் கற்பனை செய்கின்றனர்.

நான் மாணவனாக இருக்கும் போதே உலகில் பல ஜாதி மக்களின் படங்களைப் பத்திரிகையிலிருந்து சேகரித்து, என் ஆல்பத்தில் ஒட்டி வைத்துள்ளேன். அன்று ஒட்டியவைகள் இன்றும் என்னிடம் இருக்கின்றன.

நாப்பது ஆண்டுகளுக்கு முன் என் தலையில் பூச்சு வெட்டால், சில சொட்டைகள் விழுந்தன. வாலிபப் பருவத்தில் அவை எனக்கு வேதனையாக இருந்தன. பல வைத்தியர்களிடம் தலையைக் காட்டினேன். வைத்தியர்கள் கேட்ட பணத்தைக் கொடுக்க என் ஏழ்மையான நிலை குறுக்கிட்டது.

## குருவிக்காரி ஆசை:

ஒரு நாள் குருவிக்காரி என் வீட்டின் எதிரில் உட்கார்ந்திருந்தாள். அவளது அழகிலும், உடற்கட்டிலும், அவள் கண்களின் பார்வையிலும், அவள் கூத்திலும் மையல் கொண்டேன். ''நானும் ஒரு குருவிக்காரனாக இல்லையே'' என்று வருந்தினேன். அவளும் வருந்தினாள் போலும். என் பார்வையில் இச்சை கொண்டவள் போல், ''ஐயா! பசி'' என்றாள். என்னுடைய ஆகாரத்தில் பாதியை குனிந்து அவளுடைய ''டின்னில் கொட்டினேன். நான் குனியும்போது என் தலைச் சொட்டையைக் கண்டு, ''சாமி உன் மேல் எனக்கு ஆசை. ஆனால், நீ என் ஜாதி இல்லை. அந்த ஆசைக்குப் பதில் உங்கள் தலைச் சொட்டைக்கு ஒரு மருந்தைத் தருகிறேன். அதைப் போடவும்'' என்று கூறிப் பையிலிருந்து ஒரு மருந்தை எடுத்துக் கொடுத்தாள். மூன்று நாட்கள் தடவினேன். சற்று குணம் தெரிந்தது. பத்து நாட்களில் என் தலையில்

மயிர்கள் முளைக்க ஆரம்பித்தன. சுமார் இரண்டு மூன்று வாரங்கள் கழித்து, மறுமுறை அவள் வந்தாள். எனக்கு உண்டான சந்தோஷத்தால் ரூபாய் ஐந்தை அவளிடம் நீட்டினேன். அவள் என்னைக் கடித்துவிடுபவள் போல் பார்த்தாள். அவள் கடித்திருந்தால் நான் சந்தோஷமடைந்திருப்பேன். ஆனால்...! ''பணத்திற்கு நான் மருந்து கொடுக்கவில்லை. உன்மேல் எனக்கு ஆசை. ஆசையால்தான் மருந்து கொடுத்தேன்'' என்று கூறினாள். பணம் வாங்கினால் அவளுடைய குலதெய்வத்திற்குப் பிடிக்காதாம்.

## பானைப் பொங்கல்:

அன்று முதல் நான் குருவிக்காரர்களிடம் பழக ஆரம்பித்தேன். அவர்களது குடும்பச் சம்பிரதாயங்கள், பல ரசமான ரகசியச் செய்திகள் முதலியவைகள் எனக்கு மிகவும் இன்பத்தைக் கொடுத்தன. அவர்களது சில செய்திகள் எனக்கு ஆச்சரியமாக இருந்தன. நான் குருவிக்காரர்களிடம் சேகரித்தச் செய்திகளை ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்தேன். அதில் சில செய்திகளை உங்களுக்குக் கூறுகிறேன்.

''குருவிக்காரர்கள், ''ஏழுப் பானைப் பொங்கல்'' இடுவார்கள். ஒன்றின் மேல் ஒன்றாக ஏழு பானைகளை அடுக்கி ஒவ்வொன்றிலும் அரிசியும் தண்ணீரும் வைப்பர். அவற்றை அடுப்பின் மேல் வைத்துத் தீயிட்டால் அடிப்பானையிலிருக்கும் தண்ணீரும் அரிசியும் பொங்காது. மேல் பானையிலிருக்கும் அரிசியும் தண்ணீரும் தான் பொங்கி வேக ஆரம்பிக்கும்.

திருமணமானவள் மேல் கணவன் சந்தேகப்பட்டால் பஞ்சாயத்தில் காய்ச்சிய இரும்பை அவன் கையில் எடுத்துப் பஞ்சாயத்து வட்டத்தை ஒரு சுற்று சுற்றி வர வேண்டும். இதைப்போல் பல செய்திகளைக் கேட்டும்

பார்த்துமிருக்கிறேன். நகர மக்களுடன் சேர்ந்து வாழும் இவர்களிடமே இவ்வளவு நல்ல குணங்களையும் வியப் புண்டாகும்படியான செய்திகளையும் காணும்போது, மாக்களுடன் கலந்து மாக்களாக வாழும் காட்டு மக்க ளின் குணங்கள் எப்படி இருக்குமோ? என்று அடிக்கடி சிந்தனை செய்வதுண்டு.

## நண்பர் பரிவு:

இந்தச் சிந்தனைகளுடன் ஒரு நாள் பல ஊர் மக்களின் படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதற்குள் என் நண்பர் விவேகானந்தம் என்னைத் தேடிக்கொண்டு வந்தார். என் முகவாட்டத்தைக் கண்டு கேட்டார்.

என் ஆல்பத்தைக் காண்பித்து ''இந்த ஜாதி மக்களை எல்லாம் என் ஆயுள் காலத்திற்குள் என்னால் காண முடி யுமா? என்ற கவலைதான் எனக்கு இருக்கிறது!'' என்று கூறினேன். ''உங்களுக்கு ஊக்கமிருக்கிறது. ஆகையால் நீர் கட்டாயம் எல்லா இன மக்களையும் ஊர்களையும் காண் பீர்! வெகு சீக்கிரம் உலகம் முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்வீர்'' என்று கூறினார்.

என் நண்பர் வாழ்த்தியதற்கு ஏற்ப என்னுடைய வாழ்நாளில் முதன் முதலில் பழகிய மலை ஜாதி மக்கள் கோத்தர்கள் தான். நீலகிரியில் இவர்கள் இல்லங்களில் பழ கிய நாட்கள் மிகமிக இன்பமான நாளாக நான் கருதிய துண்டு.

கோத்தச்சிகள் போடும் கொண்டைகள் மிக்க அழகு உடையன. ஏழு நாட்கள் வரையில அக்கொண்டை கலைந்து போகாமலிருக்கும். இவர்கள் முடியில்லாமல் புடவை அணிவதே ஒரு தனி கலை. பூசாரியாகத் தேர்ந்து எடுக்கப்படுபவர், சுமார் இரண்டு குண்டு எடையுள்ள உருளையான கல்லை ஒரு விரலால் தூக்கித் தோளின்

மேல் வைத்துப் பின்புறமாகத் தள்ளுகிறார். அக்காட்சி யைக் கண்டு, என் உடல் சிலிர்க்கச் செய்தது.

என் மனைவியுடன் அவர்களின் குடிசையில் தங்கி இருந்தபோது, என் மனைவியும் கோத்தச்சிகளின் கொண்டையைப் போட்டுக்கொண்டாள். மற்றொரு நாள் உதகையில் தோதுவர்களின் இல்லத்தில் சில நாட் கள் தங்கியிருந்தேன். அங்ஙனம் தங்கியிருந்தபோது, ஆண் கள் பந்தயம் பேசிக் கொண்டு, பாய்ந்துவரும் எருமைக் கடாவின் கொம்பைப் பிடித்து நிறுத்துகிறார்கள். அக் காட்சியைக் கண்டதும் எனக்கு மிகவும் அச்சம் ஏற்பட் டது. அந்த விளையாட்டால் பல ஆண்கள் கடாவுக்குப் பலியாவதுமுண்டு.

இங்ஙனம் திருமணத்திற்குப் பின் நான் அடிக்கடி நீல கிரிக்குச் செல்வதுண்டு. ''நீலகிரி ஜில்லாவில் தொதுவர் களும் படகர்களும்தான் வாழ்கின்றனர்'' என்பது கற்ற பலருடைய எண்ணம். ஆனால் நீலகிரி ஜில்லாவில் பூர் வீகக் குடிமக்கள் சுமார் பதினைந்து பேர்களுக்கு மேல் இன வித்தியாசங்களுடன் காட்டிலும் மலையின் உச்சி யிலும் வாழ்கின்றனர்.

நீலகிரியிலிருந்து அடிக்கடி தென்னாடு முழுவதும் பல காடுகளுக்கு நான் பிரயாணம் செய்வதுண்டு.

அங்ஙனம் காட்டுப் பிரயாணத்தில் கிடைத்த பல செய்திகள் இவை:-

## தனிக்கலை:

''காடுகளுக்குப் பிரயாணம் செய்வதற்கு முன் பிரயா ணத்திற்கு வேண்டிய சுமார் இருநூறு சாமான்களை என் குறிப்புப்படி எடுத்துக் கொள்ளுவேன். தக்க வழி காட்டியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு காட்டினுள் பிரயாணம் செய்யவேண்டும். வழிகாட்டியைத் தேர்ந்

தெடுப்பதே ஒரு தனிக்கலை. வழி தெரியாத வழிகாட்டியைத் தேர்ந்தெடுத்தால் நமக்குக் காட்டில் பல இன்னல்கள் உண்டாகும் என்பது திண்ணம். காட்டைக் கண்டதும் என்னுடைய கடைசிப் பிரார்த்தனைகளை எல்லாம் சொல்லி விடுவேன். ஏனென்றால் நாங்கள் போய்ச் சேர்வதும், திரும்புவதும் நம்பிக்கை இல்லாததோர் கட்டம்.

வழிகாட்டி அல்லது சிக்காரி அல்லது காட்டில் அடிக்கடி மரம் வெட்டிப் பழக்கமுள்ளவர்கள் தவிர, புதிதாகத் துப்பாக்கி எடுத்துக்கொண்டு காட்டினுள் அடி எடுத்து வைக்க யாராலும் முடியாது என்பது திண்ணம். யாருடைய உதவியுமில்லாமல் துப்பாக்கி இருந்தால் போதும் என்ற எண்ணம் முற்றிலும் குற்றமே. துப்பாக்கியுடன் காட்டுக்குள் நுழைந்தாலும் கண்டபடி துப்பாக்கியை உபயோகப்படுத்த முடியாது.

காட்டில் ஒற்றையடிப் பாதையில் நடக்கும் போது தலைக்கு மேல் உள்ள மரக்கிளைகளையும், பாதையின் ஓரங்களிலும், பெரிய பாறைகளின் இடுக்குகளையும் கட்டாயம் கவனித்துத்தான் நடக்க வேண்டும். மேலும். ஒற்றையடிப் பாதையில் நடக்கும்போது, இரு பக்கங்களிலுமுள்ள செடி கொடிகளை வேட்டிப் பாதையில் போட்டுக் கொண்டே தான் போக வேண்டும். ஏனென்றால் நமக்குப் பின்னால் எந்த மிருகமும், நம்மைத் தொடர்ந்து வராது. எவ்வாறெனில் வெட்டிய அச் செடிகளில் மனிதனுடைய வாடை அடிப்பதால், அந்த மிருகங்கள் திரும்பிப்போய்விடும்.

## காட்டுப் பயணம்:

“புதிய தழைகள் ஏன் விழுந்திருக்கின்றன. ஏதோ ஒரு பெரிய மிருகம், நமக்கு முன்னால் போயிருக்கிறது” என்று கருதி எந்த மிருகமும் நம்மைத் தொடர்ந்து

வராது. மற்றச் சிறுசிறு விஷ ஜந்துக்களும், நாம் வெட்டும் ஓசையில் ஒற்றையடிப் பாதையில் இருந்து விலகி ஓடிவிடும்.

இந்த ஏற்பாடுகளுடன் நடப்பது அவசியமில்லை என்பர் சிலர். தண்ணீரில் விழுந்தபின்தான் நீந்தத் தெரிந்திருப்பது எவ்வளவு முக்கியம் என்பதை ஒருவன் உணர முடியும். அதைப் போலவே ஆபத்து ஏற்பட்ட பின்தான் இதன் அவசியம் விளங்கும். இதனால் நான் அடைந்த அனுபவ நன்மைகள் பற்பல.

இவ்வளவையும் கவனித்துக் கொண்டு காட்டில் பிரயாணம் செய்யவேண்டும். ஒற்றையடிப் பாதையில், நாம் நடக்கும் ஓசை தவிர, ''சல சலா''வென்று ஓசை கேட்டதும், உடனே எங்கள் வயிறு ''ப்ரூக்ஸ் லெக்ஸ்'' சாப்பிட்டதைப் போல் மாறிவிடும்.

இவ்வளவு வேதனையுடன் கடந்து சென்று, காடர்களின் குடிசைகள் தெரிந்ததும், உடனேயே அவர்களது குடிசைகளை நாடிச் செல்லக்கூடாது. அவர்களுக்கு குரல் கொடுத்த பின் தான் நாம் செல்லவேண்டும். ஏனென்றால், சிலர் வீட்டில் வேட்டை நாய்களையும், சண்டையிடும் எருமைகளையும் வளர்ப்பார்கள். அவைகளால் நமக்கு ஆபத்து ஏற்படலாம். இவ்வாறு சிரமத்துடன் சென்ற எனக்கு ஒரு சமயம் ஈரமான தரையின் மேல் காட்டுப்புல்லை விரித்து அதன்மேல் படுக்கும்படியான நிலை ஏற்பட்டது. மறுநாள் காலையில் எனக்குக் கடுமையான ஜலதோஷம் பிடித்துக் கொண்டது. நான் படும் வேதனையை கவனித்த ஒரு காடச்சி, ''இந்தாங்கோ இதை ஆகாரத்துடன் கடித்துச் சாப்பிட்டால் நாளைக்கு, 'சளி' இருக்காது'' என்று ஒரு வெங்காயத்தைக் கொடுத்தாள். அவள் கொடுத்த பொருள் விஷமில்லாவிட்டாலும், அதை சாப்பிட்டால் உடனே, ஜலதோஷம் அதிகமாகுமென்பது பலருடைய கருத்து. ஆகையால், ''ஐயோ! இது ஜலதோஷத்தை அதிகமாக்குமே'' என்று கூறினேன்.

## ஜலதோஷத்துக்கு மருந்து:

''கற்றவர்கள் எல்லாம் இங்ஙனம் கூறினால் எப்படி?'' என்று காடர் மொழியில் கூறினாள்.

அவளைத் திருப்தி செய்ய வேண்டுமே என்று சாப்பிட்டேன். என்ன ஆச்சரியம்! மறுநாள் எனக்கு ஜலதோஷம் அடியோடு நின்றுவிட்டது. நான் சென்னைக்கு வந்ததும் ஜலதோஷத்திற்கு எனக்குக் காடத்தி கொடுத்த அந்த மருந்தைப் பற்றிய பல வைத்தியப் புத்தகங்களில் ஆராய்ச்சி செய்யும்போது ''ஒரு சிறிய வெங்காயத் துண்டு ஜலதோஷத்தைக் குணப்படுத்தும்'' என்று ஜே அண்டு ஜேடீசேன் (ஐதராபாத்-பக்கம் 3 வரி 19) என்ற வைத்திய நூலில் வாசித்தேன். காட்டில் நல்ல வைத்திய முறைகளும் நல்ல மூலிகைகளும் இருக்கின்றன. ஆனால் அவைகள் நமக்குத் தெரியாமல் நம்முடைய காலடியில் மிதிக்கப்படுகின்றன.

## காட்டு எருமை அபாயம்:

சிறு காட்டினுள் நடந்து சென்றால் திடீரென்று குளம்புகளின் ஓசைகள் கேட்கும். அங்ஙனம் ஓசைகள் கேட்கும் திசையை நோக்கியே நாம் ஓடவேண்டும். குளம்புகளின் ஓசைகள், மலைகளில் ''எதிரொலி'' (எக்கோ) செய்வதால் அவை கேட்கும் திசைக்கு எதிர்த் திசையில் ஓடினால், காட்டெருமைகளுடன் மோத வேண்டியவர்களாவோம். ஆகையால் அவ்விதமான சந்தர்ப்பத்தில் நம்முடைய காதைத் தரையில் வைத்து கேட்கவேண்டும். அப்பொழுது காட்டெருமைகள் எத்திசையிலிருந்து ஓடி வருகின்றன என்பது நன்றாகத் தெரியும். சாதாரணமாய் இவ்விதமான சந்தர்ப்பத்தில் காடர்கள், சுமார் இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் எந்த மிருகம் வருகிறது என்று மோப்பத்தில் கண்டு சொல்லி விடுவார்கள். சில சமயங்களில் காட்டில் நடந்து செல்லும்போது தூரத்

தில் இடியால் தாக்குண்ட எரிந்த அடிமரங்கள் போல் கறுப்பாகத் தோன்றும்.

அவ்விதமான சந்தர்ப்பத்தில் நாம் சற்று நிதானித்து அந்த அடிமரத்தை ஆராய்ந்துதான் மேலே நடக்கவேண்டும். ஏனென்றால், அடிமரம் நம்மைச் சேர்த்துப் பிடித்துக் கொள்ளும். உடனே வளைந்து அது நம்முடைய புட்டத்தைதான் கடித்துத் துண்டாக எடுத்துவிடும். அப்பொழுதான் நமக்கு, ''அது அடிமரமில்லை—கரடி'' என்று தெரியும்.

## கரடிப் பிடியிலிருந்து தப்ப வழி:

இரண்டு கழிகள் இருந்தால் நாம் கரடியிடமிருந்து தப்பி ஊருக்குள் வந்துவிடலாம். கழியில் ஒன்றைக் கரடியிடம் கொடுத்துவிட வேண்டும். மற்றொன்றை நாம் கழியாட்டம் ஆடுவதைப்போல் ஆடிக்கொண்டே ஊருக்குள் கரடியை அழைத்து வந்து விடலாம். நாம் எப்படிக் கழியாடுகிறோமோ, அப்படியே கரடியும் விளையாடும் என்பதில் சந்தேகமில்லை.

## காட்டில் மகப்பேறு:

இன்னொரு காட்டில் வாழும் மக்கள் தம்முள் ஒருவன் மனைவி பிரசவ வேதனைப்படும்போது, அவளைத் தூக்கிச் சென்று அவர்களது பாடியின் எல்லையைக் கடந்து காட்டில் தனிக் குடிலொன்று அமைத்து—அதில் அவளுக்குப் பத்துப் பதினைந்து நாட்களுக்கு வேண்டிய தண்ணீர், ஆகாரம் முதலியவைகளை வைத்து விடுவார்கள். அவள் தானே தனிமையில் குழந்தையைப் பெற்று, தன்னைச் சுத்தம் செய்துகொண்டு, குழந்தைப் பிறந்த ஏழாம் நாள், பாடியின் எல்லையில் கைக்குழந்தையுடன் வந்து நிற்பாள்.

பாடியிலுள்ள ஆண்களும் பெண்களும் மேளவாத்தியத்துடன் பாடிக்குள் அவளை அழைத்து வருவார்கள்.

அன்று பாடியில் வாழும் மக்கள் எல்லோரும் சேர்ந்து பறையடித்துக்கொண்டு ''குரவைக் கூத்து'' என்று ஆட வரும் பெண்டிரும் தம்முட் கைகோத்து ஆடுவார்கள்.

பண்டைக் கால ஆதிவாசிகளின் கூத்துக்களின் வளர்ச்சியே பிற்காலத்தில் கோவில்களில் சிற்பங்கள், கோவில் நடன மாதர்கள் நடனக்கலை முதலியவைகளாக உரு வெடுத்தன என்று சிந்திக்க வேண்டி வருகிறது.

## அதிசயப் பழக்கம்:

காட்டில் வாழும் மற்றொரு இன மக்களில் மாமனார் மலஜலம் கழித்துவிட்டு வந்ததும், மருமகள் தான் செம்பில் தண்ணீர் எடுத்து குழந்தைகளுக்குச் சுத்தம் செய்வதைப் போல் சுத்தம் செய்யவேண்டும். இப்பழக்கம் இன்றும் உண்டு.

பண்டைக் காலத்தில் மீன்களிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும், பறவைகளிடமிருந்தும் நம் முன்னோர்கள் நீந்தவும், நடக்கவும், ஓடவும், குதித்துத் தாவவும் கற்றுக் கொண்டார்கள் என்பர் ஆராய்ச்சியாளர்கள். அதை உண்மையாக்க இன்று விலங்குகளைப்போல் இறைச்சியைக் கடித்துக் கிழிக்க, ஆனைமலைப் பகுதியில் வாழும் மக்கள் தங்கள் பற்களை அரத்தால் கூர்மையாக்கிக் கொள்ளுகின்றனர்.

ஒரு முறை நான் காட்டில் நடந்து செல்லும்போது, அடிமரமென்று அருகில் சென்றேன். வழிகாட்டி கொடுத்த குரலில் நடுங்கிப் போய்ப் பார்த்ததில், அது அடிமரமில்லை. அது ஒரு பெரிய மலைப்பாம்பு என்பதைத் தெரிந்துகொண்டேன்.

இதைப் போலவே சில ஆண்டுகளுக்கு முன் நானும் ஒரு கசவனும் காட்டில் அலைந்தபின் ஒரு மரத்தின்

மேல் உட்கார்ந்து ரொட்டியைத் தின்ன ஆரம்பித்தோம். அப்பொழுது கசவன் கையிலிருந்த கத்தியை மரத்தில் குத்தினான். உடனே அந்த மரத்திலிருந்து குருதி ''குபு குபு'' வென்று வெளிவந்தது. உடனே எடுத்தோம் மூட்டைகளை, பிடித்தோம் ஓட்டம். சாதாரணமாய்க் காட்டில் குரங்குகள் இருந்தால் அவற்றின் எதிரில் நம் வாயில் ஒன்றையும் போடக் கூடாது.

## குரங்கின் சாதனை:

ஏனென்றால் குரங்குகள் ஒன்றாகச் சேர்ந்து, ஒரு காட்டில் ஒரு புலியையே கொலை செய்து விட்டதைக் கேள்விப்பட்டு இருக்கிறேன். குரங்குகள் மனம் வைத்தால் ஓர் ஊரையே அழித்துவிடும்.

மற்றொரு நாள் நானும் கோத்தர் பிச்சன் அவர்களும் வேட்டைக்குச் சென்றோம. கரடி வரும் என்று ஒரு மரத் தின் மேல், உட்கார்ந்திருந்தோம் மங்கலான ஒளியில் இரு உருவங்கள் வந்துவிட்டன. அப்பொழுது எதை முதலில் சுட்டாலும், நமக்கு ஆபத்து உண்டாகும். ஆகையால் வெகு நேரம் சுடாமல் காத்திருந்தோம். கடைசியில் இரண்டு விலங்குகளில் ஒன்று காட்டுப்பன்றி, மற்றொன்று புலி என்பதைத் தெரிந்து கொண்டோம். ஆகையால் எதை முதலில் சுடுவதென்று சிறிது நேரம் யோசித்தார் பிச்சன். பிறகு பன்றியைச் சுட்டார். பன்றி தனக்குப் புலியால்தான் ஆபத்து உண்டானது என்று நினைத்துக் குண்டடி பட்ட தும் அது உடனே புலியின் மேல் பாய்ந்து, கோரைப்பற் களால் புலியைக் குத்திக் கிழித்து விட்டது. இக்காட்சி என் சுய நினைவையே இழக்க வைத்துவிட்டது.

இவ்வாறு பல்வேறு சமயங்களில், காடுகளில் எனக் கேற்பட்ட அனுபவங்கள் யாவற்றையும் ஈண்டு உங் களுக்குக் கூறுவதென்றால், நீங்கள் இந்தப் பாறையின் மேல் கற்சிலையாகி விடுவீர்கள் போல் தோன்றுகிறது.

என் அனுபவத்தில் ஏற்பட்டவைகளில் சிலவற்றைக் கூறி னேன். எல்லாவற்றையும் கூறாமைக்கு மன்னிக்கவும்'' என்று என்னுடைய செய்திகளை வழிகாட்டியிடம் கூறி னேன். அவரும் பெரு மூச்சுவிட்டார். பிறகு சிந்தனை யுடனேயே எழுந்து இருவரும் செடியும் புதரும் நிறைந் திருந்த மலையின் மேலே நடக்க ஆரம்பித்தோம்.

# 2. உலகில் வாழும் நரிக்குறவர்கள் இனம்

"ஓ ஆயா! ராம—ராம! என்று கூறிக் கொண்டு இன்று இந்தியாவில் பல பகுதிகளில் குரங்கை வைத்துக் கொண்டு கூத்தாடும் நரிக் குறவர்களைக் கண்டு ரசிக்காத வர்கள் யாருமிலர். மேலும், இன்று பெரிய பெரிய அலு வலகத்தில் ஏதாவது விழாக்கள் நடைபெற்றால், அங்கு நடைபெறும் மாறுவேடப் போட்டி வேடிக்கைகளுக்கு, இந்த நரிக் குறவர் உடைகளை அணிந்துகொண்டு மேடையில் வேடிக்கை காட்டுவார்கள்.

இந்தியாவில் வாழும் இந்த நாடோடி மக்களுக்குத் தனி மன்றம் ஒன்றுமில்லை. ஆனால், மேலை நாடுகளில் வாழும் நாடோடி மக்களுக்குத் தனி மன்றங்கள் இருக் கின்றன.

மேல் நாடுகளில் இந்த நாடோடி மக்களுக்கு 'ஜிப்சி கள்' என்று பெயர். ஆனால் ஜிப்சிகளைப் பற்றி ஏராள மான கதைகளும், கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. மேல் நாடுகளில் வாழும் எல்லா ஜிப்சிகளுக்கும் தாயகம் இந்தியா என்பது சரித்திர உண்மையாகும். அறிஞர்கள் மேல் நாடுகளிலிருக்கும் ஜிப்சிகளின் மொழியியலையும், கலாச்சாரத்தையும் ஆராய்ந்த பிறகேதான், ஜிப்சிகளின் ஆதிகாலத் தாயகம் இந்தியா என்று ஒப்புக் கொண்டார் கள். இந்த நரிக் குறவர்களைப் பழைய காலத்தில் ஓர் எல்லைக்குள் இருக்க வேண்டுமென்று கட்டுப்பாடு செய் தார்கள். ஆனால் அவர்கள் அந்தக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருக்க மறுத்துவிட்டார்கள்.

''ஜிப்சி நடனம்'' என்பது என்ன? நாடோடிகளாகிய நரிக் குறவர்கள் ஆடும் கூத்தை, நடிகர்கள் மேடையில் ஆடினால் அதுவே ''ஜிப்சி டான்ஸ்'' என்பார்கள்.

தங்களுடைய பாட்டாலும் நடனத்தாலும் இந்தியக் கலாச்சாரத்தை மட்டுமல்லாமல் மேல் நாடுகளின் கலாச் சாரத்தையும் ஊட்டி வருகின்றனர்.

நரிக் குறவர்களால் ஓர் இடத்தில் நிலையாக இருக்க முடியாது. காரணம் அது அவர்களின் பழக்கமாகும். இந்த நாடோடிக் குறவர்கள், மேலை நாடுகளுக்கு இந்தி யாவிலிருந்து எப்பொழுது போனார்கள் என்பதைக் குறிப் பிட அவர்களிடம் போதுமான குறிப்புகள் கிடையா. ஆனால் இந்த இந்திய ஜிப்சிகளைப் பற்றிப் பல கவிஞர் கள் பாடிய பாடல்களில் இவர்கள் இடம் பெற்று இருப் பதால் இவர்கள் எப்பொழுது அமெரிக்கா, ஜெர்மனி, இரஷ்யா முதலிய நாடுகளுக்குச் சென்றார்கள் என்பதை நிர்ணயிக்கலாமன்றோ!

மேலும் இந்த நாடோடி ஜிப்சிகள், மேல்நாடுகளுக்குச் சென்றாலும், இன்னும் இந்தியாவின் கதையையும், கலாச் சாரத்தையும், பழக்க வழக்கங்களையும், இந்திய மொழி களில் 40 சதவீதத்தையும் கைக்கொண்டுள்ளனர். மேலும், இந்த நரிக்குறவர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் இந்தியா வில் பல இன மக்களாக வாழ்வதை நாம் தினம் தினம் பார்த்தாலும் அவர்களுக்குள்ளிருக்கும் ஒற்றுமை நமக்கே தெரியவில்லை அல்லவா?

1) மயில் இறகைக் கையில் ஏந்தி நாடோடிகளாகத் திரியும் முகம்மதியர்கள். இவர்களைப் பாமர மக்கள் ''மயில்துலுக்கர்'' என்பார்கள்.

2) 'அரி குறிக்கார்' இவர்கள் நாடோடிகளாகக் குறி கூறிக்கொண்டு திரிகின்றவர்கள்.

3) நாடோடி மராட்டியா''—இவர்கள் இந்தியாவில் பல பகுதிகளில் கூடாரம் அடித்துக்கொண்டு, வைத்தியம், சாலா, பிசினி, லேகியம் முதலியவைகளை விற்பனை செய்கின்றனர்.

4) பொந்தலூர் (5) மகதூர் இவர்கள் நாடோடிகளாக எல்லா வேலைகளையும் செய்வார்கள்.

6) சிங்கு என்பவர்கள் குடுகுடுப்பை கருவி வைத்துக்கொண்டு முதல் ஜாமத்தில் ''நல்லகாலம்'' சொல்லும் நாடோடியர்.

7) நாடோடி இராஜபுத்தூர்:—இவர்கள் நாடோடிகளாகப் பல பகுதிகளில் வாழ்ந்தாலும், இவர்களுடைய தாயகம் இமயமலைப் பகுதி என்று கூறுகின்றனர். இவர்கள் எல்லோரும் ஒரே நாடோடி இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், பல பெயரில் பல ஊர்களில் வாழ்ந்து பல மொழிகளைக் கலந்து பேசுகின்றனர். ஆனால் காலப் போக்கில், போக்குவரத்து சாதனங்கள் சரியாக இல்லாத பண்டைக்காலத்தில், இவர்களிடையே ஒருவருக்கொருவர் தொடர்பில்லாமல், பழக்கவழக்கம், மொழி எல்லாம் மறைந்து புதியவை நுழைந்துவிட்டன. ஆனால் பொதுவாக இவர்கள் எல்லோரிடத்திலும் தொழில்கள் மட்டும் ஒரேவிதமாக இருப்பதைக் கண்டேன். முயல், பூனை, மான், குள்ளநரி, காடை முதலியவைகளை வேட்டையாடுவது, வைத்தியம் செய்து மருந்துகள் கொடுப்பது, வாசனைத் திரவியங்கள் விற்பனை செய்வது முதலிய பழக்கங்கள் எல்லாம் ஒன்றாகவே இருக்கின்றன.

ஐரோப்பாவில் வாழும் ஜிப்சிகள் தங்கள் தாயகம் இந்தியா என்பதை மறந்து, எகிப்துதான் தங்கள் தாய் நாடு என்று எண்ணியிருந்தனர். ஆனால் 1763ஆம் ஆண்டுக்குப் பிறகு இவர்களுக்கும் தாயகம் இந்தியாதான் என்று பல அறிஞர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். இவர்

களின் சரித்திரங்களை அறிவதற்கு எல்லா நாடுகளிலும் இவர்களின் நாடோடிப் பாடல்கள் உதவி செய்கின்றன. அப்படிப்பட்ட நாடோடிப் பாடல்களிலொன்று தமிழகத்தில் இன்றும் பழக்கத்தில் இருந்து வருகிறது. குறவன் குறத்திகளுடைய வாழ்க்கையைப் பற்றிய பாடல்கள் தமிழில் பல உள்ளன. பின்வரும் குறத்தியின் நாடோடிப் பாடல் ஒன்று.

''கறுத்த மச்சான் பக்கத்திலே மாடப்புறா குஞ்செடுக்க மையுண்டோ உன்னிடத்தில்''—என்று அவள் பாடுகிறாள்.

அதற்குப் பதிலாக இவன் ''மாடப்புறா குஞ்செடுக்க மையில்லை என்னிடத்தில், மான் குட்டி உன்னைக் குத்த மையுண்டு என்னிடத்தில'' என்று கூறுவதைக் காண்பீர்.

இதைப்போல் நாடோடி ஆதிவாசிகளிடத்தில் துருவித் துருவி ஆராய்ந்தால் பல நாடோடிப் பாடல்களைக் காண லாம். மேலும் இன்றும் சென்னையின் சுற்றுப்புறங்களி லிருக்கும் மைதானங்களில் சில நாடோடியர்கள் சில சம யங்களில் வந்து கூடாரமடித்துக் கொண்டு தங்குவதைக் காணலாம். அவர்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற் குப் பிரயாணம் செய்யும்பொழுது அவர்களுடைய சாமான்கள் கூடாரம் முதல், கொம்பு வரையிலும், சமை யல் சாமான்கள் முதல், துணிமணி எல்லா சாமான்கள் வரையிலும், நாய் முதல் முயல், கோழி, ஆடு வரையிலும் எல்லாவற்றையும் அதற்கென்று வளர்க்கும் கழுதையின் மேல் அழகாகச் சுமத்திக் கட்டிக்கொண்டு போவார்கள். மாட்டுவண்டி முதல் ஆகாய விமானம் வரையில் பிரயாண வசதிகள் இருக்கும் இக்காலத்தில் இந்த நாடோடிக் கும்பல் மட்டும் நடந்தே பிரயாணம் செய்கின்றதைக் காணும் போது, இப்பழக்கம் இன்று நேற்று உண்டானதில்லை. சுமார் பல்லாயிரமாண்டுகளாக இவர்களிடம் இருந்து வரு வதற்குச் சரித்திரம் சான்று கூறுகிறது. ஐந்தாவது

நூற்றாண்டில் பஹ்ராம்குர் பாமர மக்களுக்குப் பொழுது போக்கு ஒன்றுமில்லை என்று நினைத்து அவர்களின் குறையை நீக்க, ''இந்தியாவிலிருந்து பல இனப் பிரிவாக வாழும் சுமார் 10 ஆயிரம் நாடோடிப் பாடகர்களையும் நடனக்காரர்களையும் வரவழைத்து அவர்களுக்குப் பல கால்நடைகள், தானியம், நிலம், எருதுகள், எருமைகள், சவாரிக் கழுதைகள் முதலியவைகள் கொடுத்து அவர் களுக்கு இடவசதியும் செய்து கொடுத்து ஏழை எளியவர் களின் பொழுதுபோக்குக்காகச் சங்கீதம், கழைக் கூத்து, தெரு சர்க்கஸ் முதலியவைகள் செய்து காட்டும்படி ஏற் பாடுகள் செய்தார். ஆனால் அந்த நாடோடிகள் என்ன செய்தார்கள் தெரியுமா? கால்நடைகளை வெட்டித் தின் றார்கள். தானியங்களையும் தின்று தீர்த்தார்கள். அவர் களுக்குக் கொடுக்கப்பட்ட எல்லா வசதிகளையும் விற்றும், தின்றும் தீர்த்த பிறகு பழையபடி நாடோடிகளாகவே ஓட ஆரம்பித்தார்கள்'' என்று ஷா—நா மாவில்—பிர் தூசி எழுதியுள்ளார். அன்று முதல் இன்று வரையிலும் இந்த நாடோடிப் பழக்கமுள்ள ஆதிவாசிகளை ஓரிடத்தில் தங்க வைக்க இயலாது என்பது நான் அனுபவத்தில் கண்ட உண்மை. இரண்டாவது உலக மகா யுத்தத்தில் ஹிட்லரின் ஆயுதங்களுக்கும் வெடிகளுக்கும் இரையான ஜிப்சிகள் ஆயிரமாயிரமாவர். குறவர்களிடத்தில் ஓர் அழகான பெண் இருந்தால் அவளை, மற்றவர்களுக்கு அடிமையாக விற்றுவிடுவார்கள். இப்பழக்கம் இன்றும் சென்னையிலும், மற்ற நகரங்களிலும் இருக்கின்றது. ஆனால் இப்படி அடிமைகளை விற்பனை செய்யும் பழக்கம், இன்று நேற்று உண்டானது அன்று. சுமார் 8000 ஆண்டுகளுக்கு முன் பிருந்தே அடிமைகளை விற்பனை செய்யும் பழக்கம் உல கில் பல பகுதிகளில் இருந்து வருகிறது. ஆனால் முதன் முதலில் அப் பழக்கம் ஐரோப்பாவில்தான் தொடங்கியது. பிறகு அரேபியா, பாகிஸ்தான் வழியாக இந்தியாவுக்கும் பரவி, அன்று முதல் இன்று வரையில் மறையாமல் இருப்ப தைக் கண்டால் ஆச்சரியமாக இருக்கின்றது அல்லவா?

பண்டைக்காலத்தில் அடிமைகளையும், நாடோடிகளை யும் விற்பனை செய்யும் மன்றங்களே உலகில் பல இடங்க ளில் இருந்தனவென்று விவிலிய சரித்திரம் சான்று கூறு கின்றது.

இந்தக் குறவர்கள் இனம் இன்று தமிழ்நாட்டில் குருவிக்காரர்கள் அல்லது நரிக்குறவர்கள் என்றும் கேரளாவில் "செருமர்" என்றும், புனாமா கடற்கரையில் வாழும் ஆதிவாசிகளைப் போல் நாடோடியினமாக விளங்குகின்றது. மேலும் குறப் பெண்கள் தங்கள் பற்களைப் பொடி வைத்துக் கறுப்பாக்கிக் கொள்வதைப் போல் ஆப்பிரிக்காவில்—விக்டோரியா ஏரிக்கரையில் வாழும் "லூபோ" என்னும் நாடோடி ஆதிவாசிகள் தங் கள் பற்களைக் கறுப்பாக்கிக் கொள்ளுதலும், அரத்தால் இராவிக் கொள்ளுதலும் ஆகிய பழக்கமுடையவர்களா யுள்ளனர். மேலும் இந்த நரிக்குறவர்கள் கருஞ்சேவல் பலி கொடுத்துக் குலதெய்வத்திற்குப் பூஜை செய்தால் வியாதி, தொத்து நோய், பேய் பிசாசு பிடித்தல் முதலிய வைகள் குணமாகும் என்று நம்புகின்றனர். மூட நம்பிக்கை என்பது நம் நாட்டில் மட்டுமன்று. மேலை நாடுகளில் நம் நாட்டைவிட மோசமாக இன்றும் இருக் கின்றது. மேற்கு ஜெர்மானியில் ஆல்ப்ஸ் மலைப்பகுதி யில் உள்ள "ஏபர்டார்ப்" என்ற இடத்தில் ஐந்தாண்டு களுக்கு ஒரு முறை விலங்கு மனிதர்களின் "களி நடனம்" நடைபெறும்.

அந்த மலைப் பிராந்தியத்தில் வளரும் ஒருவித மரங் களின் மூலம் செய்யப்பட்ட மர ஆடைகளை அணிந்து கொண்டு பலர் ஆனந்த நடனம் செய்வார்கள்: **1635** ஆம் ஆண்டு அப்பகுதி மலைப் பிராந்தியங்களில் "பிளேக் நோய்" பயங்கரமாகப் பரவிய போது புராதன காலத் திலிருந்து இவர்களின் முன்னோர்கள் பேய், பிசாசுகளை விரட்டுவதற்காக ஆடிய "விலங்கின் மனிதர் நடனம்" முறையை மீண்டும் கொண்டுவந்து வழக்கமாக ஐந்

தாண்டுகளுக்கு ஒருமுறை ஆடி வருகின்றனர். சாதாரண மாய் இந்த நரிக்குறவர் இனத்தைச் சேர்ந்த நாடோடி மக்கள் இரவில் கனவில் காண்பது எல்லாம் மிகவும் உண்மையாக நடைபெறும் என்று நம்புகின்றனர். கன வில் எலியைக் கண்டால் விரோதிகள் ஏற்படுவர் என் றும், கிழவனைக் கண்டால், செல்வம் ஓடிவரும் என் றும், தன்னை நோக்கிப் பாம்பு வந்தால் காரியம் வெற்றி என்றும், தன்னைப் பிச்சைக்காரனைப் போல் கண்டால், எதிர்காலத்தில் பணக்காரனாகலாமென்றும் இன்றும் நம்பி வருகின்றனர்.

ஆனால் இந்த நாடோடி மக்கள் பண்டைக் காலத்தில் எப்படி இருந்தார்கள் என்று ஆராய்ச்சி செய்தால், இவர் கள் எல்லோரும் ஒரு நாட்டின் மன்னர்களாக இருந்தார் கள் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு. "சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின், தேன்றேர் குறவர் தேயம் நன்று." என்று பண்டைக் காலத்திலேயே பாடி வைத்தனர். மேலும், சில பகை அரசருக்குப் பயந்து ஊரை விட்டு ஊராக மக்கள் காடுகளிலும், மலைகளிலும் குடிபுகுந்து அகதிகளாக வாழ்ந்து இனப்பெயரையும், குடும்பப் பழக்கவழக்கங்களையும் மாற்றிக் கொண்டார் கள் என்பது சரித்திரச் சான்று. அது ஒரு பக்கமிருக்க, இன்று கிழக்கு பாக்கிஸ்தான், பர்மா, இலங்கை முதலிய நாட்டு அகதிகள் வருகையே இதற்குக் கண்கூடானச் சான்றாகுமன்றோ!

# 3. குருவிக்காரர் வாழ்க்கை

குறவர் இல்லாத ஊரில்லை. எங்கு சென்றாலும் இவர்களைப் பார்க்கிறோம். 'குருவிக்காரர்', 'நரிக்குறவர்' என்ற பெயர்களுடன் குருவி பிடிப்பதாலும், நரி பிடிப்பதாலும் ஏற்பட்ட காரணப் பெயர்கள் என்று மட்டும் தெரிந்துகொள்கிறோமேயன்றி அவர்களுடைய வாழ்க்கை முறையை ஊன்றிக் கவனிப்பதில்லை. கவனித்தால் பல விசித்திரங்கள், விநோதமான பழக்கவழக்கங்கள் புலப்படும். அவற்றிலொன்று, ஆணாயினும், பெண்ணாயினும் கட்டாயம் மணிமாலை அணிய வேண்டுமென்பது. ஒரு சரம் முதல் ஆயிரம் சரம் வரை தரிக்க வேண்டுமென்பது விதியாம்.

இப்படி பலப்பல சம்பிரதாயங்கள். அவற்றில் சிலவற்றை, அவர்களை நேரில் கண்டு, கேட்டு அறிந்தவற்றை இங்கே விவரிக்கிறேன்:

என்றைக்கும் குளிக்கவே மாட்டார்கள், துணிகளையும் துவைக்க மாட்டார்கள். கிழிந்தால் அப்படியே புதிய பாவாடையை அணிந்துகொண்டு, பழைய துணியைப் போட்டுவிடுவார்கள்.

பிறந்தது முதல் சாகும்வரையில் பல் துலக்கமாட்டார்கள். அதற்குப் பதிலாகத் தங்கள் பல்லை ஒருவித கருப்புப் பொடியை வைத்து நினைத்த நேரத்திலே தேய்த்து கருப்பாக்கிக் கொள்ளுவார்கள். அப்படிப் பொடி வைத்து கருப்பாக்கும் பழக்கம்கூட திருமணத்திற்குப் பின்தானாம்.

இவர்களில் யாருக்காவது வியாதி கண்டால், உடனே தங்கள் குருவைக்கொண்டு குல தேவதைக்கு ஒரு கருஞ்

சேவல் வெட்டச் செய்தால், வியாதி காற்றாய்ப் பறந்து விடுமென நம்புகிறார்கள். எனினும் தற்காலத்தில் சிலர் பச்சிலை மருந்துகளை உபயோகிக்கிறார்கள். அப்படி வியாதி வந்து இறந்துவிட்டால், உடனே பிணத்தைச் சூரியன் அஸ்தமிப்பதற்குள் புதைத்துவிட்டு, மற்ற இடங்களுக்குப் போகிறார்கள். புதியஇடத்திற்குப் போனபின், பன்னிரண்டாம் நாள், தேவதைக்குப் பால் பூஜை வைத்து, கருமாதியும் முடித்துவிடுவார்கள். இறந்தவர்களைப்பற்றி அப்புறம் நினைப்பதே கிடையாது.

பௌர்ணமி காலத்தில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து இரவு இரண்டு மணிவரையிலும் கூட விளையாடுவார்கள். பெண்கள் ஐந்து கெஜத்திற்குக் குறையாத பல வர்ண பாவடை அணிந்து, ஜாக்கெட்டு போட்டுக்கொண்டிருப்பார்கள் இவர்கள் 'கோடாலி முடிச்சு' கொண்டை தான் போடுகிறார்கள், தலைக்கு எந்தப் பூ கிடைக்கிறதோ அதை வைத்துக் கொள்ளுவார்கள். சிலர் எவ்வளவு உயர்ந்த நகைகளை அணிந்தாலும் சரி, ஒவ்வொருவர் கழுத்திலும் கருப்பு நிறக் கீரை மணியைக் கட்டாயம் அணிய வேண்டும்.

ஆண்கள் கோவணமும், கழுத்தில் மணிகளும் தலையில் சிகப்பு மல் தலைப்பாகையும், காலில் ஒரு வெள்ளி வளையமோ அல்லது வெள்ளி சங்கலியோ அணிந்திருப்பார்கள்; என்றும் சிவப்பு வர்ணத் துணிகளிடம்தான் இவர்களுக்குப் பிரியம்.

நல்ல நாளிலும், திருமணத்தன்றும் இதே மாதிரியான உடை அலங்காரத்துடன்தான் இருப்பார்கள். ஆனால், திருமணத்திற்கென்று தம்பதிகள் புதிய ஆடையைத் தைக்கிறார்கள்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தேகத்தில் எங்குமே கத்திபடக்கூடாது. ஆனால், இது தற்காலத்திலே சிலரிடமில்லை. குறவப் பெண்களுக்கு ருது ஆவதற்கு முன்னும்,

பின்னும் திருமணம் நடந்தேறுவது வழக்கம். குறத்திப் பெண் ருதுவானால் அவளைச் சற்று தூரத்திலே ஐந்து முதல் ஏழு நாட்கள் தனிக் குடிசையிலிருக்கும்படி வைத்துப் பிறகு குளித்தபின் சேர்த்துக் கொள்கிறார்கள்.

குறவர் தங்கள் திருமணத்திற்கு நெருங்கிய இரத்தக் கலப்புள்ள பெண்களைத் தேர்ந்தெடுக்கமாட்டார்கள். தூரத்திலேதான் பெண் எடுத்து திருமணம் செய்வார்கள். திருமணத்திற்கு மாப்பிள்ளை, பெண் தேடும் விதமே ஒரு அலாதி. பெண் நடனமாடி, 'டின் அடிப்பாளா? என்று பார்த்துத்தான் பொறுக்குவார்களாம். திருமணச் செலவு முழுவதும் மாப்பிள்ளை வீட்டாருடையது. பெண் வீட்டார் ரூபாய் இருபது கொடுத்து விடவேண்டும்.

மேலும் ருதுவான பெண்ணாக இருந்து முதல் திருமணம் செய்கிறவளாக இருந்தால், மாப்பிள்ளை முறையுள்ளவனாக இருக்க வேண்டும். அதிலும் பெண் நன்றாக நடனமாடி, சம்பாதிப்பவளாக இருந்தால், மாப்பிள்ளை போட்டிக்குக் கேட்கவேண்டியதே இல்லை. அப்படி முறை தவறி திருமணம் நடந்தால், முறையுள்ள எதிர்க் கட்சியைச் சேர்ந்த ஆண்களும், பெண்களும் முறையல்லாத எதிர்க் கட்சியைப் பாவாடையால் அடித்துவிடுவார்கள். இதில் ஆண்களைவிட பெண்களின் சண்டை மிகவும் பயங்கரமாயிருக்கிறது. அந்தச் சந்தர்ப்பத்தில் ஆண்கள் கூடுமான வரையில் அடக்கிப்பார்ப்பார்கள். முடியாமல் போனாலும் சரி, அல்லது பல ஆண்களை மணந்து, அவளால் கூட்டத்திலேயே, ஆண்களுக்குள் சண்டை வந்தால் எல்லோரும் சேர்ந்து கூட்டம் பேசி, அவளுடைய தலைமயிரைக் கத்தியால் அறுத்து, தங்கள் கூட்டத்திலிருந்து துரத்திவிடுவார்கள். அறுபட்டவள் கூந்தலைக் கண்டதும் மற்ற எந்தக் கூட்டத்திலும் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். அப்படி பாவாடையால் அடித்தாலும் அடிபட்டவர்களையும் மற்றக் குறவ ஜாதிகள் சேர்க்கமாட்டார்கள். 'பாவாடை அடி' அவர்கள் ஜாதியில் பெரிய அவமானம்.

இந்த வழக்கு சுமார் மூன்று நான்கு மாதங்கள் இரவு சுமார் முதல் ஜாமம்வரையில், பிரதி தினமும் மற்றக் கூட்டத்தின் தலைவர்கள் மூலம் நடக்குமாம்.

ஒவ்வொரு கூட்டத்திற்கும் ஒரு தலைவன் உண்டு. அவன்தான் குரு, வைத்தியன், தலைவன், நீதிபதி, அபராதம் விதிப்பவன், திருமணச் சடங்குகளை நடத்துகிறவன், ஆசிரியன், பண்டைக்காலத்தில் சேனைத் தலைவனும்கூட. குறவத் தலைவனை அவர்கள் 'குருணமோட்டோ' என்று அழைக்கின்றனர். ஆண்களும், பெண்களும் சேர்ந்து தான் தங்கள் தலைவனைத் தேர்ந்தெடுப்பது. இக்கட்சி சண்டையில், இரு கட்சிக் கூட்டத்தின் தலைவர்களைச் சேர்க்காமல், மற்றக் குறவக் கூட்டத்தின் ஐந்து தலைவர்களுக்கு ஆகாரம், இடம் முதலிய வசதிகள் கொடுத்து, பஞ்சாயத்து நடத்துவார்கள். நியாயப்படி, யார் யார் குற்றவாளிகளோ அவர்களை ஒன்றாகத் தேர்ந்தெடுத்து, சமாதானப்படுத்தி குற்றவாளிகளுக்கு மொத்தமாக அபராதம் விதிப்பார்கள். அபராதம் என்பது ஐந்து சேவல், (கூட்டத்திற்குத் தகுந்தபடி) படிக்கணக்கில் அரிசி, காய்கறிகள், ஐந்து சேர் இறைச்சி. இவற்றை வாங்கி, சண்டை நடந்த இடத்திலே இருக்கும் கூட்டத்திற்கு விருந்து நடக்கும். 'நாங்கள் எல்லோரும் சமாதானம்' என்று அவர்கள் சேர்ந்து கூறிய பின், பஞ்சாயத்துத் தலைவர்கள் முதலில் சாப்பிடுவார்கள்.

திருமணத்திற்கு, மாப்பிள்ளை வெள்ளியாலோ அல்லது பொன்னாலேயோ 'தாலி' செய்வதில்லை. கருப்புக் கீரை மணியால் செய்த மூன்று சரத்தை முறுக்கி, பெண்ணின் கழுத்தில் கட்டுவான். ஆனாலும், குறத்தியர்கள் வெள்ளி நகைகளைத்தான் அதிகமாக அணிந்து கொள்ளுகிறார்கள். தாலி கட்டும்போது பூ, சாம்பிராணி, கற்பூரம், பால் முதலியவற்றை மதுரை மீனாக்ஷிக்கும், பரவட்டைக் காளிக்கும் வைத்து, பூஜை சடங்குகள் முடித்து,

பிறகுதான் தாலி கட்டுவான். குறவன் திருமணத்திற்கு சுமார் முன்னூறு ரூபாய் வரையில் செலவு செய்கிறான்.

திருமணச் சடங்கை சிலர் இன்னும் சற்று நாகரிகமாகச் செய்கிறார்கள். ருதுவாகாத மங்கையர்களை முதலிலிருந்தே முறையான சில வாலிபர்கள் தங்கள் கூடவே பிச்சை எடுக்கவோ அல்லது காடை, கௌதாரி பிடிக்கவோ அழைத்துச் செல்லுகிறார்கள். அப்படி அழைத்துச் செல்வது ருதுவான மங்கையாகவுமிருப்பாள். அல்லது இரண்டாந்தாரம், மூன்றாந்தாரத்தவளாகவுமிருப்பாள். இப்படி ரஸ்தாக்களிலும், தோப்புகளிலும் பழகியபின் பெண் ருதுவானதும் அதற்குப்பின் தாய் பிரியப்பட்டவனுடன் வெளியில் அனுப்புவதில்லையாம். முதன் முதலில் ருதுவான பெண்களுக்கு திருமணமாகும் போதுதான் இவ்விதக் கட்டுத் திட்டங்கள் செய்கிறார்கள். பிறகு ஒரு நல்ல நாளைக் குறித்து, ஒரு தனி மைதானத்தில் அவனுக்கே திருமணம் செய்து கொடுக்கிறார்கள். திருமணம் செவ்வாய் அல்லது சனிக்கிழமைகளில்தான் விசேஷமாக நடைபெறும். வெள்ளியன்று திருமணம் செய்வதில்லை. அந்நாளை கடவுளுக்கென்று வைத்திருக்கிறார்கள்.

திருமணம் நடந்தபிறகு மாப்பிள்ளை வீட்டார் ஒவ்வொரு குடும்பத்திற்கும் அரிசி, பருப்பு, விறகு காய்கறிகள், இறைச்சி இன்னும் சமைக்க வேண்டிய பொருள்களை ஒரு புதிய முறத்திலே வைத்து முறைப்படி முதலில் யாருக்கோ, அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். கொடுத்ததை அவர்கள் தனித் தனியாகச் சமைத்து, கடைசியில் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து புதிய தம்பதிகளைக் கேலி செய்து கொண்டே சாப்பிடுவார்கள்.

மாப்பிள்ளை மணத்திற்குப் பின் இடது காலில் மட்டும் வெள்ளியோ, இரும்போ கொலுசைப்போல் அணிந்துகொள்ளுகிறார்கள்.

## பிரசவம், விவாகரத்து:

குறத்தி பிரசவத்திற்கு, குறத்தியர்களுக்குள்ளேயே மருத்துவப் பணியைப் பார்த்துவிடுகிறார்கள். மருத்துவத்தைத் தங்கள் பெண்களுக்கு திருமணமானதும், வயதானர் குறத்தி கற்றுக் கொடுத்து விடுகிறாள். தற்காலத்தில் சிலர் தங்களால் முடியாத பிரசவமாக இருந்தால் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகிறார்கள். அப்படி ஆஸ்பத்திரியில் பிரசவமானவள், தன் குழந்தையுடன் மறுபடியும், இவர்கள் கூடாரங்களுக்கு நேராக வர முடியாது. தங்கள் கூட்டத்தாருக்கு, சிறிது தூரத்திலே குடிசையில் தங்கி, பன்னிரண்டு ரூபாய் அபராதம் செலுத்தவேண்டும். அபாரதத்தை யார் கையிலும் கொடுப்பதில்லை. அதற்கு அரிசி, பருப்பு, இறைச்சி முதலியவைகளை வாங்கி தங்கள் கூட்டத்திலுள்ள ஒவ்வொரு குடும்பத்திற்கும் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும். எல்லோரும் தெய்வத்தின் பெயரைச் சொல்லி தனித்தனியாகச் சமைத்த சமையலை, கூட்டமாக உட்கார்ந்து சாப்பிடுவார்கள். இவ்விதம் அபராதத்திற்குப் பயந்தும் தங்கள் குல தேவதைக்கும் இது பிடிக்காது என்ற காரணத்தினாலும் இவர்கள் ஆபத்தான பிரசவத்தின் போதுகூட ஆஸ்பத்திரிக்குப் போவதில்லை.

குழந்தை பிறந்து, முதல் மூன்று மாதம் அல்லது மூன்று வளர்பிறைவரையில் பிரசவமானவளை ஒருவரும் தொடமாட்டார்கள். அவளை அருகில் சேர்த்துக்கொள்ளவும் மாட்டார்கள். அவள் தொட்ட பாத்திரம், பொருள் எதுவாக இருந்தாலும் சரி, உடனே தூரத்திலே எறிந்து விடுகிறார்கள். கணவன், சமைத்தோ அல்லது பிச்சை எடுத்தோ தூரத்திலே நின்று, பிரசவமான தன் மனைவியின் பாத்திரத்தில் தூக்கிப் போட வேண்டும். மூன்றாம் மாதம் பிறையைக் கண்டபின் தங்கள் குலதேவதைக்கு சடங்கு செய்த பிறகுதான் சேர்த்துக் கொள்ளுகிறார்கள். குழந்தை பிறந்ததும், முதலில் மண்ணில் போடுவார்களாம். பிறகுதான் பாயிலோ அல்லது துணியிலோ படுக்க

வைப்பார்களாம். நாடோடிகளாகவே இவர்கள் குழந்தை களை முதுகிலே போட்டவாறு அலைவதால், இவர்களுக்கு தொட்டிலின் அவசியம் ஏற்படுவதில்லை.

குறத்தி தன் கணவனை விரும்பாவிட்டால், தன் கணவனால் 'தாலி' என்று கட்டிய மூன்று சர கருப்புக் கீரை மணியை அறுத்தெறிந்துவிடுவாள். அப்படி அறுத்தெறிவதுதான் இவர்களுக்கு விவாகரத்து. கணவன் வேண்டாமென்று மனைவி சென்றால் பெற்ற குழந்தைகள் மட்டும் தகப்பனிடமேதான் இருக்க வேண்டுமென்று ஒரு கட்டுப்பாடு இவர்களிடமுண்டு. இது எல்லா ஆதிவாசிகளிடமும் இருக்கும் ஒரு பழக்கமே. குழந்தைகள் தகப்பனிடமிருப்பதால் குழந்தைகளுக்குத் தாய் அன்பு இல்லாமல் போய்விடுகிறது.

இவர்கள் ஜாதியில் விதவையே கிடையாது. மனைவி பிரியப்பட்டால் கணவன் இருக்கும்போதே, மற்றவனைத் திருமணம் செய்யலாம். ஆனால், புதிய மாப்பிள்ளை பழைய மாப்பிள்ளைக்கு அவளை முதலில் திருமணம் செய்த செலவு பூராவும் கொடுக்க வேண்டும். குறவன் இறந்தால் மட்டும் மனைவி குறைந்தது ஆறுமாத காலத்திற்குப்பின், மறுவிவாகம் செய்வாள். விதவைக்கு ஒரே வித சடங்குதான்.

ஆண்கள் ஒரு திசையிலும், பெண்கள் ஒரு திசையிலும் சென்றாலும் மாலை சூரியன் அஸ்தமிப்பதற்குள் பெண்கள் தங்கள் கூட்டத்துடன் வந்து சேர்ந்துவிட வேண்டும். அப்படி வராவிட்டால் அவளை அவள் புருஷன் சேர்த்துக் கொள்ளமாட்டான். பஞ்சாயத்து மூலம்தான் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

## தெய்வ வழிபாடு:

இவர்கள் வழிபடும் தெய்வங்கள் பல. அவற்றில் மதுரை மீனாக்ஷி, பரவட்டைக் காளி, ஆட்டுக்கடா சாமி,

எருமைக்கடா காளி, காட்டேரி, முனிமுத்தாயி, கருப்பாயி முதலியவை முக்கியமானவை. இவர்கள் பெண் தெய்வத்திற்குத்தான் மதிப்பு அதிகம் கொடுக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. எனினும் ஆண்கள் தவிர பெண்கள் தெய்வத்தைத் தொடவோ, பூஜை செய்யவோ கூடாது. அருகிலும் வராமல் தூரத்திலிருக்க வேண்டும். குறவர்களுக்கு தெய்வத் திருவிழா சித்திரை மாதத்தில், பிறைக்குப்பின் ஒரு நாளைக் குறிப்பார்கள். அதிக ஜன நடமாட்டமில்லாத தோப்புகளில் ஏழு பானைகளை ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி பொங்கலிடுவார்கள். ஒவ்வொரு பானையிலும் அரிசியும் தண்ணீரும் இருக்கும் மேலே இருக்கும் பானைதான் முதலில் பொங்கி வழிய ஆரம்பிக்கும். பிறகு பொங்கலை அகப்பையாலோ அல்லது கரண்டியாலோ கிளறிக் கொடுத்தால், அது தேவதைக்கு கோபம் உண்டாகுமாம். ஆகையால், பொங்கும் பானையில் தேவதை சக்தி கொண்டவன் தன் கையைவிட்டு, அகப்பையைப் போல் கிளறிக் கொடுக்கிறான்; அதனால் அவன் கை இரணமாகிவிடுவதில்லை! பொங்கலுக்குப் பின் ஒரு எருமைக்கடாவையோ, ஆட்டையோ தேவதைக்காக கத்தியால் குத்தி, பீரிட்டு அடிக்கும் குருதியை, வாயால் பிடித்துக் குடித்து ஆடுவான். இக்காட்சிகளை புகைப்படம் பிடிக்க விடமாட்டார்கள். இங்ஙனம் பலி பொங்கல் சடங்குகள் முதலியவை செய்கிறவனை மூன்று மாதங்களுக்கு முன்னமே தேர்ந்தெடுத்து விடுகிறார்கள். தேர்ந்தெடுத்தபின், செய்யும் சடங்குகளுக்கு முன் மூன்று மாதங்களும், செய்தபின் மூன்று மாதங்களும் அவன் தன் மனைவியுடன் இருக்கக் கூடாது. அதை அவர்கள் கூறும் போது அச்சத்துடன் கூறுகிறார்கள்.

மற்ற மலை ஜாதிகளைப் போல் இவர்களும் எல்லாச் சடங்குகளையும் பிறைக்குப்பின்தான் செய்யத் தொடங்குகிறார்கள். அதிலும் வளர்பிறையை இவர்கள் விசேஷமாகப் போற்றுகிறார்கள். இக்கூட்டங்கள் ஓரிடத்திலிருக்

கும்போது, அவ்விடத்திலே குழந்தையோ அல்லது பெரிய வர்களோ இறந்துவிட்டால் உடனே, ''இது பேய்பிடித்த நிலம்'' என்று அவ்விடத்தைவிட்டு சுமார் ஒரு பர்லாங்கு தூரம் போய் விடுவார்கள். இந்தியா முழுவதும் குறுக்கு வழியில் நடந்துபோக, இக்கூட்டத்தாரில் பலருக்கு வழி தெரியும்.

இவர்களை வட இந்தியாவிலும், இலங்கை, பர்மா, சீனா முதலிய நாடுகளிலும் காணலாம். ஆனால் அவ் விடங்களுக்கு எப்படிச் சென்றார்கள்? இவர்கள் யார்? முதன் முதலில் எங்கு இருந்தனர்? இவர்கள் இந்நாட்டினர் தானா? அன்றி வேறு நாடுகளிலிருந்து வந்தவர்களா? இக் கேள்விகளுக்கு இன்னமும் தக்க விடைகள் கிடைக்க வில்லை சரித்திர நிபுணர்களின் கூற்றுக்கள் வேறுபடுகின் றன. உதாரணமாக,

பண்டைக்காலத்தில் தமிழரால் பாகுபடுத்தப்பட்ட ஐவகை நிலங்களிலொன்றான குறிஞ்சி (மலையும் மலைச் சாரலுமான) நிலத்தில் வசித்தவர். அதனாலேயே குறவர் என்று பெயர் வந்ததென்கின்றனர் ஒருசாரார். இதையே சற்று மாற்றி குன்றுகளில் வசித்தபடியால் 'குன்று அவர்' என்பது குன்றவராகி பிற்காலத்தில் குறவராகச் சுருங்கிய தென்றும் கூறுவதுண்டு.

மேலும் இவர்களுடைய பரம்பரை முருகக் கடவுளின் அவதாரமென்றும், முருகக் கடவுள் குறவ மங்கையாகிய, குறத்தி மகள் ''வள்ளி''யை மணந்தாரென்றும் கூறு கிறார்கள். சாதாரணமாய் முருகன் கோவில்கள் மலையின் மேலேதான் இருக்கின்றன அல்லவா?

பல நூற்றாண்டுகளுக்கு முன் இவர்கள் பல இடங் களுக்கு கால் நடையாகவே குறுக்கு வழியில் போனதால் இவர்களை அந்தந்த நாட்டை ஆண்ட மன்னர்கள், மற்ற மன்னர்களைப் பற்றிய தகவல்களும், காட்டு வழிகளும்

குறுக்கு வழிகளும் கேட்டுத் தெரிந்துகொண்டார்களாம். மற்ற அரச மங்கையர்களைப்பற்றிய முக்கியமான விஷயங்களையும், திருமண விஷயங்களையும், சேனை பலம் முதலியவைகளையும் ''தெரிந்து வா'' என்று அனுப்ப இப்பழக்கத்தால் குறவர்களை பிற்காலத்திலே இருந்த சில மன்னர்கள், 'வேவுகாரர்' வேலைக்கும், தங்கள் சேனைக்கு வழிகாட்டியாகவும் அமர்த்திக்கொண்டு, அடுத்த ஊர்களுக்குச் சென்று போர்புரிய ஆரம்பித்தார் களாம். இக்காரணத்தால்தான் இவர்கள் தெலுங்கு நாட்டில் ''எருக்கலா'' என்று அழைக்கப்பட்டார்களாம். (எருக்கலா என்பதற்கு ''அறிவு'' என்பது ஒரு பொருள்) மேலும், பண்டைக்காலத்தில் குறவர்களை தமிழ்நாட்டில் ''கூறு'' என்றனர். அதற்கு ''கூறுவான்'' என்றும் பொருள் படும். பிற்காலத்தில் ''கூறுவான்'' என்பதே சுருங்கி ''குறவன்'' என்பதாக வந்தது என்றும் கூறுவதுண்டு. தெலுங்குப் பிரதேசங்களிலோ குறவர்களுக்கு ''கோரஷா'' என்று மற்றொரு பெயருண்டு என்பதும் இது சம்பந்தமாக கவனிக்கத்தக்கது.

## குற்றபாம்பரையானதேன்?

மைசூரை ஆண்ட திப்பு சுல்தான் இவர்களைத் தன்னுடைய ''வேவுகாரர் வேலைக்கு வைத்துக்கொண்டார் என்றும், அதற்காக திப்புவே இக்கூட்டத்தாருக்கு எதிரிகளிடமிருந்து வழிபறிக்கவும் எதிரிகளின் கூடாரத்தில் திருடவும், தீ வைக்கவும், அவர்களின் போராயுதங்களை எடுத்து அவர்களுக்கே தீங்கு செய்யவும் வேவுகாரராக வேலை செய்யவும் பயிற்சி கொடுத்ததாகவும் சரித்திரம் கூறுகிறது. (இதனால்தான் இன்றும் சில குறவர்கள் தங்களிடம் துப்பாக்கி வைத்து, சுடுவதில் நிபுணர்களாக இருக்கின்றனரென்பார்கள்.) இவற்றைக் கற்றுக்கொண்ட இவர்கள் அதையே பிற்காலத்தில் ஒரு தொழிலாகவும், ஒரு குடும்பக்கலையாகவும் தங்கள் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுத்தார்கள்.

இவ்விதம் இவர்கள் வேவுகாரராய் இருந்ததால் இவர் களை மற்றவர்கள் குற்றவாளிகளாகவே கருதினார்கள். ஆனால் கொள்ளையடித்த பொருளைத் தங்கள் முதலாளி களுக்கோ அல்லது மன்னர்களிடமோ கொடுத்துவிட்டு, அவர்கள் கொடுக்கும் கூலியே இவர்கள் அடையும் லாப மாக இருந்தது.

ஆனால் வாகனங்கள் இல்லாத காலத்திலே நன்றாக நடந்த இந்தத் தொழில், வாகனங்கள் வந்தபின் சுணங்க ஆரம்பிக்கவே இவர்கள் இத்தொழிலை கொஞ்சங்கொஞ்ச மாகப் பல ஆண்டுகளாகவே விட ஆரம்பித்தார்கள் எனி னும் அவ்விதம் வேவுபார்த்து சந்தேகத்தில் ஊறியதால் இன்றும் இவர்களிடம் சில விஷயத்தைக் கேட்டால், ஒரு வர், கூறுவதையே மற்றவர்கள் கூறமாட்டார்கள். அதிக மாக விசாரித்தால் ''அதெல்லாம் சொன்னா எங்க தேவி காத்தாயி கோச்சிக்குவா'' என்று கூறிவிடுவார்கள். முக்கியமாக தங்கள் பாஷையை விளக்கமாட்டார்கள்.

இன்று குறவர்கள் பேசும் பாஷைக்கு இலக்கணமும் இலக்கியமும் கிடையாது. பல பாஷைகளைக் கலந்து சில வார்த்தைகளிலே நடு எழுத்தை நீக்கி விரோதிகளுக்குத் தெரியாமல் பேசிப் பழகியதே காரணம். எனினும் சற்று சிந்தித்தால் இந்த விளங்காத பாஷையும் விளங்கிவிடும்.

குறவர்களைக் காணாத இடமில்லாவிட்டாலும், அதிகமாக நெல்லூரிலும், குண்டூரிலும், வேலூரிலும் இன்று காணலாம். நம்மவர்கள் இவர்களை நீக்கிப் பேசுவ தாலும் குழந்தை அழுதால், ''நரிக்குறவா வா'' என்று கூறி, குழந்தைப் பருவ முதற்கொண்டே இவர்களை வெறுக்க ஆரம்பிப்பதாலுமே இந்நிலையில் இன்றும் ''நாடோடி''களாக இருக்கிறார்கள். ஏனென்றால் மற்ற மலை ஜாதியார்களும், ஆதிவாசிகளும் எவ்வளவோ முன் னுக்கு வந்துள்ளார்கள். ஆனால், குறவர்கள் மட்டும் மிக வும் தாழ்ந்த நிலையில் நாடோடிகளாக உள்ளனர்.

இன்று முதல் இவர்களுக்கு கல்வி புகட்டி வந்தால், இன்னும் ஓர் நூற்றாண்டிலாவது இவர்கள் நல்ல நிலையை அடைவார்கள்.

இவர்களுக்கு ஒவ்வொரு ஊரிலும் தனிப்பட்ட ஒரு மைதானத்தைக் கொடுத்து, அதில் இருக்கவும், பிரியப்பட்டால் மற்ற ஊர்களுக்குப் போகலாமென்றும், எங்கு சென்றாலும் இவர்கள் குறித்த இடத்தில்தான் தங்க வேண்டுமென்றும் விதித்து சில புறம்போக்கு நிலங்களை இவர்களுக்குக் கொடுத்து பயிர்த் தொழிலுக்கு வேண்டிய வசதிகளையும் முதல் மூன்று நான்கு ஆண்டுகளுக்குச் செய்துகொடுத்தால் நலம். இராப்பள்ளியும் ஏற்படுத்தினால் வெகு சீக்கிரம் முன்னேற்றமடைவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. இதைப்போல் சில இடங்களில் மற்ற பழங்குடிகளுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. நல்ல புத்தி கூர்மையும் உலக அனுபமும், தைரியமும், நற்குணமும் உடைய குறவர்களை இனியும் இம்மாதிரி கவனியாமல் விட்டுவிட்டால் இனி எந்த யுகத்திலும் இவர்கள் முன்னேற முடியாது, இந்நிலை என்றுமே மாறாது என்பதும் திண்ணம்.

# 4. நாடோடியாக இருக்கும் இரகசியம்!

**பொ**துவாகக் குருவிக்காரர்கள் ஒரே இடத்தில் நிலைத்து வாழ்வதில்லை. சில கூட்டங்கள் ஒரே இடத்தில் ஐந்து ஆறு நாட்கள் கூட வாழ்வதில்லை. வேறு நாடோடி இனத்தைச் சேர்ந்த மக்கள் இவர்களைப் போல், மோசமான நாடோடிகளாக இல்லை.

கடந்த பல்லாண்டுகளாக இவர்களிடம் பழகும் நான் இந்தக் கருத்தை நெடு நாட்களாகப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் இருந்தேன். ஆதிவாசிகளுக்கென்று உழைக்கும் பல அரசாங்கச் சங்கங்களிடத்தில் இதனுடைய காரணத்தைப் பற்றிக் கேட்டதற்கு, அவர்களும், ‘அவர்கள் மோசமான நாடோடியர்; எங்கு வேண்டுமானாலும் அவர்கள் போவார்கள், வருவார்கள். பிச்சை கிடைக்கும் இடம் அவர்களுக்கு உகந்த ஊர்’ என்று கூறிவிட்டார்கள். நானும் அதுதான் காரணமென்று இருந்துவிட்டேன்.

பல்லாண்டுகள் இவர்களிடம் நெருங்கிப் பழகும் எனக்கு இதன் காரணம் தெரியவில்லையே என்று வருந்தியதும் உண்டு.

இதைப் பற்றிப் பல குருவிக்காரர்களிடத்திலும் கேட்டேன். அவர்களும் அதற்குச் சரியான விடை சொல்லவில்லை. இதற்காகப் பல நாட்கள் அவர்களுடைய குடிசைகளை இரவிலும் பகலிலும் பார்வை இடுவதுண்டு.

ஓர் நாள் இரவு அவர்களின் குடிசையில் ஒருவனைக் காணச் சென்றேன். அன்று அங்கே கண்ட காட்சி என்னை

அப்படியே சிலையாக்கிவிட்டது. முதலில் பெண்களுக்குள் சண்டைபோலும் என்று நினைத்துக்கொண்டேன். சிறிது நேரத்திற்குப் பின் தான் எனக்கு முழுவதும் தெரிய வந்தது. நான் கண்ட காட்சியாவது: குருவிக்காரப் பெண்கள் எல்லாரும் ஒரே குடிசையில் வட்டமாக உட்கார்ந்து ஒருத்தியின் கையை, மற்றொருத்தி கோத்துப் பிடித்துக்கொண்டிருந்தாள். இந்தக் கூட்டத்திற்கு மத்தியில் திருமணமாகாத பெண்களும் அதற்கு மத்தியில் குழந்தைகளும் உட்கார்ந்திருந்தார்கள்.

பக்கத்தில் குருவிக்காரர்களும் தனியே ஒரு கூட்டமாகக் கட்டிப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அன்று இரவு எல்லோரும் பேசிக்கொண்டும் பாட்டுப் பாடிக்கொண்டும் இருப்பார்களாம். மறுநாள் சூரியன் உதயமானதும் எல்லோரும் பழையபடி பிச்சைக்குப் போவார்களாம். இதனுடைய உட்கருத்தை முதலில் என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை. அன்றிரவு நான் வீட்டுக்கு வந்துவிட்டேன்.

மறுநாள் காலையில் காமிராப் பெட்டியுடன் அவர்களுடைய குடிசைக்குச் சென்றேன். அப்பொழுது தான் ஒவ்வொருவராகத் தூங்கி எழுந்தார்கள். என்னைக் கண்டதும், ''காலையில்தான் தூங்க ஆரம்பித்தோம்'' என்று கூறினார்கள்.

நீண்ட நாட்களாக எந்த இரகசியத்தைக் கண்டறிய முடியாமல் இருந்தேனோ, அந்த இரகசியத்தைக் குருவிக்காரனிடமிருந்து கண்டறிந்ததைப் பற்றி மிக்க சந்தோஷமடைந்தேன்.

இவர்களின் கூட்டத்தில் கைக்குழந்தை முதல் கிழவன் வரையில் யாராவது இறந்துவிட்டால், இறந்தவர்களைப் புதைத்து விடுவார்கள். புதைத்துவிட்டு, அன்று சூரியன்

மறைவதற்குள் அந்த இடத்தைக் காலி செய்துவிட வேண்டும் என்பது ஒரு கொள்கை. பிறகு புதிய இடத்திற்குச் சென்ற அன்றிரவு முழுவதும் குழந்தைகளையும் திருமணமாகாதவர்களையும் மத்தியில் படுக்க வைத்துவிட்டு, அவர்களைச் சுற்றிலும் மங்கையர்கள் தங்கள் கைகளைக் கோத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். இதைப் போல் புதிய இடத்திற்கு வந்து மூன்று இரவுகள் உட்கார வேண்டுமாம். நான்காவது நாள் குளித்துவிட்டுப் பூசை செய்தபின், அன்றிரவு தனித் தனியாகத் தங்கள் குடிசையில் தூங்குவார்களாம். இப்படி இவர்கள் மூன்று இரவுகள் கட்டிப் பிடித்துக் கொண்டிருப்பதற்கு என்ன காரணம் தெரியுமா? இறந்தவர்கள் இந்த மூன்று இரவும் பேயாக வருவார்களாம். வந்த பேய் தனியாக இருந்தால் உடனே அவளையோ அவனையோ பிடித்துக் கொள்ளுமாம். அங்ஙனம் பிடித்துக் கொண்டால் அன்று முதல் பேய் பிடிப்பட்டவர்கள் மெலிந்து கொண்டே வருவார்களாம். கடைசியில் மூன்றாவது மாதம் பேய் பிடிக்கப்பட்டவர்கள் இறந்து விடுவார்களாம்.

ஒருவர் மரணமடைந்த பிறகு மூன்று நாட்கள் வரையில் இரவில் சங்கிலிபோல் கையைக் கோத்துக் கொண்டே இருந்தால் பேயால் மொத்தமாக எல்லோரையும் பிடித்து இழுக்க இயலாது என்பது இவர்களுடைய நம்பிக்கையாம்.

ஒரு குருவிக்காரக் கூட்டத்தில் யாருக்கேனும் மரணம் ஏற்பட்டு அதனால் காலி செய்த அந்த இடத்தில், மற்றொரு குருவிக்காரக் கூட்டம் உடனேயோ அல்லது மறுநாளோ வந்து கூடாரம் அடித்துக் கொள்ளலாம். புதிய கூட்டத்தை அந்தப் பேய் ஒன்றும் செய்யாதாம்.

இந்த இடத்திலிருந்து பேய்க்காகப் பயந்து போன குருவிக்காரக் கூட்டம் மறுபடியும் பழைய இடத்திற்கு வர வேண்டுமானால், மூன்று அமாவாசைகளும் மூன்று பௌர்ணமிகளும் கடந்தபின்தான் வரலாம்.

இந்த மூட நம்பிக்கையால்தான் இவர்கள் இன்றும் நாடோடிகளாக இருக்கிறார்களே ஒழிய, நாம் நினைப் பதுபோல் இவர்கள் பிச்சைக்காகவோ அல்லது பெண்ணுக் காகவோ அல்லது இடவசதி இல்லை என்றோ, நாடோடி களாக வாழவில்லை. மிகவும் தந்திரமாக இவர்களிடம் இந்தக் காரணத்தைத் தெரிந்து கொண்டேன்.

அன்றிரவு 'பேயைக் காட்டு' என்று கூறி நானும் அவர்களின் குடிசையில் வெகுநேரம் இருந்தேன். அவர்கள் கும்பலாக இருந்த கூட்டத்தின் மத்தியிலிருந்த ஒரு பையன் கனாக் கண்டவன் போல், 'வீர்' என்று கத்தினான். உடனே அந்தக் குருவிக்காரக் கும்பலில் எல்லோரும், 'லோய்' என்று கத்தினார்கள். உடனே தூக்கத்தில், 'வீர்' என்று கத்திய பையன் விழித்துக் கொண்டான். இதைக் கண்ட ஒரு குருவிக்காரன், 'பாத்தியா அண்ணே! பேய் வந்து இவனை இழுத்திருக்கிறது. அதைக் கண்ட நாங்கள், 'லோய்' என்று மிரட்டி ஓட்டினோம். எங்கள் கண்களுக்கு ஒரு புகை தெரிந்தது. அந்தப் புகையை நீங்கள் பார்க்க வில்லையா?' என்று என்னைக் கேட்டார்கள்.

அவர்களுடைய நம்பிக்கையை நாம் ஏன் கெடுக்க வேண்டும் என்று நானும், 'ஆமாம்! பையன் குரல் மட்டும் கேட்டேன். ஆனால் நகர்ந்து போன புகையை நான் கவ னிக்கவில்லை. என் கண்களுக்கு அது தெரியவில்லை' என்று கூறினேன்.

உடனே அதற்கு அவர்கள் என்ன கூறினார்கள் தெரி யுமா?

''நீங்கள் தீட்டோடு வந்திருப்பீர்கள். அதனால்தான் அது உங்கள் கண்களுக்குத் தெரியவில்லை'' என்று கூறி னார்கள்.

''நானும், ''இருக்கலாம்'' என்று சமாதானம் கூறி விட்டு வீட்டுக்கு வந்தேன். ஒரு கூட்டத்தில் ஒருவர்

மரணமடைந்தால் அந்த இடத்தையே காலி செய்து, ஒரு கூப்பிடுதூரமாவது தள்ளிப் போய்த் தங்கள் குடிசையை அமைத்துக்கொள்ள வேண்டுமாம். நகரமாக இருந்தால் ஒரு கூப்பிடுதூரத்தில் தங்கள் குடிசைகளை அமைத்துக் கொண்டால் அவர்களுக்கு வேண்டிய பொருள்கள் அங் கேயே கிடைக்கலாம். ஆனால் சிலர் குக்கிராமங்களில் வாழ்ந்தால், அவர்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா? கிராமத்தை விட்டு ஒரு கூப்பிடுதூரம் சென்றால் அவர் களுக்கு வேண்டிய சாமான்கள் வாங்கப் பழையபடி மரணமடைந்த இடத்தைத் தாண்டித்தான் வரவேண்டும்- அல்லவா? அப்படி வந்தால் அவர்கள் 'தீட்டு' என்று கூறுகிறார்கள். ஆகையால் கிராமங்களில் வாழும் குருவிக் காரர்கள், தங்கள் கூட்டத்தில் ஒரு நபர் மரணமடைந் தால், மேற்படி காரணத்திற்காக அந்தக் கிராமத்தையே காலி செய்துவிட்டு, அடுத்த கிராமத்திற்குக் குடிபோகி றார்கள்.

இச் சடங்கு எப்பொழுது உண்டானது? என்பதைப் பற்றி ஆராய்ச்சி செய்யும்பொழுது, இது பண்டைக் காலம் முதல் இன்று வரையில் எல்லா மதத்தினர்களிடத் திலும், எல்லா இன மக்களிடத்திலும் பலவிதமாக மாறி, மருவி இருந்து வருவதைக் காணலாம்.

பண்டைய மக்கள் குகைகளில் வாழ்ந்த காலத்திலும் மரங்களின் அடியில் வாழ்ந்த காலத்திலும் மக்களுடன் முதலில் பழகிய விலங்கு நாய். நாய், மனிதனுக்குத் துணை யாக மாறியது. மரத்தடியில் வாழ்ந்தவனுக்குப் பாம்பு துணையாக வாழ்ந்தது. பாம்பு மனிதனைத் தீண்டி, அவன் இறந்தான். ஆகையால் மனிதன் பாம்புடன் நட்புக் கொள்ளாமல் அதனிடம் பயம் கொண்டான். பயத்தின் காரணமாகப் பாம்பின் மேல் பக்தி உண்டாகி, அதனை வணங்க ஆரம்பித்தான். இதையே கிறித்துவ வேதநூலின் பழைய ஏற்பாட்டு ஆதியாகமத்தில் முதல்

பெண்ணாகிய ஏவாளுக்குப் பழம் கொடுத்துப் பாம்பு வடிவத்தில் பிசாசு ஏமாற்றியதாகக் கூறப்படுகிறது.

ஒன்றினிடம் தோன்றிய பயமே கடைசியில் அதனிடம் பக்தியை உண்டாக்குகிறது. 'தெவ்வுப் பகையாகும்' என்பது தொல்காப்பியம். 'தெவ்' என்பதற்குப் பகைமை, பயம் தருவது என்று பொருள். பயத்திலிருந்து எழுந்தது தான், 'தெய்வ பக்தி—பயபக்தி' என்பதை விளக்கவே, ''பயபக்தியாக இரு'' என்ற வார்த்தை உலகில் உண்டானது. தனக்கு அபாயம் உண்டாகுமோ என்ற காரணத் தால் மனிதன் கடவுளை வணங்கினான். இக்காரணத் தைக் கொண்டு ஆராயும் போது உலகில் முதல் முதலில் உண்டானது பாம்பு வணக்கமே தான் என்று தெரிகிறது.

ஏவாளும் முதலில் ஆண்டவன் தோட்டத்தில் பாம் பைக் கண்டதும் பாம்பு கூறுவதைக் கேட்ட பின், பாம்பு விடை பெற்றுப் போகும்போது, வணங்கித்தான் இருக்க வேண்டும். எனவே, பழைய மனிதன் பாம்பு கடித்து இறந்த பின் இறந்த மனிதனிடமும் அச்சம் கொண்டான். அந்த ஆவி மறுபடியும் வந்து, தன்னைப் பிடித்துக் கொள்ளும் என்று பயந்தான். இன்றும் காடர்களிடம் இந்தப் பயம் இருக்கிறது. இக்காரணத்தால், ஆதி மனிதன் இறந்தவனை மண் பெட்டியில் வைத்து அவனுக்கு வேண்டிய உணவுகளையும் அவன் ஆயுதங்களையும் உடன் வைத்து மூடிப் புதைத்து வந்தான். அதைத்தான், 'தாழி' என்று தமிழன் பெயரிட்டான். இவ்விதமாகத் தாழிகளை யும் கல் அறைகளையும் இந்தியாவில் பல இடங்களில் காணலாம்.

காலப் போக்கில் தாழி மறையவே, மரணமடைந்தவர் களுக்கு மரியாதை செய்தும் சிலை கட்டியும் வழிபட்டார் கள். காலம் மாற மாற எல்லா மதத்தினர்களிடமும் எல்லா இன மக்களிடமும் பல வகையாக இவ்வழக்கம்

காணப்படுகிறது. குடும்பத்தில் மரணமடைந்தவர்களுக்கு இந்துக்கள், கருமாதி என்று பதினாறாம் நாளும் ஆண்டுச் சடங்கு என்று ஆண்டுதோறும் மரியாதை செய்கின்றனர்.

கிறித்தவர்களோ மரித்தவர்களுக்குப் பதினாறாம் நாள் கோவிலில், 'ஆத்தும இளைப்பாறுதல் பூசை' என்றும் 'முதலாண்டு பூசை' என்றும் கோவிலில் சடங்கும், வீட்டில் தத்தம் சக்திக்கு ஏற்றாற்போல் பிச்சைக்காரருக்கு அன்னதானமும் செய்கிறார்கள். முகம்மதியரோ மரித்தவருக்கு 3-ஆம் நாள் 'சியாரத்' என்றும், ஏழாம் நாள், 'சாத்வா' என்றும் பத்தாம் நாள் 'தஸ்வா' என்றும், இருபதாம் நாள், 'பீஸ்வா' என்றும், நாற்பதாம் நாள், 'சைலம்' என்றும், ஓராண்டு முடிந்ததும் 'பர்சி' என்றும் ஆத்தும சாந்தி செய்கின்றனர். மேலும் கிறித்தவர்கள் ஒவ்வொரு நவம்பர் மாதமும் இரண்டாம் தேதியில் சாதாரணமாகக் குடும்பத்தில் மரித்த எல்லாருக்கும் 'கல்லறைத் திருவிழா' கொண்டாடுகிறார்கள். அதாவது அன்று கிறித்துவர்கள் (மயானத்தில்) கல்லறைக்குச் சென்று தங்களுடைய மூதாதையர்களுக்காக ஜபம் செய்து சமாதியில் பூப்போட்டு, அவர்களை நினைத்துக் கொள்வார்கள். இங்ஙனம், 'நீத்தார் வழிபாடு' ஒவ்வொரு மதத்திலும் இருக்கிறது. ஆனால காலப்போக்கில் அது பலவிதமாக மாறிவிட்டது, பண்டைக் காலத்தில் பத்தினிப் பெண்களைத் தெய்வமாகக் கொண்டாடினார்கள் என்று சரித்திரம் சான்று கூறுகிறது.

இதைப் போலவே படிப்படியாக மாறிய வழக்கங்களில் ஒன்றுதான் இன்று ஒருவர் மரணமடைந்த இடத்தில், குருவிக்காரர்கள் வாழ்ந்தால் மரணமடைந்தவன் பேயாக வந்து பிடித்துக் கொள்ளுவான் என்று அந்த இடத்தை அன்றே காலி செய்து வேறிடத்துக்குச் சென்றும் கூட; இறந்தவன் ஆவி பேயாக வரும் என்று நினைத்து இரவில் உட்கார்ந்திருப்பது.

அநாகரிகமான இந்த மாக்களுக்கு (விலங்கு) நாகரிக மாக நடந்து கொள்ளும்படி, யாரால் எப்படி எடுத்துக் கூற இயலும்? என்றும் இவர்கள் நாடோடிகளாகவே இருக்க வேண்டுமா? நம் சமுதாயத்தவரான இவர்களை, நம் சமுதாயத்துடன் கூடி வாழச் செய்வது நம்முடைய கடமையன்றோ!

# 5. யார் இந்தக் குருவிக்காரன்

நீண்ட நாட்களாக இந்தக் குருவிக்காரர்களைக் கற்றவர்கள் முதல் கல்லாதவர்கள் வரை எல்லோரும் ''குறவர்'' என்றே கூறுகின்றனர்.

குறவர்கள் வேறு. குருவிக்காரர்கள் வேறு. ஆனால் எத்தனையோ நூற்றுக்கணக்கான குருவிக்காரர்களிடம் பழகிய எனக்கு இந்தக் குருவிக்காரக் கணேசனிடம் மட்டும் ஒரு தனிச் சந்தேகம் இருந்து வந்தது. உலகம் முழுவதும் நாடோடி மக்கள் வாழ்கின்றனர். அவர்கள் எல்லோரும் பல ஜாதியார்களிடத்திலிருந்து குழந்தைகளை வாங்கி வளர்த்திருக்க வேண்டும். அல்லது குழந்தைகள் சிறு வயதில் வழிதவறி அவர்களுடன் கலந்திருக்க வேண்டும். அப்படித்தான் நாடோடி இனம் பெருகியிருக்க வேண்டும்—என்பது என்னுடைய நீண்டநாள் எண்ணம். எனக்கு கணேசனின் நட்பு நெடுநாட்களுக்கு முன்பே கிடைத்தது.

ஒரு நாள் இந்தக் குருவிக்காரக் கணேசனைக் தூண்டினேன். அவன் பேசினான்.

''எங்களுக்கு மட்டும் ஆசை கிடையாதா. நாங்களும் ஓட்டுப் போட ஆசை உடையவர்கள்தாம். நாங்களும் மந்திரிகளாக வேண்டும். ஆனால் ஒரு நாளைக்கு எத்தனையோ கோடிமக்கள எங்களைப் பார்த்தப்போதிலும், 'இந்தச் சமூகம் ஏன் இப்படி இருக்கிறது?' என்று கேட்பார் இல்லை. ஆனால் மேடையில் எங்கள் பெயரைச் சொல்லி தங்களுடைய காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறார்கள். பெயரையும் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் 'உங்களுக்கு வீடு வேண்டுமா?' என்று

கேட்பார் இல்லை. எங்களுக்கு நடைபாதையே வீடு, மருத்துவமனை, பிரசவ அறை. ஏதாவது ஒன்று எங்கள் கூட்டத்தில் நடந்தால் அப்பொழுது ஆயிரம் பேர் நின்று வேடிக்கை பார்ப்பார்கள். ஆனால் எங்கள் பெண்கள் அணியும் மணிகளைப் போடாத மங்கையர்கள் இல்லை. என்னையும் ''குருவிக்காரன்'' என்றுதான் சொல்லுவார்கள். ஆனால் அந்த ரகசியம் எனக்கும் எங்கள் குருவிக்காரக் கூட்டத்தார்களுக்கும்தான் தெரியும். குருவிக்காரர்கள் கூட்டத்தார்கள் ஒவ்வொருவருக்கும் வீட்டில் வாழவும், வண்டிவிடவும் பிரியமிருக்கிறது. ஆனால் யார் கொடுப்பார்கள்? யாரைக் கேட்பது? என்ன செய்வது என்று தெரியாமல் கஷ்டப்படுகின்றோம். ஆனால் எங்கள் குருவிக்காரர் வேஷத்தை மற்ற ஆண்களும் பெண்களும் போட்டுக் கொண்டு ஆடாத இடமில்லை. ஆடாத ஆபிசுமில்லை.'' என்று சாவி கொடுத்ததைப் போல் கணேசன் பேசினான். நானோ பேசாமலிருந்தேன். ஏனென்றால் அவன் பேசும் வேகத்தில் ஏதாவது இரகசியம் கிடைக்குமா? என்று காத்திருந்தேன். கிடைத்தது.

''ஆமாம்—கணேஷ்! அந்த ரகசியம் எனக்குத்தான் தெரியும்!'' என்று சொன்னாயே எந்த ரகசியம்? என்று கேட்டேன். அவன் மௌனமாக இருந்தான். ''என்ன கணேஷ்! சுமார் பத்துப் பதினைந்து ஆண்டுகளாக என்னிடம் பழகிய நீ அதை மறைக்க வேண்டுமென்று எண்ணுகிறாயா? எனக்குப் பின்னால்தானே உன் மனைவியையும் நீ தெரிந்து கொண்டாய் அவளுக்குத் தெரியும் ரகசியம் எனக்குத் தெரியக் கூடாதா? என்று கேட்டேன். அவன் கூறிய ரகசியம் இது: ''என்னுடைய தகப்பனார் வண்ணாரப்பேட்டையில் இருக்கிறார். என் வயது இருபத்தாறு என்று, இப்பொழுது என் தகப்பனார் கூறினார். நான் சுமார் நான்கு ஐந்து வயதுடையவனாக இருக்கும் பொழுது (படத்தில் முதலில்) என் நண்பன் ஜெகந்நாதனுடன் விளையாடுவதுண்டு. நான் நான்கு

வயதுடையவனாக இருக்கும் பொழுது என் தாயார் இறந்து விட்டார். சில மாதங்களுக்குப் பின் என் தகப்பனார் மறுமணம் செய்து கொண்டார். சின்னம்மாவின் கொடுமை தாங்கமுடியாமல், நான் இந்தக் குருவிக்காரப் பையனுடன் அன்பாக இருந்தேன். அடிக்கடி அவர்களுடைய குடிசைக்குப் போய் அழுது கொண்டிருப்பேன். அப்பொழுது என் நண்பன் ஜெகநாதனுடைய தாத்தா எனக்குத் தின்பண்டம் வாங்கிக் கொடுப்பார். சில சமயங்களில் அவர்கள் குடிசையில் இரவில் படுத்துக் கொள்வதும் உண்டு. என்னுடைய சகோதரனும் சின்னம்மாளின் கொடுமை தாங்காமல் சென்னைக்கு அருகில் 20 மைல் தூரத்திலிருக்கும், எடையூரிலிருக்கும் என்னுடைய மாமன் வீட்டுக்குப் போய் விட்டான். இன்றும் எடையூரில் தான் இருக்கிறான். நாங்கள் கிராமணி குலத்தைச் சேர்ந்தவர்கள். அதே சமயத்தில் கள்ளுக் கடையையும் எடுத்து விட்டதால் எங்கள் குடும்பத்தில் பஞ்சம் தலைதூக்கி ஆடியது. ஆனால் என்னையோ சின்னம்மாளின் கொடுமையும் சேர்ந்து ஆட்டியது. நான் காலையில் எழுந்ததும் உடனே குருவிக்காரர்களின் குடிசைக்குத்தான் போவேன். கொஞ்சம் கொஞ்சமாக அவர்களுடன் கூடிக் கொண்டு சென்னையை ஒரு சுற்றுச் சுற்றி விட்டேன். அவர்களுக்கும் என்மேல் பிரியம் ஏற்பட்டு விட்டது. அவர்கள் மொழியை நான் கற்றுக்கொண்டு அவர்களுடன் நானும் நன்றாகப் பழகி விட்டேன். அந்தக் கூட்டத்தார்களின் ஒரு கூட்டம் வெளியூருக்குப் போகப் புறப்பட்டது. அவர்களுடன் நானும் வெளியூருக்குப் போனேன். அப்பொழுது எனக்கு நண்பர்கள் அதிகமாகி விட்டார்கள். வெளியூரில் உண்டி வேலில் கல் வைத்துக் குருவிகள் அடிப்பதில் எனக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. குருவி வேட்டையில் எனக்கு நல்ல பெயர் கிடைத்தது. தினம் தினம் இரவில் பறவைகளின் இறைச்சி தான் விருந்து. அதை எல்லோருக்கும் கொடுப்பேன். எல்லோரும் என்மேல் அன்பாக இருந்தார்கள். மறுபடியும் நான் சென்னைக்கு

வந்தபோது, நான் என் தகப்பனாரையோ, சின்னம் மாளையோ பார்க்கப் பிரியப்படவில்லை. ஏனென்றால் என்னுடையது கவலை இல்லாத வாழ்க்கை. கவலை இல்லாத தூக்கம். பயமில்லாத உள்ளம். செலவுக்குப் பணம் கடன் வாங்க வேண்டுமே என்ற எண்ணமில்லாத வாழ்க்கை. மனைவியையோ, குழந்தைகளையோ காப் பாற்ற வேண்டுமே என்ற கவலை கிடையாது. என் தகப்ப னாருடன் சிறிய அறையில் படுத்துறங்கினேன். ஆனால் இவர்களுடன் திறந்த வெளியில் காற்று வசதியுள்ள இடத்தில் படுத்துறங்குவதால் கொசுக்களின் ரீங்காரமோ, மூட்டைப் பூச்சியின் கடியோ இல்லாமல் நன்றாகத் தூங்கு வேன். எனக்கு இவர்களின் வாழ்க்கை பிடித்துவிட்டது. நானும் குருவிக்காரனைப் போல் கழுத்தில் மணிகள் அணிந்து கொண்டேன். என் தகப்பனாரைப் பற்றியோ என் சகோதரனைப் பற்றியோ எனக்கு நினைவு இல்லை. நினைப்பதற்குச் சந்தர்ப்பமும் வரவில்லை. கிராமணி என்ற பெயர் போய். ''குருவிக்காரன்'' என்ற பட்டத் துடன் பட்டணத்தில் பல இடங்களில் பிச்சை எடுத்தேன். எனக்கு வயது இருபது இருக்கும்பொழுதே ஒரு குருவிக் காரப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டேன். அவளுடன் கைபிடித்துக் கொண்டு ஜாலியாகச் சுற்றி னேன். என் மனைவிக்கு ஒரு குழந்தையும் பிறந்தது.

திருமணமாகி சுமார் மூன்று நான்கு ஆண்டுகள் முடிந் ததும், எனக்கு என் தகப்பனாரைப் பார்க்க வேண்டும், என் சகோதரனைப் பார்க்க வேண்டும், என்ற எண்ணம் உண்டானது. அவர்களைப் போய்ப் பார்த்தேன். ஆனால் அவர்களுடன் நான் வாழப் பிரியப்படவில்லை. ஏனென் றால் நான் தனித்து வாழப் பழகிக் கொண்டேன். பிறருடைய கையை நாடி வாழமாட்டார்கள் குருவிக் காரர்கள். நான் பிச்சை எடுப்பதையோ பிரியப்பட வில்லை. ஏதாவது கூலிவேலை செய்து சாப்பிடப் பிரியப் படுகிறேன். அப்படித்தான் இன்று கூலிவேலை செய்து

சாப்பிடுகிறேன். சந்தோஷமாக வாழ்கிறேன். என்னைப் போல் பல ஆண்களும், பெண்களும் பல ஊர்களில் பல நாடோடி மக்களிடம் கலந்து இன்று வாழ்கின்றனர். இது உண்மை.'' என்று குருவிக்கார கணேசன் கூறினான்.

இவைகளை எல்லாம் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நான், மறுநாள் முதல் அவனைப் பற்றி புலன் விசாரணை செய்தேன்.

இப்பொழுது அதிகமாகக் குருவிக்காரர்களின் கூட்டத்தில் கலந்து கொள்வதைப் பார்ப்பதில்லை. இன்னும் பலர் இருக்கின்றனர். அவர்களைப் பற்றியும் ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

கடந்த பல்லாண்டுகளாகக் கணேசனைப்பற்றியறிய முயற்சி செய்து கடைசியில் உண்மையான வாழ்க்கைச் சரித்திரத்தைக் கண்டேன் என்ற ஒரு சந்தோஷத்துடன் வீடு வந்து சேர்ந்தேன்.

# 6. ஓலோய்! ராத்கு பீட் சோப் மசாலா கூ!

அன்று புதன்கிழமை: சரோஜா என்ற குருவிக்காரி மிகவும் குஷியாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டு, என் இல்லத்தை நாடி வந்தாள். என்றுமில்லாது அவள் திடீரென்று என்னை நாடி வந்ததும், ''என்ன சரோஜா! என்ன விசேஷம்'' என்று கேட்டேன். முதலில் வெட்கப் பட்டாள். பிறகு, ''அண்ணே! கல்கத்தா போகிறேன். அங்கிருந்து ஒருவன், எனக்கு ஒரு வாரமாக ''ராத்கு பீட் சோப் மசாலா கூ! கொடுக்கிறான். அவன் அங்கிருந்து கொண்டு வந்த ''காசு'' மாலைதான் இது. நானும் அவனுடன் போகிறேன்'' ஆகையால் என்னுடைய அப்பாவுக்கு என் படம் வேண்டுமாம். ஆகவே......'' என்று முடிப்பதற்குள் நான், ''ஏண்டி! நினைத்தவுடன் போட்டோ போட முடியுமா? சரி ஞாயிற்றுக்கிழமைக்கு வருகிறேன். அவனையும் சேர்த்துப் போடுகிறேன்'' என்று கூறினேன். அதற்கு அவள், ''அவனுடன் வேண்டாம்'' என்று தடுத்துவிட்டாள். சாதாரணமாய்க் குருவிக்காரிகள் தம் கணவனுடன் நின்று புகைப்படம் பிடித்துக் கொள்வதில்லை. காரணம்! விவாகரத்து அடிக்கடி அவர்களுடைய சமுதாயத்தில் இருப்பதால், அது பொருத்தமில்லை. சரோஜா எனக்கு சிறு வயது முதல் நன்றாகத் தெரிந்தவள். அவளுடைய தாய் சினிமா பார்த்துவிட்டு வந்ததும், தன்னை ஈன்றதால் சரோஜா என்று சினிமா பெயரையே இவளுக்குச் சூட்டினாளாம். ஞாயிற்றுக் கிழமை அவர்களுடைய பாடியை நாடிச் சென்றேன். ரோட்டை விட்டு வெகு தூரம், தோப்புக்குள்ளே குடியிருக்கிறார்கள். தன்னை அலங்கரித்துக் கொண்டு வந்து

நின்று, ''அண்ணே! வயிறும் தொப்புள்ளும் படத்தில் தெரிய வேண்டும்.'' என்று தன் சட்டையைச் சற்று நீக்கினாள். அப்படி, அவர்கள் படம்பிடிப்பதற்குக் காரணம் என்னவென்றால், படம் பிடித்தால் குருவிக்காரிகளுடைய உயிர் சீக்கிரமாகப் போய்விடும் என்பது அவர்களுடைய கொள்கை. உயிர், போகும் போது ஐந்து பொறிகளின் வழியில் தான் போகும் அல்லவா? ஆகையால், ஆறாவது வழியாகிய தொப்புள் வழியாக மறுபடியும் தன்னுடைய குலத்தாய், உயிர் கொடுத்துவிடுவாள், என்று ஒரு குருவிக்காரி கூறினாள். இதில் அவர்களுக்கு நம்பிக்கை அதிகம் உண்டு. இக்கருத்தைக் குருவிக்காரர்களிடம் கேட்டாலும் கூற மறுத்துவிடுவார்கள். ஏனென்றால் அவர்களுடைய இரகசியங்கள் வெளியாருக்குத் தெரியக்கூடாதாம். காதலன் தன் காதலிக்கு ஒரு வாரமாக ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' போட்டு கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்லுவதை முன்னிட்டு, சரோஜாவின் தகப்பனார், அன்று காலையில் துப்பாக்கியால் பல பறவைகளை வேட்டையாடிக் கொண்டு வந்தார். வந்தவர் என்னைக் கண்டதும், என்னுடைய பெண் கல்கத்தா போகிறாள். என்னைத் துப்பாக்கியுடன் படம் போடுங்கோ'' என்றார். அவரும் தன் மனைவி இறந்துவிட்டதால், மறுமணம் செய்துகொள்ள வேறு ஒருத்திக்கு, ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' போடுகிறாராம். அவர் நடுத்தரமான வயதை உடையவர். ஆகையால் இதுதான் சமயமென்று, ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' படம் வேண்டும். உன் பெண் பருவ மங்கை ஆகையால் வேண்டாம் என்று கூறுகிறாள். ஆகையால் உன்னுடைய ''ராத்கு பீட் சோப் மசாலா கூ''வையாவது படம் பிடிக்கிறேன்'' என்று கூறினேன். அவர் சரி என்று ஒப்புக்கொண்டதும் உடனே ''கிளிக்'' என்று படம் பிடித்தேன்.

''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' என்பதை விளக்கமாக, சரோஜாவின் தகப்பனாரிடம் ஒரு சிகரெட்டைக் கொடுத்துக் கேட்டேன். அவரும் இரகசியமாகக் கூறினார்.

படித்தால் மட்டும் போதுமா? என்பதை போல், காதலித்தால் மட்டும் போதுமா? உயர்ந்த பண்பு வேண்டும். தெய்வீகக் காதல், கலப்பு மணம், காதல் மணம், சிற்றின்ப நூல் என்பதைப் பற்றி எல்லாம் மேடையில் கற்றவர்களும், கல்லாதவர்களும் பேசுகிறார்கள்; எழுதுகிறார்கள். நூல்களும் வெளிவருகின்றன, விற்பனையும் ஆகின்றன. செய்கையில் அவர்கள் எல்லாம் எவ்வளவு தூரம் இன்பக் கடலில் நீந்துகிறார்கள் என்பதை பற்றி எனக்குக் கொஞ்சம் சந்தேகம்தான். ஏன்? இக்கட்டுரையை வாசித்த பின் உங்களுக்கே சந்தேகம் தோன்றும். ஏனென்றால் இந்த ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' படம் பிடிக்க நான் பல்லாண்டுகள் முயன்றேன். அப்படி முயன்றும், எனக்கு இளம் பெண்ணின் புகைப்படம் கிடைக்கவில்லை. இந்த இளம் பெண்ணுக்கும் தன் காதலன் கடந்த ஒரு வாரமாக ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' போடுகிறானாம். ஆனால் எனக்கு அந்தப் புகைப்படம் எடுக்க அனுமதி தர மறுத்துவிட்டாள் இந்த சரோஜா, என்றால் உங்களுக்குக் கிடைக்குமா? பல்லாண்டுகளாக முயன்றும் கடைசியில் நடு வயதுடைய இருவருடைய ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' தான் புகைப்படத்திற்குக் கிடைத்தன.

சுயம்வரம், அரசியல், காதல், வீரனின் மேல் காதல் என்றெல்லாம் சங்க கால நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஆனால், கல்வி என்பதே தெரியாத ஒரு கூட்டம், பள்ளி என்பதே பார்க்காததொரு கூட்டம், ஓட்டுச் சாவடிக்கே ஓடிவராததொரு கூட்டத்தாரிடம் இருக்கும் காதலையும், காதல் இன்பத்தையும் பற்றி ஆராய்ச்சி செய்த போது, பாரதியார் கூறியதைப் போல் ''கற்றவர்களை விடக் கல்லாதவர்களிடமே கலை ஞானம் மலிந்து கிடப்பதைக் கண்டால் நமக்கு ஆச்சரியமாக இருக்கும் அல்லவா?

இன்று நகரங்களில் நாடோடிகளாகத் திரியும் குருவிக்காரிகளில் விதவைகளே கிடையாது! குருவிக்காரர்களை

நரிக்குறவன் என்று கற்றவர்கள் பலர் கூறுகிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால், மசூதிக்கும், பிள்ளையார் கோவிலுக்கும் வித்தியாசம் தெரியாதவர் பேச்சாக உள்ளது. நாடோடிகளாகிய இவர்கள் நடந்தே செல்லும் பொழுது, வழியில் பல குருவிகளை உண்டிவில் (காட்டோபில்ட்) என்னும் ஒரு கருவியால் வேட்டை யாடிக் கொண்டே போவதால் இவர்களுக்குக் குருவிக் காரர்கள் என்ற பெயர் உண்டாயிற்று. குறவர்—என்பவர் முறம், கூடை முடைதல், பச்சைக் குத்துதல் முதலிய தொழிலுடையவர்கள். குறவர்களைப் பற்றிய பாடல் தான் ''குற்றாலக் குறவஞ்சி'' என்பது. இந்தக் குருவிக் காரர்களில் ஆண்கள், பதினைந்து வயதுடைய கன்னி முதல், சுமார் ஐம்பது வயதுடைய விதவைக் கிழவியை யும் காதலிக்கின்றனர். என்னே இவர்களின் தெய்வீகக் காதல்!

அவர் கூறிய இரகசியம்:

''குருவிக்காரப் பெண்கள் குளிக்காததாலும், காலை முதல் மலை வரையில் பல இடங்களில் தோளில் பை களைச் சுமந்து கொண்டு நாடோடிகளாக நடப்பதால் ஏற்படும் வியர்வையாலும், மழையாலும் பெண்களுடைய முதுகில் அழுக்குப் படிந்து, சில நேரங்களில் நமைச்சல் எடுக்கும். இது ஒன்றும் ஆச்சரியமில்லை! கல்வி கற்ற வர்களுக்கும் முதுகில் நமைச்சல் உண்டு. அதற்கு நகரக் கடைகளில் ''நமைச்சல் சொறி கொம்புகள்'' என்று சிலவற்றை விற்பனை செய்கிறார்கள். சிலர் சுவரில் தங் கள் முதுகைத் தேய்த்துக் கொள்வதையும் காணலாம். ஆனால் கல்வி அறிவில்லாத குருவிக்காரர்களோ, அதைத் தெய்வீகக் காதலாக மாற்றி விட்டார்கள் என்றால் நமக்கு வியப்பாக இல்லையா?

இங்ஙனம் குருவிக்காரிக்கு முதுகு நமைச்சல் எடுத்தால், நானா நீயா என்று சில ஆண்கள் போட்டியிடுவார்கள்.

சுமார் பதினைந்து வயது பெண்கள் முதல் அறுபது வயது கிழவி, கிழவன் வரையில் வயதுக்குத் தகுந்தாற் போல் போட்டியிடுகின்றனர். இவைகளை வாசிக்கும் பொழுது இது என்ன பெரிய பிரமாதம் என்றுதான் தோன்றும். குருவிக்காரர்களிடம் இருக்கும் இரகசியங்களைக் கண்டறிவதற்கு நான் சுமார் முப்பது ஆண்டுகள் அவர்களிடம் பழகி நண்பனாக இருப்பதால், ஏதோ சுமாராக ஓர் அளவுக்கு எனக்கு அவர்களுடைய பழக்கவழக்கங்களைப் பற்றிய இரகசியத் தகவல்கள் கிடைக்கின்றன. அங்ஙனம், பெண்களுக்கு முதுகு நமைச்சல் எடுத்தால், ஆண்கள் காதலன், க்ணவன் முதலியவர்கள், அவள் யாரிடம் பிரியங் கொண்டுள்ளாளோ அவனைத் தேய்க்கச் சொல்லுவாள். அவன் அவளுடைய தலையைத் தன் மடியில் குனியவைத்து முதுகைத் தேய்க்க ஆரம்பிப்பான் அவளுக்கு வேண்டிய அளவு அவன் கொஞ்சம் கொஞ்சமாக இரவு சுமார் பத்துப் பன்னிரண்டு மணி வரையிலும் தேய்த்துக் கொண்டே இருப்பான். அவளும் பகலெல்லாம் சுற்றி அலைந்து, இரவில் இப்படிப் பிடித்து விட்டால் எப்படி இருக்கும்? ''குரங்கின் கையில் தலையைக் கொடுத்ததைப் போல்,'' அவனுக்கு முதுகு கிடைத்ததும், முதுகிலிருந்து விலா, வயிறு முதலிய இடங்களிலும் தேய்த்துத் தேய்த்து அழுக்கை உருட்டி உருட்டி விளக்குத்திரியைப் போல் எடுத்து அவளுக்குக் காட்டி. ''பாவம்! எப்படிப் பொறுத்துக் கொண்டிருந்தாய்! உனக்கு கஷ்டமாக இருக்குமே!'' என்று உருக்கமாகக் கேட்பான் அவள் 'இரவு வெகுநேரமாகி விட்டதே' என்று கூறினால், உடனே அவன், ''கொஞ்சம் சாராயம் கொடுக்கிறேன்'' என்று கூறி தன்னுடைய குடிசைக்கு அழைத்துச் செல்லுவான். அதுவரையில் அவர்கள் காதலர்கள் அல்லர். ஒருவருக்கொருவர் உதவி செய்யும் நண்பர்களாகவே நடந்து கொள்ளுவார்கள். தன்னுடைய குடிசைக்கு, அவளை அழைத்துச் சென்றதும், சாராயத்தைக் கொடுத்து விட்டு, மறுபடியும் முதுகைத் தேய்க்க ஆரம்பிப்பான். முதுகு, விலா, வயிறு,

மார்பு முதலிய இடங்களில் நன்றாகத் தேய்த்து அழுக்கு எடுத்த பின் அவள் அவனுடைய மடியிலேயே சாராயத்தின் மயக்கத்தால் தூங்க ஆரம்பிப்பாள். உடனே அவன் அவளைத் தன்னுடைய படுக்கையில் படுக்க வைத்துக் கொள்ளுவான். அவனால் உடல் தேய்க்கப்பட்டு உணர்ச்சி மேலிட்டதால், அவள் அவனுடைய இச்சைகளுக்குக் கட்டுண்டு கிடப்பாள்; அன்றிரவு முதல் அவர்கள் புதிய தம்பதிகளாக மாறி விடுவார்கள்.

ஆனால் சல சமயங்களில் ஒரு வாரம் ஒருவனிடமே முதுகைத் தேய்த்துக் கொண்டாலும், இரவில் அவனுடைய குடிசையில் பாதத்திற்குப் பாதம் தொடும்படிப் படுத்து உறங்கினாலும் தாங்கள் தம்பதிகளாக மாறப் பெண்கள் இணங்க மாட்டார்கள். இம்மாதிரியான நடவடிக்கை சில நாட்கள் நீடித்தாலும் நீடிக்கலாம். இவ்விதமான வேடிக்கை விளையாட்டுகள், ஆண் பெண்களுக்கிடையே நடைபெற்றாலும் கற்புநிலை தவறாமல் பார்த்துக் கொள்ளுகின்றனராம். மேலும் பகலிலும் அவனுடன் தெருவில் சுற்றி அலைந்தாலும், அவர்களை நாம் தம்பதிகள் என்று கூற இயலாது. ஒரு குருவிக்காரியைத் தெருவில் கண்டால், அவளுக்குத் துணையாகச் சாதாரணமாய் ஓர் ஆண் தான் வருவான். அவன் ஐந்து வயதுச் சிறுவனாக இருந்தாலும் சரி, பெண்ணுக்கு ஓர் ஆண் துணை இருக்க வேண்டியது அவர்களின் சம்பிரதாயம். பகலில், தன்னுடன் சுற்றும் ஆணை, அவள் நன்றாகப் புரிந்து கொண்டபின்தான், அவனை இரவில் ''ராத்கு பீட் சோப் மசாலா கூ'' செய்ய அனுமதிப்பாள். இந்த பழக்கத்தைத் தான் மேலை நாடுகளில் கற்றுக் கொள்ளப் போதனா முறையும், அதற்குத் தனிப் பள்ளியும், சங்கங்களும் இருக்கின்றன. ஆனால் கல்வி என்பதோ, சங்கமென்பதோ அறியாததொரு கூட்டத்தாரிடம் சமூகத்திலிருந்து நீங்கித் தனித்து வாழும் ஒரு கூட்டத்தாரிடம், மேலை நாட்டினர்களிடம் இருக்கும் உயர்ந்த பண்புகளைக் காணும்

பொழுது, நாம் அவர்களின் சமுதாயம் முன்னேற முயற்சி செய்ய வேண்டும் அல்லவா?

இந்தக் குருவிக்காரர்களுடன் சுமார் முப்பது ஆண்டுகளாகப் பழகும் எனக்கு இவர்களுடைய பழக்க வழக்கங்களையும், அவர்களுடைய காதல் முறைகளையும் காணும் போது பண்டைக் காலத்தில் இவர்கள் ஒரு குறுநில மன்னர்களின் வம்சத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்றும், விரோதி அரசனுக்குப் பயந்து, தங்கள் மொழிகளை மாற்றிக் கொண்டு, காடுகளிலும், மலைகளிலும், நாடோடிகளாக மாறிவிட்டார்கள் போலும் என்ற எண்ணம் தோன்றுகிறது. ஏனென்றால், அரசபதவிகளை பல்லாண்டுகளுக்கு முன் இழந்தாலும், அரச சபையில் இருக்கும் காதல் முறைகளை மறக்காமல் இவர்கள் கையாளுகிறார்கள். சில இடங்களில் குருவிக்காரர்கள் மலையின் மேலும் மலையடிவாரத்திலும் வாழ்வதுண்டு, அங்ஙனம் மலையின் மேல் வாழும் குருவிக்காரர்கள் பௌர்ணமி நிலவில் ஆண்களும் பெண்ணும் சேர்ந்து நடனமாடுவதுமுண்டு. அங்ஙனம் நடனமாடியபின் தனக்கு வேண்டிய பெண்ணைத் தன் மடியில் வைத்துக்கொண்டு "ராத்கு பீட் சோப் மசாலா"வை மேற்சொன்னபடி எடுப்பதுண்டு. மலையின் மேல் இருக்கும் குருவிக்காரர்கள் பெண்ணுக்குக் கஞ்சா கொடுப்பதுண்டாம்.

இரவு "ராத்கு பீட் சோப் மசாலா" ஆனதும் அவர்கள் மறுநாள் தம்பதிகளாகத் தெருவில் குஷியாக வருவதைக் காணலாம். மற்ற குருவிக்காரர்கள் இவர்களைக் கண்டதும், வேறொருவன், "ஓய் லோய்! 'ராத்கு பீட் சோப் மசாலா கூ' இரவு + முதுகு + தேய்த்த + மசாலாவா?" என்று அவர்களின் மொழியில் கத்திக் கேட்டுக் கொண்டே சந்தோஷமடைவான். ஆனால், கற்றவர்களாகிய நாம் நம்முடைய நண்பர்களை இக்கோலத்தில், தெருவில் கண்டால், சும்மா இருப்போமா? உடனே நம்

பக்கத்திலிருக்கும் நண்பர்களிடம் அவனைப் பற்றியும், அவளைப் பற்றியும் பொறாமையாகப் பேசுவோம் அல்லவா? உடனே காதல் திருமணத்தைக் குறை கூறுவோம். ஏன்? பொறாமையால். ஆனால் இப்படிப் பேசுபவர்களை மேடையின் மேல் பேச விட்டால் காதல் திருமணத்தைப் பற்றி போற்றிப் பேசுவர். ஆனால் கல்வி அறிவில்லாத இக் குருவிக்காரக் கூட்டம் உலகில் மிக உயர்ந்த பண்புடன் நடந்து கொள்வதைப் பாருங்கள்!

# 7. இன்று மனைவியின் விலை ரூபாய் 500

சமீபத்தில் சென்னை வீதியில் என் சைக்கிளில் வேக மாகப் போய்க் கொண்டிருந்தேன். அப்பொழுது, ''போட்டோ வாலா'' என்று ஒரு குருவிக்காரன் கூவிக் கொண்டே ஓடிவந்தான். நான் உடனே சைக்கிளை நிறுத்தி ''என்னடா மாங்காய்! என்று அவனை அழைத் துக் கேட்டேன். அவன் கோபமாக சாமி! நீ நியாயம் சொல்லு! என் பெண்டாட்டியை ரூ 500—க்குக் கொண்டு போய் விற்றுவிட்டான் இவன். அவள் எங்கே இருக் கிறாள் என்றே தெரியவில்லை. அவளுக்குப் பாதிப் பணம் கொடுத்துவிட்டு இவன் பாதிப் பணம் எடுத்துக் கொண் டானாம்'' என்று அழுதான் குருவிக்காரன். பிறகு கேட்ட தில் ஒருவன் மாங்காவின் மனைவியைக் கொண்டுபோய் மற்றொருவனுக்கு விற்று விட்டதாகத் தெரிந்தது. நான் உடனே வண்டியை விட்டுக் கீழே இறங்கி விசாரித்தேன். குருவிக்காரர்களுக்குள் இப்படி விற்பனை செய்வது சர்வ சாதாரணம்; இது தொன்று தொட்டு வருவது. மனைவி யையும் தன் பெண்களையும் விற்பனைச் செய்வது குருவிக் காரர்களிடம் மட்டுமில்லை. பண்டைக் காலத்தில் உண் டான இப் பழக்கம் இன்று வரையில் உலகின் பல இடங் களிலும் இது மறையவில்லை. சுமார் (4000) நாலாயிர மாண்டுகளுக்கு முன் ஒரு கூட்டத்திற்குத் தலைவிதான் பெரியவளாயிருந்தாள். அத்தலைவிக்குப் பல ஆண்கள் கணவராக இருந்தார்கள். ஒரு கூட்டத்தில் மற்றொரு தலைவி பருவ வயதை அடைந்தால் பழைய தலைவி, புதிய தலைவிக்குச் சுமார் இருபது அல்லது ஐம்பது ஆண்

களைத் துணைக்குக் கொடுத்து பல மைல்களுக்கு அப்பால் போய் வாழும்படி அனுப்பி வைப்பாள்.

பண்டைக்காலத்தில் பலசாலியாக இருந்த தலைவி ஒரே நேரத்தில் இரண்டு மூன்று ஆண்களிடம், தனித்துப் பேசுவாளாம். முதலில் வயதானவனிடமும், பிறகு நடு வயதானவனிடமும், இறுதியில் தன்னைக் காட்டிலும் நல்ல வாலிபமுள்ள காளைபோல இருப்பவனைத் தேர்ந்தெடுத்து, அவனுக்குக் குடியைக் கொடுத்து, மயக்கம் உண்டாக்கிய பிறகு அவனிடமும் பேசுவாளாம். மனைவியையும், பெண்களையும் விற்கும் இந்தப் பழக்கம் இன்றும் நம்முடன் வாழும் குருவிக்காரர்களிடம் இருக்கிறது. மேலும் வடகோடியில் வாழும் தீபேத்தியர்களிடமும் இருக்கிறது. தாய், தந்தை, அக்காள் என்ற பாகுபாடுகள் இல்லாமல் மாக்களைப்போல் அன்று மக்கள் நடந்து கொண்டார்கள். இன்றும் பல இன மக்களிடம் பல இடங்களில் இப் பழக்கம் இருக்கின்றது என்பதை என் ஆராய்ச்சியில் தெரிந்து கொண்டேன். இன்று இமய மலைப் பகுதியில் வாழும் பாங்கினியர்களிடம் இது பல்லாயிரமாண்டுகளாக இருந்து வரும் ஒரு பழக்கமாம். 'இல்லீரியா' (illyria)விலுள்ள வெனிசியரிடமும், பாபிலோனியரிடமும் காணப்படுகின்றதாம். திருமணம் செய்து கொள்ளும் பருவமடைந்த பெண்கள் ஓரிடத்தில் கூட்டமாகச் சேர்க்கப்படுகின்றனர். அவர்களைச் சுற்றி ஆடவர் கூட்டமாக நிற்பர். பின்பு ஒருவன் ஒவ்வொருத்தியாக அழைத்து ஆடவர் முன்னிலையில் நிற்கச் செய்வான். இப்படி ஒருத்தியை விற்றபின், மற்றொருத்தியை விற்பான். மணம் செய்ய விரும்பும் பாபிலோனியன் போட்டா போட்டியில் விலை உயர்த்திக் கேட்பான். அதிக பணத்திற்குக் கடைசியில் அவள் விற்கப்படுவாள். அழகில்லாத பெண்களைக் குறைந்த விலைக்கு விற்பனைச் செய்தாலும் அவளைக் கொடுமையாக நடத்தாதபடி சட்டங்கள் இருந்தாலும் ஆடுமாடுகளைப்போல் விற்பனை செய்யும் பழக்கமிருந்தது. இன்றும் இருக்கிறது. இப்பழக்கங்கள் வெளி

நாடுகளில் இருந்த காலத்திலேயே இந்தியாவிலும் பல இடங்களில் இருந்தது என்பதற்குப் பல ஆதாரங்கள் இருக்கின்றன.

பண்டைக்கால வழக்கத்தை ஒட்டியே ஓரிசாவில் வெகு காலமாகக் குழந்தைகளை விற்பனை செய்து வருகின்றனர். ஓரிஸாவில் இது குற்றமாகாது. இதற்குக் காரணம் ஏழ்மைதான். ஆனால் சில சமூகப் பிரச்சனையும் இதற்குக் காரணமாய் இருக்கிறது. இள விதவைகளும், தாரம் இழந்தவர்களும் மறுமணம் செய்துகொள்ளும் பொழுது, குழந்தைகளை விற்பனை செய்யும் பழக்கம் அதிகமிருந்தது. குழந்தையை வாங்கிய பிறகு வேண்டாம் என்று நினைத்தால், வாங்கியவர், குழந்தையின் பெற்றோர்கள் அனுமதியில்லாமல் மற்றவர்களுக்கு விற்பனை செய்யலாம். திருமணம், கருமாதி முதலிய முக்கிய விஷயங்களுக்குக் குழந்தைகள் பெற்றோர்களின் இல்லத்திற்குப் போய் வரலாம். வாங்கியவன் அக் குழந்தைகளுக்கு எல்லாச் சடங்குகளும், வசதிகளும் செய்ய வேண்டும். மேலும், வடநாட்டிலும் மேலை நாட்டிலும் தான் இப்பழக்கமிருந்தது என்பதற்கில்லை. இன்றும் 22-11-63 மலபார்—வயநாடு பகுதியில் அடிமைகளை விற்பனை செய்திருக்கின்றனர் என்று பி. கோ. அங்கத்தினர் நாடாளுமன்றத்தில் எடுத்துக் கூறியுள்ளார். மேலும், 18-8-68 அன்று பம்பாயில் இளம் பெண்களைக் கவர்ந்து சென்று அரபு நாடுகளில் விற்பனை செய்கின்றனர் என்று ஒன்பது பேரை அரசு கைது செய்தது. விற்பனையின் மூலம் ஒரு பெண்ணுக்கு ரூபாய் 15,000 முதல் 20,000 வரையில் கிடைக்கிறதாம். ''செஞ்சியில் அரசாண்ட தேசிங்கு அரசனுடைய தம்பியை காான்ஸ்டாண்டிநோபிலுக்குக் கொண்டு போய் விற்றதற்குச் சான்றும் இந்திய சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளது. எனவே மனிதனை மனிதன் விற்பனை செய்யும் தொழில் அழியாமலும் மறையாமலும் இருந்து வருகிறது என்பது தெளிவாகிறதல்லவா? ஆனால் இன்று ஆதிவாசிகளிடமும் நகரங்

களிடமும் இப்பழக்கம் இருக்கிறது என்றால் மிகவும் வியப்பாக இருக்கிறது அல்லவா?'' என்று அந்தச் சண்டையில் பலரிடம் விளக்கினேன். பிறகு இரு குருவிக்காரர்களையும் அழைத்து, சமாதானம் செய்து ''உன் மனைவியை நீ போய் கூப்பிடு, அவன் யாரிடம் விற்பனை செய்தானோ அவனைக் காட்டுவான். பணம் கொடுக்காமல் உன் சாமர்த்தியத்தால் எப்படி அழைக்க முடியுமோ அப்படி அழைத்தால் அவள் உன்னுடன் வருவதை யாரும் தடை செய்ய முடியாது அல்லவா?'' என்று சில வழிகளைச் சொல்லிக் கொடுத்தேன்.

ஐந்து ஆறு நாட்களுக்குப் பின் அவனைப் பார்த்த போது அவன் தன் மனைவியின் தலையில் பேன் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டு நான் சிரித்துக்கொண்டே போனதை அவனும் கண்டு சிரித்தான்.

# 8. தாண்டானோ தோண்டோ மார் காதோ

''போட்டோவாலா! போட்டோவாலா! என்ற குரல் கேட்டதும் அது நெல்லூராள் குரல்தான் என்று நினைத்து உடனே வண்டியை விட்டு இறங்கினேன். என்னைக் கண்டதும், ''ஓ வாலா! என்னைத் தாண்டானோ தோண்டோ மார் காதோ செய்து விட்டான்,'' என்று கூறி அலறி அழுதாள் அவள்.

ஒரு குருவிக்காரி என்னைக் கண்டு அழுத தோற்றத்தைக் கண்டதும் வீதியில் கூட்டம் கூடிவிட்டது. மற்றொரு பக்கத்தில் அவளைக் கண்டு நாய்கள் குரைக்க ஆரம்பித்துவிட்டன.

''நான் உங்கள் வீட்டைத் தேடிக்கொண்டு பலமுறை வந்தேன். வீடு நெடுநாளாகப் பூட்டியே இருந்தது. நீங்கள் எல்லாரும் ஊருக்குப்போய் ஒருமாதமாகி விட்டது என்று அடுத்த வீட்டில் கூறினார்கள்,'' என்று கூறி அழுதாள்.

''நெல்லூராள்! ரோட்டில் இப்படி அழுதால் பார்க்கிறவர்களும், போகிறவர்களும் நான் தான் உன் கண்ணீருக்குக் காரணம் என்று பேசிக் கொண்டு போவார்கள். அழாமல் சொல். அல்லது நாளைக்கு அவனுடன் வீட்டுக்கு வா. நீ இப்படிக் கூறுவதன் பொருள் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை,'' என்று கூறிச் சென்றேன்.

நெல்லூராள் எப்பொழுதும் தலை சீவி, ஒரு கூடைப் பூக்களைத் தலையில் வைத்துக்கொண்டு குஷியாக இருக்-

கக்கூடியவள். ஆனால், அன்றோ தலைவிரி கோலமாக அழுத கண்ணீருடன் அவள் காட்சியளித்தாள். மறுநாள் காலையில் என் வீட்டுக்கு அவளும், அவளுடைய தம்பியும் வந்தார்கள். அவர்களை உள்ளே அழைத்து உட்கார வைத்தேன்.

''என்ன நெல்லூராள்! ஏன் இப்படி இருக்கிறாய்?'' என்று கூறி முடிப்பதற்குள் அவள் 'ஓ'வென்று அழுது விட்டாள்.

''ஏண்டி அழறே! சங்கதி என்ன? சொல்லு,'' என்றாள் என் இல்லாள்.

''பெரிய பெரிய ராசாவெல்லாம் என் பின்னாலே வந்த காலமெல்லாம் போச்சு அக்கா. இன்று என்னைச் சீண்டுவாருமில்லை. நான் ஏதாவது கொடுத்தாலும், அதை வாங்கிக்கூட யாரும் சாப்பிடமாட்டார்கள். அந்த நிலைக்கு எட்டிப் பையன் செய்துவிட்டான்!'' என்று கூற ஆரம்பித்தாள்:

''அண்ணே! நான் சினிமா பார்த்துப் பார்த்து நானே நடனமாடக் கற்றுக் கொண்டேன். எங்கள் குருவிக்காரர்களின் கூட்டத்தில் என்ன சந்தோஷமான காரியங்கள் நடந்தாலும் சரி, அக்கூட்டத்தில் நான்தான் கூத்து ஆடுவேன். என் கூத்தைக் காணவும், என் அலங்காரத்தைக் காணவும் தூரத்தில் இருக்கும் பல குருவிக்காரக் கூட்டங்கள் வருவதுண்டு. என்மேல் அன்பு வைத்த என் குருவிக்கார ஜாதியினர் என்னைப் பல ஊர்களுக்கும் அழைத்துச் சென்றார்கள். நெல்லூர், பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் கூட நான் நடனமாடி இருக்கிறேன். ஆனால் எந்த ஊருக்குச் சென்றாலும் சரி, கடைசியில் சென்னைக்கு வரத்தான் விருப்பம் அதிகம். பலர் என்னைத் திருமணம் செய்து கொண்டார்கள். நான் திருமணம் செய்து கொண்டாலும் என் நடனத்தை விட்டு

விடுவதில்லை. ஆகையால் என் கணவன்மார்கள் என்னைக் கட்டுப்படுத்தினார்கள். கட்டுப்படுத்திய என் கணவன்மார்களை ஒவ்வொருவராக விவாகரத்து செய்துகொண்டே வந்தேன். கடைசியில் ஒருவருமில்லாமல் நிம்மதியாக நின்றேன். சுமார் மூன்று மாதங்கள் சந்தோஷமாக வாழ்ந்தேன். மறுபடியும் பலர் என்னைத் திருமணம் செய்துகொள்ள முயன்றார்கள். 'முடியாது! முடியாது!' என்று சொல்லிவிட்டேன். கடைசியில் பல வருஷமாய் என்னைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்ட ஒருவன் என்னைக் கெஞ்சிக் கூத்தாடித் திருமணம் செய்துகொண்டான். அவனை யாரும் மணந்துகொள்ள விரும்பாததால், அவன் என்னை அன்பாகவும், சந்தேகப்படாமலும் நடத்துவான் என்று நான் நினைத்தேன். அவன் ஓர் இரவு எனக்குச் சாராயமும், பிரியாணியும் கொடுத்தான். அன்றிரவு முதல் அவன் குடிசையில் நான் வாழ ஆரம்பித்தேன். அவன் பெயர் எட்டி.

எட்டியைத் திருமணம் செய்துகொண்ட நான் சில மாதங்களே சந்தோஷமாக வாழ்ந்தேன். நான் நடனமாடினால் உடனே அவனுக்குச் சந்தேகம் உண்டாகும். நான் நடனமாடும்பொழுது, மற்றக் குருவிக்காரர்கள் கைதட்டித்தட்டி என்னைச் சுற்றிக்கொண்டே வருவார்கள். சில குருவிக்காரர்கள் தாம்பூலம் மடித்துக் கொடுப்பார்கள். இவைகளைக் கண்ட எட்டி என்மேல் சந்தேகப்பட ஆரம்பித்தான். இரவில் என் துணிகளைப் பிடித்துக்கொண்டே தூங்குவான். சில சமயங்களில் அவனுடைய அரைஞாண் கயிற்றில் என் பாவாடையைக் கட்டிக்கொண்டே தூங்குவான்.

இந்த நிலைகெட்ட வாழ்க்கையை நான் விரும்பவில்லை. எப்பொழுதும் நான் சந்தோஷமாக இருக்க விரும்புகிறவள். என்னைப்போல் உள்ள பெண்கள் எல்லாரும் சந்தோஷமாக இருக்க, நான் மட்டும் என்ன

என்று நினைத்து ஒருநாள், 'நீ வேண்டாம்' என்று கூறி என் கழுத்திலிருக்கும் கறுப்பு மணியை அறுத்துக் கொடுத்துவிட்டேன். அன்று முதல் நான் காட்டு ராணி யைப் போல் உலவிக் கொண்டிருந்தேன். அன்று முதல் எட்டி என்மேல் கோபமாக இருந்தான்.

என்னை யாரும் திருமணம் செய்துகொள்ளக் கூடாது, என்னிடம் யாரும் பிரியமாகப் பேசக் கூடாது; என்னை யாரும் எந்தக் கூட்டத்திலும் நடனமாட வைக்கக் கூடாது என்பது எட்டியினுடைய விருப்பம். ஆகையால் என்னை எப்படியாவது காய்ந்த மாட்டின் வாலால் அடிக்க வேண் டும் என்று என்னையே வட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

ஒருநாள் நான் தனிமையில் வரும்பொழுது என் முதுகில் மாட்டின் வாலால் அடித்துவிட்டு ஓடிவிட்டான். அன்றுமுதல் என்னை, 'தாண்டானோ தோண்டோ மார் காதோ' என்று மற்றவர்கள் அழைத்தார்கள். அதாவது 'மாட்டு வாலால் அடி வாங்கியவள்' என்று அர்த்தம்.

எங்கள் குலத்தில் அப்படி ஒரு பெண்ணை அடித்தால், அவளை யாரும் திருமணம் செய்துகொள்ள மாட்டார் கள். அவளிடமிருந்து எந்த ஆணும் எதுவும் வாங்கிச் சாப்பிடமாட்டார்கள். மற்றப் பெண்களும் அவளிடம் நெருங்கிப் பழக மாட்டார்கள். ஏன் என்றால் என் னிடம் எதையாவது வாங்கிச் சாப்பிட்டால், அவனுடைய ஆயுள் குறைந்துவிடும். அவனுக்கு வியாதி உண்டாகும் என்பது எங்கள் இனத்தின் கொள்கை.''

நெல்லூராள் தன் கதையைக் கூறி முடித்தாள்.

''சரி, அப்படி அடி வாங்கியவளின் கதி என்ன? அவளுக்கு விமோசனமே கிடையாதா?'' என்று நான் கேட்டேன்.

''அது ஒரு பெரிய ரகசியம். அதை நாங்கள் யாரிடமும் சொல்லக் கூடாது. அப்படி நாங்கள் அதைக் கூறினால்,

உடனே எங்கள் குல தெய்வமாகிய பொம்மக்கா தேவி என்னைக் கொலை செய்துவிடும். ஆனால், உன்மேல் இருக்கும் அன்பினால் நான் உன்னிடம் மட்டும் சொல்கிறேன். நீ அதை யாரிடமும் கூறமாட்டேன்என்று எனக்குச் சத்தியம் செய்து கொடு,'' என்று கூறி என்னிடம் அவளுடைய சிவந்த கரத்தை நீட்டிச் சத்தியம் வாங்கிக் கொண்டாள்.

அவள் கூறிய அந்த ரகசியங்களைக் கேட்டு, என் உடல் அப்படியே நடுங்கிவிட்டது. நான் ஒரு மரம் போல் அப்படியே நின்றுவிட்டேன்.

இவைகளை எல்லாம் கேட்டபிறகு அவளுக்கு என்ன ஆறுதல் கூறுவது? என்று எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

''சரி நெல்லூராள், நன்றாக அலங்கரித்துக்கொள். உன் அலங்காரத்திற்கு என்ன வேண்டுமோ கேள், தருகிறேன். ஒரு நடனமாடு. நான் மறுபடியும் உன்னைப் புதியதாகப் புகைப்படம் பிடிக்கிறேன். அப்பொழுது அடிபட்ட ''தாண்டானோ தோண்டோ மார் காதோ'' நெல்லூராளை நான் என் படப் பெட்டியில் பிடித்துவிடுகிறேன். அப்படிப் பிடித்துவிட்டால் வெளியில் நிற்கும் நீ ஒரு புதிய நெல்லூராளாக மாறிவிடுவாய்,'' என்று அவள் நம்பும் அளவுக்குப் பேசினேன்.

அப்பாவியாகிய அவள் முகமும் மலர்ந்தது. அப்படியே என் இல்லத்தில் பல பொருள்கள் வாங்கிக் கன்னத்தில் ஒரு புள்ளி வைத்து மேக்கப் செய்து கொண்டாள்.

அவள் ஆட, என் காமெரா 'கிளிக்' என்று அவளைப் படம் பிடித்தது.

# 9. கற்பைச் சோதிக்கும் விதம்!

திருவண்ணாமலையிலிருந்து பஸ்ஸில் சென்னைக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். சோலைகளும் மலைகளும் மரங்களும் அடர்ந்ததோர் இடத்தில் பஸ் வரும்பொழுது, அந்த இயற்கையான காட்சி என் உள்ளத்திற்கு இன்பத்தைக் கொடுத்தது.

அருகிலிருந்த ஒரு சோலையிலிருந்து ஒன்றும் புரியாத ஒரு மொழியில் யாரோ சிலர் சண்டை போடும் குரல் கேட்டது. பஸ் அருகில் வரவர, அது 'குருவிக்காரர்களின் கூட்டம்' என்று பஸ்ஸில் உள்ளவர்கள் தெரிந்து கொண்டோம்.

பஸ் அங்கே கொஞ்ச நேரம் நின்றதால் அந்தக் குருவிக்காரர்களின் கூட்டத்தில் எனக்குத் தெரிந்த சில குருவிக்காரர்கள் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன். அங்கு அன்று சண்டைசெய்யும் பெண்களில், சென்னையில் எனக்குத் தெரிந்திருந்த ஒரு பெண்ணும் இருந்தாள். அவள் கண்ணீருடன் சண்டை செய்யும் காட்சி என் உள்ளத்தை உருக்கியது.

சில ஆண்டுகளுக்கு முன் நான் அவளைச் சென்னையில் கண்டபோது இருந்த அவளது ரூபலாவண்ணியமான முகம் அன்றில்லை. அவள் தன் கையில் பிடித்த கத்தியுடன் ஓர் ஆணின் மேல் பாய்வதைக் கண்டதும் ''நல்லூரா பீ...ர்...லா!'' (நல்லூரா இங்கே வா) என்று அழைத்துக் கொண்டே, பஸ்ஸிலிருந்து கையைக் காட்டினேன்.

நான், குருவிக்காரர்கள் பேசும் மொழியில் அவளை அழைத்ததால் அவள் சட்டெனப் புரிந்து கொண்டாள்.

என் பக்கம் திரும்பிய நல்லூரா என்னைக் கண்டதும், ''லோ—ணா'' (ஓ ஆண்ணா) என்று ஓலமிட்டு அழ ஆரம் பித்தாள்.

குருவிக்காரர்களின் தொடர்பு சுமார் பத்தாண்டு களுக்கு மேல் எனக்கு உண்டு. ஆனால் நல்லூராவின் தொடர்போ எனக்குக் கடந்த ஐந்தாண்டுகளாகத்தான் உண்டு. அவள் அழகுள்ளவளாக இருந்ததால் எல்லா ஆண் களும் அவளைத் திருமணம் செய்துகொள்ள முயற்சி செய் தார்கள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.

ஒரு நாள், லேஸ் லோய் என்னும் குருவிக்காரன் ஒரு வன் ஆறு அணாவுக்குப் பிரியாணி வாங்கித் தரும்படி என் னிடம் பிடிவாதம் செய்தான். அவனுடன் ஒரு பெண்ணும் இருந்தாள். அவள் வேறு யாரும் இல்லை. நம் கதாநாயகி யான இந்த நல்லூராவேதான். உடனே நான் விஷயத் தைப் புரிந்து கொண்டேன். ''லேஸ் லோய்! இவளை நீ காதலிக்கிறாயா?'' என்று கேட்டேன். அவன் பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக நின்றான்.

மறுநாள் காலை அவர்கள் இருவரும் என் வீட்டுக்கு வந்தார்கள்.

''எங்களுக்கு நேற்று இரவு அறைக் கல்யாணம் முடிந்து விட்டது. நல்லூராவைத் திருமண உடையுடன் புகைப்படம் பிடிக்கவேண்டும்'' என்று கூறினான் லேஸ்.

''சரி!'' என்று நல்லூராவைத் திருமண உடையுடன் புகைப்படம் பிடித்தேன். இச் சம்பவத்திற்குப் பிறகு சுமார் இரண்டாண்டுகள் வரை நான் அவர்களைக் காண வில்லை. இன்றுதான் நல்லூராவை இந்தச் சோலையில் கண்டேன்.

''என்ன நல்லூரா? விஷயம் என்னவென்று சொல் லேன்?'' என்று கேட்டேன்.

''இரண்டு நாட்களுக்கு முன் நாங்கள் திருவண்ணா மலையிலிருந்து பிரயாணமானோம். அப்போது இருள் சூழ்ந்திருந்தது. எங்கள் கூட்டத்திலேயே சிலர் முன்னும் பின்னுமாகவும், தாய்மார்கள் கொஞ்சம் உட்கார்ந்து உட்கார்ந்தும் நடந்து வந்தார்கள். இரண்டு நாட்களாக நடந்து வந்ததால் எனக்கு நேற்றிரவு கால்கள் வலித்தன. நான் ஒரு மரத்தடியில் கொஞ்சம் படுத்தேன். அப்படியே தூங்கிவிட்டேன். என்னிடம் மற்ற ஆண்கள் பிரியமாக இருக்கிறார்கள் என்று இந்தப் பெண்களுக்கெல்லாம் பொறாமை! ஆகையால் நான் தூங்குவதைப் பார்த்து எல்லாப் பெண்களும் என்னை விட்டு விட்டு வந்துவிட்டார்கள். நான் எழுந்து பார்த்தேன். ஒரே இருளாக இருந்ததால், நடந்து வரப் பயந்து, அங்கேயே படுத்துக் கொண்டேன். இன்று காலையில் தான் இங்கு வந்தேன். என்மீது சந்தேகப்பட்டு என் கையால் பழுக்கக் காய்ச்சிய இரும்பைத் தூக்கச் சொல்கிறார்கள்''—என்றாள் நல்லூரா.

அருகிலிருந்த பஞ்சாயத்துக்காரர்களும், ''காய்ச்சிய இரும்பை எடுப்பதுதான் அவளிடமிருந்து சந்தேகத்தைப் போக்கும். அது தான் எங்கள் பெண்குல வழக்கம்'' என்று கூறினார்கள்.

எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டேன். ஆனால் அன்று, ''பிரியாணி'' வாங்கிக் கொடுத்த லேஸ் லோயை அன்று அக் கூட்டத்தில் காணோம். நல்லூரா மற்றொருவனைத் தன் கணவன் என்று காட்டினாள். அவனோ எனக்குப் புதியவன். நான் எப்படி அவளைச் சமாதானப்படுத்துவது? என்னால் கூடுமான வரையில் பஞ்சாயத்துத் தலைவர்களிடம் நல்லூராவைப் பற்றிக் கூறினேன். அவர்கள் ஒன்றும் கேட்பதாக இல்லை.

''சரி நல்லூரா, நீ தான் அவர்கள் சொல்வதைப் போல் இரும்பைத் தூக்கிவிடு. உனக்கு மனத்தில் ஒன்றும்

இல்லை என்றால், நீ ஏன் பயப்படவேண்டும்? நீ இரும்பைத் தூக்கினால், அது உனக்கு எவ்வளவு பெருமை தெரியுமா? நானும் அதைப் பலரிடம் கூறுவேன்,'' என்று சொல்லிக்கொண்டே அவளருகில் சென்றேன். என் வார்த்தைகளைக் கேட்டவுடன் அவள் அந்தப் பழுக்கக் காய்ச்சின இரும்பைத் தன் கையில் தூக்கிப் பஞ்சாயத்துக் கூட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றி வந்து மறுபடியும் அந்த இரும்பைத் தீயில் எறிந்து விட்டாள். பஞ்சாயத்தார்களின் மனம் சமாதானம் அடைந்தது.

இச் சம்பவம் நடந்து சுமார் ஐந்து மாதங்களுக்குப் பிறகு, சமீபத்தில் நல்லூராவைச் சென்னையில் பார்த்தேன். அவளிடம், ''எங்கே உன் கணவன்?'' என்று கேட்டேன். அவள் சொன்ன ஒரு துக்கமான செய்தியைக் கேட்டு என் மனம் திடுக்கிட்டது.

''எங்கள் குலப் பெண்களைப் காய்ச்சின இரும்பைத் தூக்கச் சொல்லி எங்கள் கற்பைச் சோதித்தால், எங்கள் குலப் பெண் தெய்வம் அந்த ஆண்களைக் கொலை செய்துவிடும். அங்ஙனம் என் கணவரும் இறந்துவிடுவாரே என்று நினைத்துத்தான் நான் அன்று அவ்வளவு தூரம் வாதாடினேன். என் கணவர் போனமாதம் இறந்துவிட்டார். எனக்கு இனித் திருமணமே வேண்டாம்'' என்று கூறிக், கண்ணீர் சிந்திவிட்டு என்னை நிமிர்ந்து பார்க்காமலே நடந்து சென்று விட்டாள்.

அவள் நிலைமையை உணர்ந்ததும் என் கண்களும் உள்ளமும் கலங்கத்தான் கலங்கின.

# 10. குருவிக்காரி கொடுத்த செல்வம்

தினமும் நாம் எவ்வளவோ வித்தியாசமான மக்களைக் காண்கின்றோம். ஆனால், அவர்களும் நம்மைப் போல் மக்களாக வாழ்ந்தாலும், உடை, நடை, பாவனையிலும் அவர்களுடைய பழக்க வழக்கங்களிலும், எவ்வளவோ இரசமான செய்திகள் மறைந்திருக்கின்றன. கற்றவர்களிலும் கல்லாதவர்களிலும் சிலர், அவர்களைப் பற்றித் தாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை'' என்று கூறுகிறார்கள்.

என் வாழ்க்கையில் எவ்வளவோ சம்பவங்களையும் கட்டுப்பாட்டுடன் வாழும் வழிவகைகளையும் சிக்கன வாழ்க்கை முறைகளையும் வாழ்க்கையில் ஆங்காங்கே ஏற்படும் பூசல்களையும், சிக்கல்களையும் சமாளிக்கக் கூடிய திறமைகளையும் தைரியத்தையும் நான் இந்த ஆதிவாசிகளிடமும், மற்ற இன மக்களிடமும் கற்றுக் கொண்டிருக்கிறேன்.

சாதாரண மக்களாகிய இந்தக் குருவிக்காரர்களிடம் கூட நாம் காற்றுக் கொள்ள வேண்டியவைகள் பல இருக்கின்றன. பிச்சை எடுத்துப் பிழைப்பவர்களும், நாற்றமடிக்கும், உடலையுடையவர்களுமான இந்த நாடோடி மக்களிடமா, நாம் கற்றுக் கொள்ள வேண்டியவை இருக்கின்றன? என்று பலர் கேட்கலாம்.

''அவர்கள் எங்கேயாவது தங்கி இருந்தால், தங்களுக்குள் சண்டையும், கூச்சலும் இடுகிறார்கள். அவர்களுக்குள் தம்பதிகள் கட்டுப்பாடில்லை'' என்று சிலர் கூறலாம்.

ஆனால் அந்த ஜாதியார்களுக்குள் தான் தம்பதிகள் கட்டுப்பாடில்லையே ஒழிய மற்ற இனத்தவர்களைக் குருவிக்காரி திருமணம் செய்துகொள்வதில்லை.

பல்லாண்டுகளாக எனக்கும் குருவிக்காரர்களுக்கும் நெருங்கியத் தொடர்பு இருக்கிறது. அத் தொடர்பின் காரணமாக ஆண்களும், பெண்களும் என்னை எங்குக் கண்டாலும் சரி, உடனே என் சைக்கிளை நிறுத்தி விடுவார்கள். அல்லது நான் சற்றுத் தூரத்தில் சென்றாலும் ''ஓ லோய்—போட்டோ—கி'' என்று குரல் கொடுப்பார்கள். அப்படி அழைத்ததும், அவர்களிடம் ஒரு நிமிடம் பேசினால்தான் என் மனமும் சாந்தி அடையும்.

ஒரு நாள் எனக்குத் தெரிந்த ஒரு கூட்டத்தைத் தேடிக் கொண்டு கேளம்பாக்கம் சென்றேன். அந்தக் கூட்டத்தில் நல்ல உடற்கட்டுடன் ஒரு குருவிக்காரி நெல்லூரிலிருந்து வந்திருந்தாள். அவளுடைய உடலையும் பார்வையையும், அவள் போட்ட ஒய்யாரமான நடையையும் கண்டு, ''இவள் ஒரு நல்ல குலத்தில் பிறந்திருக்கக் கூடாதா?'' என்று நினைத்துக் கொண்டேன். அவளை அழைத்துச் சிறிது நேரம் பேசினேன். அன்றுமுதல் அவள் என்னை எங்குக் கண்டாலும் சரி வீதியின் ஓரத்தில் ஒதுங்கி நிற்பாள்.

அவளைக் கண்டதும் என் சைக்கிளும் கூட ஓட மறுத்து, நடைபாதையின் ஓரத்தில் போய் நின்றுவிடும். என் வண்டி நிற்பதைக் கண்ட அவள், தன்னுடன் நிற்கும் மற்றக் குருவிக்காரியை, ''இங்கேயே நில்'' என்று கூறி விட்டு, அவள் மட்டும் அன்னத்தைப்போல் நடந்து வருவாள். அந்த நடையையே பார்த்துக் கொண்டிருப்பேன் நான். என் அருகில் வந்து, ''எங்கே இருந்து வருகிறீர்கள்?'' என்று உரிமை. உள்ளவள் போல் கேட்பாள். அவள் என்னைப் பல இடங்களில் சந்தித்திருக்கிறாள். சந்திக்கும்

பொழுதெல்லாம், ''எங்கே இருந்து வரீங்கோ?'' என்று தான் கேட்பாள்.

ஒரு நாள் ''நீ என்னைச் சந்திக்கும் பொழுதெல்லாம் எங்கே போறீங்கே?'' என்று ஏன் கேட்டபதில்லை?'' என்று கேட்டேன். அதற்கு அவள், ''எங்கள் குலத்தில் எங்கே போறே?'' என்று கேட்க மாட்டோம். அப்படிக் கேட்டால் போகுமிடத்தில் சண்டை உண்டாகும்'' என்று கூறினாள். அவளிடம் இப்படிப் பழகிய நான், அவளை எங்குக் கண்டாலும், உடனே, ''பூ வாங்கித் தலையில் வைத்துக்கொள்'' என்று கூறிக் காசு கொடுப்பேன்.

இதைக் கூறியதும் அவள் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்து ''நீ எங்க ஜாதியில் ஏன் பிறக்கவில்லை?'' என்று கூறிப் பெருமூச்சு எறிவாள். அவளிடம் அன்பு கொண்ட நான், அவளைக் கொண்டே அவர்கள் வாழ்க்கையின் பல ரகசியங்களை அறிந்து கொண்டேன்.

ஒருநாள் காலையில் அவள் அவசரம் அவசரமாக என் வீட்டு ஜன்னல் பக்கம் வந்து, என் மனைவியிடம் ''போட்டோ ஐயா இல்லையா?'' என்று கேட்டாள். அதற்குள் நான் உள்ளேயிருந்து வந்தேன். ''சீக்கிரம் எங்கள் கூட்டத்திற்கு வாருங்கள். எங்கள் கூட்டத்தில் ஒருத்திப் பிரசவ வேதனைப்படுகிறாள். அதிக நாளாக, ''எப்படி பிரசவச் சடங்கு செய்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே இருக்கிறீர்களே! இன்று நீங்களே வந்து நேரில் பார்க்கவும். நீங்கள் வருவீர்கள் என்றுதான், நான் எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறேன்,'' என்று கூறி அந்த நல்லி என்னை அழைத்தாள்.

''சரி! நல்லி'' என்று செல்லமாகக் கூறிவிட்டு, ''நான் சைக்கிளில் வருகிறேன் நீயும் வேண்டியதாக இருந்தால், என் சைக்கிளின் பின்னால் உட்காரு!'' என்று கூறிச் சிரித்தேன். அவள் என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டு,

வேகமாகத் தங்கள் கூட்டத்தை நாடி நடந்தாள். உடனே நான் புகைப்படம் பிடிப்பதற்கு வேண்டிய பொருள் களுடன் சென்றேன்.

அன்று குருவிக்காரர்களும், குருவிக்காரிகளும் பிச்சைக்கு எங்கும் போகவில்லை. எல்லோரும் அந்தப் பிரசவ வேதனைப்படும் பெண்ணுக்கு என்ன குழந்தை பிறக்கிறது என்று தெரிந்த பிறகுதான் வேலைக்குப் போவார்களாம். பெண் பிறந்தால் தான் அவர்களுக்குக் குதூகலம். பிள்ளை பிறந்தால், ''பூ'' என்று எல்லாரும் பிச்சை எடுக்கப் போய்விடுவார்கள். மேலும், பெண் குழந்தை கொஞ்சம் அழகாகவும், சிவப்பாகவும் இருந் தால், அந்தப் பெண் குழந்தையாக இருக்கும் போதே, மற்றக் குருவிக்காரன் நூறு, இருநூறு என்று பணத்தைக் கொடுத்து ஏலத்தில் வாங்கி விடுவான். அப்படி வாங்கிய ஒரு பெண்ணை, வாங்கியவன் அவளுக்குப் பதினைந்து வயதானதும் அதிக விலைக்கு விற்பனை செய்வதைக் கண்டேன். நாகரிகமான மக்கள் வாழும் நகரங்களில் இந்தப் பழக்கம் இன்றும் இருப்பதைக் கண்டு கலங் கினேன்.

மேலும், ''கூத்தோ கூத்து'' என்று கூவிக் கூத்தாடத் தெரிந்தால், அவளுக்கு ஐந்நூறு ரூபாய் வரையில் விலை கிராக்கியாக இருக்கும்.

அடிமைகளை ஆப்பிரிக்காவில் விற்றார்கள். அதை அபிரகாம் லிங்கன் நீக்கினார். அந்த அடிமைகளில் சிலர் தப்பி இந்தியாவில் வந்து வயநாடு, மலபார் முதலிய பகுதி களில் ''பணியர்'' என்ற பெயரோடு இன்றும் வாழ்கிறார் கள். ஆனால், நம் நாட்டில் இன்றும் இரகசியமாக இப் பழக்கம் நம்முடன் கூடிப் பழகி வாழும் இக்குருவிக்காரர் களுடன் இருப்பதைக் கண்டால் நமக்கு வியப்பாக இல்லையா? இந்தக் குருவிக்காரர்களின் வாழ்க்கை இரகசி யங்களை அறிந்து கொள்ளப் பல்லாண்டுகள் சென்றன.

சிரமத்துடன் "காதல்" என்ற போலி வலையை, நல்லியின் மேல் வீசிச் சேகரிக்க வேண்டிய செய்திகளைச் சேகரிக்க வேண்டியவனாக இருந்தேன். ஆனால், என் மனைவியிடம் மட்டும் அப்போதைக்கப்போது, இந்தப் போலிக் காதலைப் பற்றி முன்கூட்டியே கூறிவிடுவேன். அவளும் அதற்குத் தகுந்தாற்போல் நடந்து உதவி செய்வதும் உண்டு. அதனால் தான் இன்றுவரையில் ஆங்கிலத்திலும் பிற எந்த மொழியிலும் எழுதப்படாத ஒரு செய்தியை, இன்று நான் சேகரித்து எழுத முடிந்தது. இல்லாவிட்டால் இவ்விஷயங்களைப் பற்றி, அவர்களைக் கேட்கவும் இயலாது.

அன்று பிரசவத்திற்குச் சென்ற நான், மற்றோர் ஆச்சரியமான பழக்கம் இவர்களிடம் இருப்பதைக் கேட்டுக் கலங்கினேன்.

பண்டைக் காலத்தில் உலகில் பல பகுதிகளில் பிரசவிக்கும் பெண்களுக்குத் தாம் படும் பிரசவ வேதனையை விட, ஆண்கள் செய்யும் பிரசவ முறைதான் அதிக வேதனையைக் கொடுக்குமாம். பண்டைக் காலத்தில் பெண்களுக்கு ஆண்கள் தான் பிரசவத்தைப் பார்ப்பார்களாம். இது என்ன ஆச்சரியம்? இன்றும் சில ஆஸ்பத்திரிகளில் ஆண் டாக்டர்கள் தான் பிரசவம் பார்க்கிறார்கள் அல்லவா?

எனவே, அன்று பிரசவ வேதனைப்படும் பெண்ணைப் பல ஆண்கள் சேர்ந்து அவளுடைய கையையும், காலையும் பிடித்துக்கொண்டு, கண்டபடியாக ஆட்டுவார்களாம். சில பெண்கள் அடியும், உதையும் கூட வாங்குவதுண்டாம். பிரசவ இம்சை ஒரு பக்கமென்றால், ஆண்கள் கொடுக்கும் அடியும் உதையும் அதிகமாக இருக்கும். சில பெண்களை மலையிலிருந்தும், வேறு உயரமான இடத்திலிருந்தும் உருட்டுவதுமுண்டு.

சில பெண்களை மற்ற ஆண்கள் சேர்த்து பிடித்துக் கொண்டு மாடு முட்டுவதைப் போல் வயிற்றில் முட்டுவார்

களாம். இன்னும் சில நாடுகளில் கர்ப்பவதியை மரத்தில் தூக்குப் போடுவதைப்போல் தோளில் கயிற்றைக் கட்டித் தூக்குவார்கள். கயிற்றில் தொங்கும் கர்ப்பிணியின் வயிற்றை, மற்றப் பெண்கள் பிடித்துக்கொண்டு தொங்கு வார்களாம். மேலும், சில காடர்கள் இனத்தில் பழுக் கக் காச்சிய இரும்புத்துண்டால், கர்ப்பவதிக்குச் சூடு வைப்பார்கள். அந்த வேதனையில் சிசு பிரசவமாகுமாம். ஆனால் இவைகள் எல்லாம் பண்டைக் காலத்தில் நடந் தன. அவைகளைக் கேள்விப்பட்டு இன்று நாம், 'ஐயோ! இப்படியுமா அன்று மக்கள் வாழ்ந்தார்கள்.' என்று ஆச்சரியப்படுகிறோம். இன்றும் சத்தியமங்கலம், வய நாடு, குண்டல்பேட்டை மசிணிகுடி முதலிய இடங்களில் வாழும் சில ஆதிவாசிகளிடம் பிரசவ வேதனைப்படும் மங்கையை அவளுக்கென்று காட்டில் ஒரு தனிக்குடிசை கட்டி, ஏழு அல்லது பத்து நாட்களுக்கு வேண்டிய ஆகாரங் களையும், அந்தக் குடிசையில் வைத்துவிடுவார்கள். அந்தக் குடிசையையும் ஏதாவது ஒரு நீரோடையின் அருகில் தங்கள் பாடியை விட்டுக் காட்டுக்குள்தான் கட்டுவார்கள். அவளுக்குத் துணைக்கு ஒருவரும் இருப்பதில்லை. அவளே பிரசவ வேதனையை அனுபவித்து, தனிமையில் குழந் தையை ஈன்று, தனக்கு வைத்த ஆகாரங்களைச் சாப்பிட் டும், குளித்தும் பிறகு பத்தாவது நாள், தன் குழந்தை யுடன் பாடியின் எல்லையில் வந்து நின்று, தான் வந்துள்ள தாக மற்றவர்களுக்குக் குரல் கொடுக்கவேண்டும். அப் பொழுது பாடியில் உள்ளவர்கள் எல்லோரும் கூடி, மௌ வாத்தியங்களுடன் நடனமாடித் தங்கள் பாடிக்கு அவளை அழைத்து வருவார்கள். இன்னும் சில காடுகளில் நடக்கும் பிரசவ முறைகளை ஈண்டு எழுதமுடியாமைக்கு என்னை மன்னிக்கவும்.

அன்று என்னைக் குருவிக்காரி, தங்கள் கூட்டத்தில் ஒருத்தி பிரசவ வேதனைப்படுகிறாள் என்று கூறி அழைத் துச் சென்றபோது, நான் அங்கு கண்ட காட்சியைக் கொண்டு, இன்னும் நாம் பழைய காலத்தில்தான் இருக்

கிறோம் என்று நினைத்தேன். பிரசவ வேதனைப்படும் குருவிக்காரியைச் சுற்றிலும் சிலர் வேஷ்டியைப் பிடித்துக் கொண்டார்கள். இரண்டு மூன்று குருவிக்காரப் பெண்கள் அவளைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்தார்கள். அவளுக்குப் பிரசவ வலி சற்று அதிகரிக்கவே கர்ப்பிணியின் இடக்கையைப் பிடித்துக் கொண்டு அவளுடைய இடுப்பின் மேல் சறுக்குவதைப்போல், ஒரு காலால் லேசாக உதைத்தான் ஒரு குருவிக்காரன். ''ஐயோ!'' என்று அவள் கத்தினாள். அதற்குள் குழந்தையும் பிரசவமாகி விட்டது. இக்காட்சியைப் புகைப்படம் பிடிக்கலாமென்று நினைத்தேன். அக்காட்சி எனக்குப் ''பாவம்'' போல் தோன்றவே புகைப் படம் பிடிக்கவில்லை. இச்செய்தியைப் பற்றி நானும் நல்லியும் பேசிக்கொண்டே வந்து என் வீட்டை அடைந்தோம்.

மேலும் அன்று அவள் கூறிய பல இரகசியங்களையும் பல இரசமான, மருத்துவச் செய்திகளையும் நான் இங்கு எழுதாமைக்கு மன்னிக்கவும். எழுதவும் இயலாது.

''நல்லிமா! உன் கழுத்து நிறைய மணி அணிந்து இருக்கிறாயே அதில் தாலியும் இருக்கிறது என்று கூறுகிறாய். உன் தாலியை எனக்குக் காட்ட முடியுமா?'' என்று கேட்டேன்.

''இதுதான் என் தாலி'' என்று கறுப்பு மணிகளும், சிவப்பு மணிகளும் கோக்கப்பட்டு, அவற்றில் மத்தியில், ''புலிப்பல்'' கோத்த ஒரு சரமாக இருக்கும் மணியை எடுத்துக் காட்டினாள் அவள். அதை என் கையால் தொடுவதற்காக நான் கையை நீட்டினேன். ''ஐயோ! தொடவேண்டாம்,'' என்று கூறினாள் அவள். ''உன் அடையாளமாக எனக்கு ஒரு தாலியைக் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டேன்.

''யாரிடமும் காட்டாமலும், நான்தான் கொடுத்தேன் என்று கூறாமலுமிருந்தால் நான் என் தாலியைக்

கழற்றிக் கொடுக்கிறேன். அதை என் அடையாளமாக வைத்துக் கொள்ளவும்'' என்று கூறித் தான் அணிந்திருந்த தாலியைக் கழற்றிக் கொடுத்தாள் அவள். தாலியைக் கையில் வாங்கியதும் நான் அதைக் கவனித்தேன். ஒவ்வொரு அங்குலத்திற்கு ஒவ்வொரு முடிபோல், ஒவ்வொரு சிவப்பு மணியை அதில் கோத்திருக்கின்றனர்.

அங்ஙனம் மொத்தம் பத்துத் துண்டுகள் காணப்படுகின்றன. கடைசியில் மட்டும் ஒரு பக்கத்தில் சிவப்பு மணி இருக்கிறது. மற்றொரு கடைசியில் சிவப்பு மணி (photo) இல்லை. அந்த இரண்டு முனைக் கயிற்றையும் ஒன்றாக இணைத்தால் எந்தப் பக்கத்தில் முடி தொடங்குகிறது என்று கண்டுபிடிப்பதே மிகவும் சிரமம். இதன் காரணத்தையும், ''எல்லாத் தாலிகளிலும் பத்துக் கறுப்பு மணிகளுக்கு ஒரு சிவப்பு மணி இருக்குமா?'' என்பதையும் அவளிடம் கேட்டேன்.

''தாலியில் மட்டும் பத்துப் பத்துத்தான் இருக்கும். நீளத்தில் சரிபாதியில் தான் புலிப்பல்லோ, நரிப்பல்லோ ஏதாவது ஒரு மாமிசப் பட்சிணியின் பல்லோ கோத்து முடிப்போம்'' என்று அவள் கூறினாள்.

''உங்கள் இனத்தில் இங்ஙனம் பத்துப் பத்தாகக் கோத்ததின் காரணம் என்ன? மேலும் இரண்டு முனைகளையும் இணைத்தால் சிவப்பு மணியின் தொடர்ச்சி எங்கே தொடங்குகிறது என்று தெரியவில்லையே அதற்கு என்ன காரணம்?'' என்று வினவினேன்.

''பத்துக்குப் பத்து சிவப்பு மணி முடிப்புகள் எல்லாம் எங்களுடைய பத்து அவதார தேவதைகள். மேலும் எங்கள் தாலியில் முடி தெரியாமல் சரம் கோப்பதின் நோக்கம் என்னவென்றால், எமன் எங்கள் கணவனுடைய உயிரைக் கொண்டுபோக வரும் பொழுது முதலில் எங்கள் தாலியில் தான் கையை வைத்து, ''முடி எங்கே தொடங்கிறது,'' என்று கவனிப்பான். அது எங்கே என்று தோன்

றாமல் விழிப்பான். உயிரைக் கொண்டுபோகும் நேரம் தவறியதும் விட்டு விடுவான். அப்பொழுது நாங்கள் எங்கள் கணவன்மார்களை இழக்க மாட்டோம்'' என்று ஏதோ அவர்கள் கருதும் ஒரு மூடநம்பிக்கையைக் கூறி, ''உங்கள் மேல் வைத்திருக்கும் ஆசையால் இவைகளை எல்லாம் கூறினேன். நான் எங்கள் குல இரகசியங்களைக் கூறினேன் என்று தெரிந்தால் மற்றப் பெண்கள் என்னைப் பாவாடையால் அடித்து அவமானப்படுத்துவார்கள். இந்த இரகசியங்களை மற்றவர்கள் எவ்வளவு பணம் கொடுத்தாலும் சொல்லமாட்டார்கள். அப்படியும் மீறிக் கேட்டால், 'தெரியாது' என்று சொல்லிவிட்டு, அந்த இடத்தில் கூட நிற்காமல் நடக்க ஆரம்பித்து விடுவார்கள், ஆகையால் தயவு செய்து என் புகைப்படத்தைக் காண்பித்து ஒருவரையும் கேட்க வேண்டாம். உங்கள் மேலிருக்கும் ஒரு மோகத்தால் என்னையே நான் மறந்து, இவைகளை எல்லாம் எப்படித்தான் உங்களிடம் கூறினேனோ தெரியவில்லை.'' என்று கண்கலங்க மிகப் பயந்த சுபாவத்துடன் என் முகவாய்க் கட்டையைப் பிடித்துக் கொண்டாள் அவள்.

அன்று அவள் இவைகளை எல்லாம் கூறும்பொழுது என் அருகில் நெருங்கி மிகுந்த ஆசை கொண்டவளைப் போல் படபட வென்று எல்லாச் செய்திகளையும் கூறிக் கடைசியில் ஒரு பெரிய மூச்சுடன் என்னிடம் விடை பெறாமலே போய் விட்டாள்.

அவளுடைய அன்பையும், ஆசையையும் பேதை உள்ளம் படைத்த அவளுடைய காதலையும், நினைத்துக் கொண்டு, அவள் கொடுத்த தாலியைக் கையில் ஏந்தியவனாய் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் என் வாயோ!

(அன்று இயற்றிய கவிதையை பின்னால் காண்க.)

''உம்! ரொம்ப ஜோர்தான். அவளுக்கு ஒரு கவிதையா? அவளுக்கு மறுபடியும் திருமணமாகப் போகிறது! என்று என்னிடம் கூறினாள்'' என்று என் பின்னாலிருந்து என் இல்லாளின் குரல் கேட்டது.

''அதற்காகத்தான், அவளுக்கு முதல் கணவனால் கட்டப்பட்ட தாலியை என்னிடம் கொடுத்துவிட்டாள் போலிருக்கிறது!'' என்று கூறி அவள் என்னிடம் கொடுத்த தாலியையும் புலிப் பல்லையும் என் மனைவியிடம் காட்டினேன்.

கறுப்பு மணிகளுடன், புலிப் பல்லைக் கோத்த தாலியையும் கையில் ஏந்தியவனாய் மேஜையின் எதிரில் உட்கார்ந்தேன். சிந்தனை குருவிக்காரி காட்டிய வழியாக, சங்க காலத்தை நாடி ஓடியது.

''பண்டைக் காலத்தில் அணிகளை மூன்று வகையாக, ''குழந்தைகள் அணி, ஆடவர் அணி, மகளிர் அணி' என்று பிரித்து வைத்திருந்தனர். குழந்தைகளுக்குப் பாதுகாவலுக்காக ''ஐம்படைத் தாலி'' என்னும் ஒருவகை நகை போடப்பட்டது. குழந்தைகள் அணிந்திருந்த, ஐம்படைத் தாலியை அவர்கள் வாயினின்றும் சிந்திய உமிழ்நீர் நனைத்தது.'' என்று மணிமேகலை ஆசிரியர் கூறியுள்ளார்.

பண்டைக் காலத்தின் செய்யுட்களை ஆராய்ச்சி செய்தால் ''தாலி'' என்ற ஓர் அணியைப் பெண்கள் மட்டும் அணியவில்லை. ஆண்களும் அணிந்திருந்தனர் என்பது தெரிய வரும். ''தாலி'' என்பது எல்லாரும் குழந்தைப் பருவம் முதல் அணியும் ஒரு பொதுவான நகை என்பதற்குச் சான்று, ''நெடுஞ்செழியன் மிகுந்த இளம் பருவத்திலேயே போருக்குச் சென்றான் என்பதைத், ''தாலி களைந்தன்று மிலனே'' என்று வரும் அடியாகும். இதிலிருந்து ஆண்மகன் தாலி அணிந்திருந்தான் என்பது புலனாகிறது. ஏன்! இக்காலத்தில் கூடப் பல ஆண்களும்,

மங்கையர்களும் தங்கள் கழுத்தில் புலிப்பல்லையும், புலி நகத்தையும் பொற் சங்கிலியில் கோத்து அணிந்திருப் பதைக் காண்கிறோமல்லவா?

இவைகள் யாவையும் கூர்ந்து கவனித்தால், பண்டைக் கால வழக்கங்களே இன்றும் தொடர்ந்து வருகின்றன என்று அறியலாம். எனவே,

''நின்னொரு வினவல் கேளாய்
பொன்னொடு புலிப்பல் கோத்த, புலம்புமணித் தாலி......
......கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே''

என்பதன் பொருளை விளக்க (அகம்:7) குருவிக்காரர்கள் மட்டும் சிறு வயது முதல் இந்தத் தாலியை அணிய வில்லை. மைசூர்ப் பகுதியிலும், வயநாட்டுப் பகுதியிலும் வாழும் ''வயநாடன் செட்டியரும், மவுண்டாடன் செட்டி யரும்'' தங்கள் குழந்தைகளின் கழுத்தில் சிறுவயது முதற் கொண்டே ''தாலி'' என்று ஒருவகை நகையை அணிந் திருப்பதைச் சமீபத்தில் கண்டேன். மேலும் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கல் எடுக்க இமயத்திற்குச் செல்லுங்கால் இப்பகுதியில் தங்கினான். ஆகையால் இப்பகுதி இன்றும் ''சேரம்பாடி'' (சேரன்பாடி தங்கிய இடம்) என்றே அழைக்கப்படுகின்றது.

குருவிக்காரி அன்று கொடுத்த தாலியை இன்றும் பத்திரமாக வைத்திருக்கிறேன். ஏனென்றால் அந்தக் குருவிக்காரியின் தாலியின் இரகசியத்தை என்னவென்று கூறுகிறது. இன்னும் என்னென்ன விஷயங்களை இவள் எனக்கு மறைத்தாளோ? யாருக்குத் தெரியும்!

# 11. குருவிக்காரர்களின் அதிசய ஈமச் சடங்குகள்

மக்கள் எலி, பூனை, குரங்குகள் முதலை, நரிகள் குப்பையில் எறிந்த 'கோழி, வாத்து முதலியவைகளின் குடல், கால்கள் முதலியவைகளை அடுப்பில் சுட்டுத் தின்கின்றனர் என்று கூறினால் நாம் என்ன சொல்லுவோம். ''ஐயோ'' அவர்களும் மனித ஜென்மமா? வென்று கூறுவோம் அல்லவா? மேலும், இவைகளைச் சாப்பிடும் மக்கள் நாகரிகமிக்க நகரங்களில் இருபதாவது நூற்றாண்டிலும் வாழ்கின்றனர் என்றால் யாரும் நம்பமாட்டார்கள். அவர்கள் வேறுயாருமல்லர்; நம்முடன் ஒன்றி வாழும் குருவிக்காரர்களே! இவர்களை ''குறவர்'' என்று கற்றவர் கூறுகின்றனர். அதைக் கேட்கும் போதுதான் மனம் வருந்துகிறது. இவர்கள் குறவர்கள் அல்லர். ''குறவர்கள்'' வேறு. ''குருவிக்காரர்கள்'' வேறு.

குறவர்கள் தாய் மொழி ''தமிழ்''. குருவிக்காரர்களின் தாய் மொழி ''மராட்டிய மொழி''. இவ்வளவு பெரிய மொழிப் பிரச்சனையை வைத்துக்கொண்டு வேறுபாடு கருதாமல் ஒருவரோடு ஒருவரைக் கலந்து கூறினால் அது எவ்வளவு பெரிய குற்றம் என்பதை நான் விளக்க வேண்டியதில்லை. குருவிக்காரர்களில் யாராவது மரணமடையும் தறுவாயிலிருந்தால் அவர்களின் வாயில், நோயாளியின் நெருங்கிய உறவினர், பால் ஊற்றுவார்கள். அந்தப் பாலைக்கூட அவர்கள் பசுப்பாலாகத் தெருக்களில் பிச்சை எடுத்து வாங்கி வருவார்கள். நோயாளியின் பெயரைச் சொல்லி, அவர்களைக் காட்டி, வழிப்போக்கர்களின் காலில் விழுந்து பணம் கேட்பார்கள்.

நோயாளியாக இருக்கும் நபர் இறந்து விட்டால், அன்று அந்தக் கும்பலில் யாரும் பிச்சைக்கோ ஊசியோ மணியோ விற்பனை செய்யவோ போகமாட்டார்கள். மூலை மூலையாக ஆண்களும் பெண்களும் சுற்றிச் சுற்றிச் சாவைக்காட்டிப் பிச்சையெடுப்பார்கள். ஆனால் சாவுக்கு ஒரு காசு கூட செலவு செய்யமாட்டார்கள். ஆள் ஆளுக்கு ''ஓ, ஊ,'' வென்று கூச்சல் மட்டும் பெரிதாக இடுவார்கள். கடைசியில் ஏதோ கொஞ்சம் செலவு செய்து பிணத்திற்கு அலங்காரம் செய்து, பாடை கட்டுவார்கள். சாவில் முக்கியமாகக் கலந்துகொள்ள வேண்டியவர்கள், மரணமடைந்தவருடைய பெண் குழந்தைகள்தாம் பூ, சாம்பிராணி பிணத்தின் முகத்தைத் திறந்து இவற்றை வைப்பார்கள். மேலும், வேப்பங் கொழுந்தைக் கொண்டு வந்து கசக்கிக் கசக்கிப் பிணத்தின் ஐம்புலன்களிலும் வைத்து மூடி அடைத்துவிடுவார்கள். இதற்குக் காரணம் என்ன? பிணத்தின் உடலிலிருந்து விஷக் கிருமிகள் வெளியில் வராதபடி தடைசெய்வதற்காகத்தான் இப்படிச் செய்கின்றனர். 'சுகாதாரத்தின் படி செய்கிறோம்' என்று சொல்லத் தெரியாத அப்பாவிகள், 'எங்கள் குலதெய்வத்தின் கட்டளை' என்று கூறுகின்றனர்.

மலைவாசிகளும் ஆதிவாசிகளும் சில சமயங்களில் சுகாதாரத்தைப் பின்பற்றுகின்றனர். ஆனால் அவர்கள் சுகாதாரத்தைப் பின்பற்றுவதை விளக்கத் தெரியாததால், எங்கள் குல தெய்வத்திற்கு உகந்தது என்றும் ஆகாது என்றும் கூறுகின்றனர். மேலும், ஒரு முக்கியமானதோர் குல சம்பிரதாயம் இவர்களிடம் பரவியிருக்கின்றது. குருவிக்காரர்களின் குலத்தில் யாராவது இறந்துவிட்டால் சூரியன் மறைந்த பிறகு அந்தப் பிணத்தைப் பூமியிலிருந்து தூக்கக்கூடாதாம். மற்றொன்று சூரியன் பூமிக்குள் மறைந்த பின், பிணத்தைப் பூமியில் புதைத்து மறைக்கக் கூடாதாம். (பூகோள சாத்திரம் அறிவு இல்லாததால் சூரியன் பூமிக்குள் மறைகிறது என்பர்.) ஆகையால் மறுநாள் சூரியன் வரும் வரையில் காத்திருக்

கின்றனர். சூரியன் உதயமானதும் பாடையில் வைத்துப் பிணத்தை மயானத்திற்குக் கொண்டு போகின்றனர். பிணத்துடன் இரவு முழுவதும் ஆண்களும் பெண்களும் கஞ்சா, பீடி முதலியவைகள் பிடித்துக்கொண்டு உட்கார்ந் திருப்பார்கள். ஆனால் அழுகுரல் அதிகமாகக் கேட்காது. பெண்கள் ஒருவருக்கொருவர் கட்டிப் பிடித்துக் கொண் டும் அழமாட்டார்கள். அப்படி அழும் பழக்கமுமில்லை யாம்.

மேலும், யாராவது இறந்து விட்டால் சந்தோஷப் படுகின்றனர். ஏனென்றால் இறந்தவர்கள் தங்கள் குல தெய்வத்திடம் போகின்றனர் என்று கூறுகின்றனர். புதியதாகக் குழந்தைகள் பிறந்ததும் கொஞ்சம் அழு வார்கள். காரணம் பாவம் நிறைந்த பூமியில் கஷ்டப்பட வேண்டுமே என்பது கருத்தாம். பிணத்தைத் தூக்கிக் கொண்டு மயானத்திற்குப் போகும்போது மேளதாளத் துடன் வேகமாக நடந்துபோவார்கள். கடைசியில் ஏதோ கொஞ்சம் பணம் செலவு செய்து பிணத்தைப் புதைத்து விடுகின்றனர். சுடுகாட்டுக்குப் பிணத்துடன் முக்கியமாகப் போகவேண்டியவர்கள் மூத்த மகள் அல்லது மூத்த பையன் இருவரும் இருந்தால் இருவரும் போகவேண்டும். மயானச் சடங்குகள் செய்வதும் அவர்கள் தாம். குருவிக்காரப் பெண்கள் இந்தியாவில் எந்த ஆதிவாசிகளும் பெறாத பல உரிமைகளைப் பெற்றிருக்கின்றனர். கற்றவர்கள் பெண் களுக்கு உரிமைகள் கொடுக்க வேண்டும் என்று மேடை யில் பேசுவார்கள் ஆனால் மலைவாசிகளும், ஆதிவாசி களும் நாடோடிகளும் தங்களுடைய பெண்கள் கூட்டத் தாருக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே பல உரிமைகளைக் கொடுத்துவிட்டார்கள் என்று நினைக்கும் பொழுது நமக்கே வெட்கமாக இருக்கின்றது அல்லவா!

# 12. குருவிக்காரியிடம் கண்ட "தாய்மை"

மலர்ந்த முகத்தைக் காட்டி
மங்காத புகழை நாட்டி

வந்தாள் ஓரின மாது,
அவளோ மிகவும் சாது.

எண்ணற்ற தேன்சுவைப் பாடல்
இசையுடன் பாடிப் பாடி

இன்ப நடனம் ஆடி
ஏங்கினாள் என்கை நாடி

கறைபடிந்த பற்களைத் தீட்டிக்
களங்கமிலாச் சிரிப்பைக் காட்டி,

கண்ணியம் சிறிதும் குன்றாமல்
கடைவிழி தன்னால் பார்த்து,

அம்மே! ஐயே! என்றே
அழைத்தாள் இனிமை யாக

இறைச்சியைக் கொஞ்சம் என்னிடம்
இரந்து நின்றே வேண்டினள்

அழகிய மணியை அணியாக
அரைகுறைத் துணியை உடையாக,

அணிந்துமே வந்தாள் என்னிடம்
அவள்தான் குருவிக்காரி.

குறத்தி என்பார் *இயல் அறியார்; அவள்
குருவிக்காரி என்பர் இயல் உணர்ந்தார்

---

*இயல்—மானிட இயல்—மனிதர்களைப் பற்றிய பாடம்.

கூட்டமாக நடந்து செல்வீர்
கூட்டமாக பகிர்ந்து உண்பீர்

கண்களில் களங்க மில்லை
கருத்தினில் குழப்ப மில்லை

மண்ணின்மேல் ஆசை யில்லை
பொன்னின்மேல் விருப்ப மில்லை

உலகினில் உன்னை மிஞ்ச
உத்தமியர் பிறந்த தில்லை

நாற்ற மடிக்கும் உன் துணிகள்
நாணத்தைப் போக்கா நின் துணிகள்

நடந்திடும் பாதையில் துயின்றிடுவாய்
நாட்ட மில்லாத் துணிவுடையாய்

மணிகள் கோத்த கழுத்துடையாய்
மாணிக் கம்போல் உளமுடையாய்

கவளக் கஞ்சிக்கு ஊசி
கரத்தில் ஏந்தி விற்று

கதிரவன் மறையும் நேரம்
கணவனை நாடி ஓடி

இன்பம் ததும்பக் கூடிடுவாய்
இனிதே குழந்தையைப் பெற்றிடுவாய்.

கற்பை உன்னிடம் கண்டேன்
கனிந்த தாய்மையும் கண்டேன்

கற்றவர் தங்கள் குழந்தைகளைக்
காப்பதற்கு ஆயாள் வைப்பர்

கதறிட விட்டுச் செல்வார்
காலையில் பணிக்குச் செல்வார்.

உண்மை உணரா மாந்தர்கள்
உன்னிடம் தாய்மையில்லை என்பார்.

உன்னிடம் தாய்மையைக் கண்டேன்
உன் முதுகே தொட்டிலாகக் கண்டேன்

பெண்கள் குலத்தின் திலகமாகப்
பேணப்பிறந்தவள் நீயே ஆவாய்

உன்குலத்திலே பிறக்காத தேனோ
உந்தன் கரத்தைப் பிடிக்காத தேனோ

குணத்தில் சிறந்த அன்னவளை
மனத்தில் நினைத்தில் மகிழ்ந்தேனே

அவளின் வாழ்வை நினைத்தேன்
அன்பை நெஞ்சில் நிறைத்தேன்.

# 13. குருவிக்காரர்களின் மொழிகள்

| | தமிழ் | குருவிக்காரர் மொழி | பிறமொழிகளில் |
|---|---|---|---|
| 1 | மனைவி | ராண்டு அல்லது அப்பணி | அப்ணி=உர்து மொழி |
| 2 | குழந்தைகள் | அப்புணு(அது)சேல்கு | |
| 3 | வீடு | கேர் | ஆங்கிலம் care |
| 4 | ஊர் | ஊர் | |
| 5 | வண்டி | பண்டி | தெலுங்கு |
| 6 | எஜமானன் | அப்புணுகல்டோ | |
| 7 | மேளம் | டும்மி | |
| 8 | மாதம் | மைனோ | உர்து |
| 9 | கிழமை | கிழமை | |
| 10 | ஓடிவிட்டாள் | நாசிகி | |
| 11 | கடவுள் | தேவி | தமிழ் |
| 12 | பள்ளிக்கூடம் | ஸ்க்கோல் | ஆங்கிலம் |
| 13 | வைத்தியசாலை | ஆஸ்பத்திரி | ஆங்கிலம் |
| 14 | கடை வீதி | மார்க்கெட் அல்லது பஜார்கு | உர்து |
| 15 | மீன் | மாசுலு | |
| 16 | புலி | வாகு | |
| 17 | முயல் | டிகாடா | |
| 18 | கடகம் | தன்னி சோக்டி | |
| 19 | சேயின் | கான் அடிக்கி | அராபு |
| 20 | பூனை | பிலாடி(அது)பில்லி | உர்து |
| 21 | எலி | உந்துறா | |
| 22 | அரசன் | கல்டோ | |

| | தமிழ் | குருவிக்காரர் மொழி | பிறமொழிகளில் |
|---|---|---|---|
| 23 | மந்திரி | மந்திரி | |
| 24 | பௌர்ணமி | சந்திரமோ | |
| 25 | சண்டை | லடாய் | உர்து |
| 26 | தலைவன் | நாவுனமோட்டே | |
| 27 | சுடயம் | காக்குணு | |
| 28 | சீலைப்பேன் | ஜூயி | |
| 29 | மணி | சிடியா | |
| 30 | கறி | போட்டி | |
| 31 | சோறு | தாண் | |
| 32 | குழம்பு | ஞக்காணு | |

# 14. நாடோடிகள் வாழ்க்கை

சமீபத்தில் நான் பூனாவிலிருந்து பம்பாய் வழியில் சுமார் 30 மைல்கள் சைக்கிளில் சென்றேன். வழியில் ஆடுமாடுகள் மேய்க்கும் ஒரு நாடோடிக் கூட்டத்தைக் காணும் வாய்ப்பு ஏற்பட்டது. அவர்களிடம் சில மணி நேரம் பேசிக்கொண்டிருந்தபொழுது அந்த நாடோடியர் களின், வாழ்க்கைக்கும் தமிழ்நாட்டில் வாழும் மற்ற நாடோடியர்களின் வாழ்க்கைக்கும் இடையே சில வித்தி யாசங்களைக் கண்டேன்.

அன்று நான் பூனாவில் கண்ட நாடோடியர்கள் யாதவர்களின் இனத்தைச் சேர்ந்தவர்களாம். அவர்கள் மராட்டி மொழி பேசுகிறார்கள். குடும்பத்துடன் ஒரு மரத்தடியில் சமைத்துக் கொண்டிருந்தார்கள். பேரன், பேத்திகளுடன் அவர்கள் வாழ்வதைக் கண்டு ஆச்சரிய மடைந்தேன்! அவர்கள் ஆடுமாடுகளை ஊர் ஊராக வியாபாரம் செய்துகொண்டும், அந்தந்த ஊரில் மலிவா கக் கிடைக்கும் ஆடுமாடுகளை வாங்கிக்கொண்டும் ஊர் ஊராகச் செல்வார்கள். அங்ஙனம் அவர்கள் தங்குமிடங் களில் அவர்களைப் போலவே மற்ற நாடோடியர்களும் வந்து தங்குவதுண்டு. ஒரு கூட்டத்திலிருக்கும் வாலிப னுக்கும், இன்னொரு அக்கூட்டத்திலிருக்கும் பெண்ணுக் கும் திருமணமாவதும் உண்டு. அவ்வாறு நிகழ்ந்த ஒரு திருமண வைபவத்தைச் சமீபத்தில் நான் காரைக்குடி யில் கண்டிருக்கிறேன். இந்த நாடோடித் திருமணம் சுமார் மூன்று நாட்கள் வரையில் மிகவும் விமரிசையாக நடந்தது. சுமார் ஆயிரம் ரூபாய் வரையில் செலவு செய் தார்கள்! திருமணமானதும் பெண்ணை அழைத்துக் கொண்டு அந்தக் கூட்டம் புறப்படும் நாளில் புறப்பட்டு விட்டார்கள்?

மறுபடியும் பெற்றோர்கள் தம் பெண்ணைக் காண வேண்டியதாக இருந்தால் நான்கு ஆண்டுகளோ அல்லது பத்து ஆண்டுகளோ ஆகும் என்றும் சில பெற்றோர்கள் தங்கள் பெண்களை மறுபடியும் பார்க்கும்பொழுது அவர்களுக்குப் பேரன் பேத்திகளும் இருந்தனவென்றும் கூறினார்கள்.

போக்குவரத்து வசதிகள் நிறைந்திருக்கும் இக்காலத்திலேயே இந்த நிலை என்றால், போக்குவரத்து வசதிகள் இல்லாத அக்காலத்தில் இவர்கள் எப்படி இருந்திருப்பார்களோ? ஆனால் இவர்களைப் பொறுத்தமட்டில் இந்தக் காலமும் அந்தக் காலமும் எல்லாம் ஒன்றுதான்!

இந்த நாடோடி வாழ்க்கையால் ஒரே இன மக்களுக்குள் பல மொழிகளும், பல பழக்கங்களும், உடைகளும் ஏற்பட்டு விட்டன! இதன் காரணமாக இவர்களிடையே தெரியாத்தனமாக சண்டைகளும் கூட நிகழ்ந்ததுண்டு. வெவ்வேறு மொழி பேசுவதால் இரவில் ஒரு கூட்டத்திற்கும், மற்றொரு கூட்டத்திற்கும் அடையாளம் தெரியாமல் "கள்ளர் கூட்டம் என்று கருதி சண்டை ஏற்பட்டதாக நாடோடி ஒருவர் என்னிடம் சொன்னார்.

நிலையான இடமில்லாத இந்த நாடோடிகள் ஒவ்வொரு இடத்திலும் சுமார் பத்துப் பதினைந்து நாட்கள் தங்குவார்கள். ஆடோ மாடோ குட்டி ஈன்றாலும் சரி, அல்லது யாருக்காவது குழந்தை பிறந்தாலும் சரி, அச்சமயத்தில் ஒரே இடத்தில் சுமார் ஒரு மாதம்கூட இவர்கள் தங்கிவிடுவார்கள்.

இதைப்போல் பலவிதமாக வியாபாரம் செய்யும் நாடோடியர்களைக் கண்டு, பல ரசமான சம்பவங்களையும் கேட்டறிந்திருக்கிறேன்.

மைசூர்—குண்டல்பேட்டையில் நான் நான்கு நாட்கள் தங்கியிருந்தேன். ஒருநாள் இரவு எட்டு மணி இருக்

கும். சுற்றுப் பக்கங்களிலிருக்கும் ''ஹள்ளி'' (கிராமம்) அருகிலிருந்து மாடுகளை விலைக்கு வாங்கி வந்த பத்துப் பதினைந்து பேர், நான் தங்கியிருக்கும் இல்லத்திற்கு எதிரில் இரவு எட்டு மணிக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஓட்டி வந்தது சுமார் ஆறு மாடுகள் இருக்கும்.

''இந்த மாடுகளை இரவு ஒன்பது மணிக்குமேல் ஓட்டிக்கொண்டு போவதாக அவர்கள் கூறினார்கள். இரவு ஒன்பது மணிக்குமேல் குண்டபேட்டையிலிருந்து கூடலூர்—நிலம்பூர் மார்க்கமாகப் போனால் வழியில் ''பண்டிபூர் காடு'' குறுக்கிடுகிறது. அங்கே யானைகள் கூட இருக்கின்றன. கும்மிருட்டில் மாடுகளையும் ஓட்டிக் கொண்டு, இவர்கள் வனங்களினூடே எப்படிப் போவார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஆனால் அவர்கள் இத்தகைய பிரயாணங்களுக்கு நன்கு பழக்கப்பட்டவர்கள். ஒரு கையில் விளக்கு, இன்னொரு கையில் தடி, தோளில் குடை, பெரிய கம்பளத்துடன் காலில் ''கர்...கர்'' என்று ஓசை செய்யும் தடித்த செருப்பும் போட்டுக்கொண்டு அவர்கள் புறப்பாட்டுக்குத் தயாராகிவிட்டார்கள்!

நூறு மைல்—இருநூறு மைல்கூட அவர்கள் போவார்களாம்! குறுக்கு வழியில் நடந்தும், மாடுகளின் மேல் உட்கார்ந்தும் மணிக்கு ஆறு மைல் வேகத்தில் செல்லும் இவர்கள் ஓர் இரவில் சுமார் ஐம்பது மைல்கூடப் போவார்களாம். காலை சுமார் ஏழு அல்லது எட்டு மணிக்கு ஓர் ஊர் போய்ச் சேர்ந்ததும், அங்கே விற்பனையாகும் மாடுகளை விற்றுவிட்டு, அன்று பகல் அங்கேயே மரத்தடியில் மாடுகளுடன் தாங்களும் நன்றாகத் தூங்கி, மீண்டும் இரவு எட்டு மணிக்குப் பிரயாணத்தைத் தொடங்குவார்கள்.

இரவில் நடந்து செல்லும் இவர்களது வருகையை எதிர்பார்த்து வழியில் சுமார் பத்துப் பதினைந்து டீக்

கடைகளை மலையாளிகள் வைத்துக்கொண்டிருப்பதாக வும் சொன்னார்கள். காட்டு வழியில் போகும்போது இவர்களுக்கு உற்ற துணை எண்ணெய்ப் பந்தம். ஏதா வது கொடிய மிருகம் குறுக்கிட்டால் உடனே பந்தத்தைக் கொளுத்திக் கொள்ளுவார்கள்.

''தீ'' என்றால் காட்டு விலங்குகளுக்குப் பயம். அதி லும் பத்துப் பதினைந்து பெரிய பந்தங்களை ஏக காலத் தில் கொளுத்தினால் யானை, கரடி, புலி எதுவானாலும் ஓட்டம் பிடிக்கத்தான் செய்யும். அவ்வாறு விரட்டி யடித்த பிறகு மறுபடியும் அந்தப் பந்தத்தை மண்ணைக் கொண்டு அணைத்து விடுவார்களாம்.

இரவில் ஆடுமாடுகளுக்கு நடந்து செல்வது அவ்வள வாக கஷ்டமிருக்காது, அதுவும் மாடுகள் போகும் வழி யில் புல்லை மேய்ந்து கொண்டேதான் போகும்.

இங்ஙனம் இரவில் நடந்து செல்லும் பொழுது உங் களில் யாருக்கேனும் மறக்கமுடியாத அனுபவம் ஏற்பட்டி ருக்கிறதா என்று கேட்டேன். ''ஓ! இருக்கிறது!'' என்று ஒருவன் சொன்னான். அவன் சொன்னது உண்மையில் நடந்ததோ இல்லையோ எனக்குத் தெரியாது. சம்பவம் இதுதான்:-

ஒரு சமயம் ஒரு காட்டு வழியே சென்று கொண்டிருக் கையில் ஒரு மனிதர் தட்டுப்பட்டாராம். முதலில் கள்ளக் கூட்டத் தலைவனோ என இவர்கள் சந்தேகப்பட்டார் கள். பிறகு பேச்சுக் கொடுத்ததில் அவர் அப்படிப்பட்ட வரல்ல என்பது தெரிந்தது. சுமார் பத்து மைல் நடந்த பிறகு ஒரு தேநீர் கடைமுன் மாடுகளை நிறுத்திவிட்டு எல்லோரும் தேநீர் குடிக்க உள்ளே சென்றார்கள். வழி யில் தட்டுப்பட்ட மனிதரும் கடைக்குள் வந்தார். விளக்கு வெளிச்சத்தில் அவரைக் கண்டதும், நாடோடிக் கூட்டத் திலிருந்த ஒருவன் நெடுஞ்சாண்கிடையாக, அவர் காலில்

விழுந்து வணங்கினான். கடந்த ஐந்து, ஆறு ஆண்டு களாகத்தான் அவன் மாட்டு வியாபாரம் செய்துவரு கிறான். வந்தவரோ, ஒன்றும் தெரியாமல் விழித்தார். பிறகு மாட்டு வியாபாரியே தனது கதையைச் சொன் னான்.

இப்பொழுது மாட்டு வியாபாரியாக இருக்கும் இவன், முன்பு திருட்டுத் தொழிலில் ஈடுபட்டிருந்தவனாம். அன்று அவனுக்கு பத்து பேர் சகாக்கள். இரவு காலங்களில் ஆடுமாடுகளை ஓட்டிவரும் நாடோடியரை மடக்கி அவர் களது பணத்தையும் ஆட்டையும் கொள்ளை அடித்து வாழ்க்கை நடத்தி வந்தார்கள். அப்படி இருக்கும் பொழுது ஒருநாள் இந்த மகானை அவர்கள் காட்டு வழி யில் மூட்டை முடிச்சுடன் கண்டார்கள். அவரிடம் பணம் ஏதாவது இருக்குமென்று நினைத்து இவரையும் வழி மறித்திருக்கிறார்கள். இவரோ தம்மிடமிருக்கும் பொருள் களை எல்லாம் கொடுத்துவிடுவதாகவும் ஆனால் தாம் மூன்று கேள்விகளுக்கு மட்டும் பதில் கூறும்படியும் சொன் னார். கள்ளர் கூட்டத் தலைவன் என்ற முறையில் அவனே கேள்விகளுக்குப் பதிலளிக்கவும் ஒப்புக்கொண் டான்.

மகான் கேட்டார்:

1. இவ்வளவு ஆண்டுகளாக திருடி நீங்கள் என்ன சேர்த்து வைத்திருக்கிறீர்கள்?

2. தூங்குவதற்கு ஆண்டவன் இரவைக் கொடுத் தார். எத்தனை நாட்கள் நீங்கள் நிம்மதியாகத் தூங்கி னீர்கள்?

3. உன் மனைவியைப் பார்த்து உன் மகன், ''அம்மா! அப்பாவுக்கு என்ன வேலை?'' என்று கேட்டால் அவள் என்ன சொல்லுவாள் என்று நீ எதிர்பார்க் கிறாய்?''

இந்த மூன்று கேள்விகளுக்கும் நீ பதில் சொல்லிய பின் தரையில் இருக்கும் என் பொருள்களை எடுத்துக்கொள்ளுங்கள். நான் கோவணத்துடன் போகிறேன் என்று கூறி இவர் நடந்து சென்றார்.

இந்தக் கேள்வி எல்லோருடைய உள்ளத்தையும் தொட்டிருக்கிறது. அன்று முதலே திருட்டுத் தொழிலை விட்டுவிட்டு, மாட்டு வியாபாரம் தொடங்கியிருக்கிறான். மற்றவர்களும் ஏதோ தொழில் செய்கிறார்கள் என்று கூறி முடித்தான்.

இந்தச் சம்பவம் உண்மையாகவே என் உள்ளத்தைத் தொட்டுவிட்டது.

# 15. கோடை அங்கி

'கோடை-அங்கி' என்பது ஓர் இன மக்களைக் குறிக்கும். நீலகிரிக்கும் கோடைக்கானலுக்கும் பெங்களூருக்கும் மற்ற மலைப் பகுதிகளுக்கும் கோடை காலத்தில் கீழ்த் தேசத்திலிருந்து வரும் குடு குடுப்பைக்காரனைத்தான் 'கோடங்கி' என்கின்றனர். கீழ் ஊர்களிலிருந்து வரும் குடுகுடுப்பைக்காரன் மலைப் பகுதியில் கோடை காலத்தில் அங்கு வெயில் இருந்தாலும், அங்கு வீசும் குளிர்க் காற்றைத் தாங்க முடியாமல் நீண்ட அங்கியை அணிந்து கொண்டோ அல்லது ஒரு கம்பளியை அங்கி போல் போர்த்திக் கொண்டோ இருப்பதால், அவனைக் ''கோடைக்காலத்து அங்கி அணிந்தவன்'' என்ற கருத்தில் மலைப் பிராந்தியத்தில் வாழும் மலைவாசிகள், ''கோடை அங்கி'' அல்லது ''கோடங்கி'' என்ற காரணப் பெயரிட்டு அழைக்கின்றனர்.

இந்தக் குடுகுடுப்பைக்காரன், சென்னை, கோவை, பாண்டி, சேலம் முதலிய உஷ்ணப் பிரதேசங்களில் இரவு ஒரு மணி, இரண்டு மணிக்குத் தெருத் தெருவாக வருவதைக் காணலாம். அந்தநேரத்தில் அவர்கள் மயானத்திற்குப் போய் மந்திரம்சொல்லி விட்டு வருவார்கள் என்றும் சிலர் கூறுகின்றனர். சிலர் 'இவர்களுக்கு அடங்கிய சில தேவதைகள் உண்டு அவைகளை நடு ஜாமத்தில் வணங்கிய பின்தான் முதல் மூன்று ஜாமங்களில் வீடு வீடாக ஏதாவது சொல்லி விட்டுப் போவார்கள். அவர்கள் சொல்வது நல்லதாயும் இருக்கும். தீமையாயும் இருப்பது உண்டு.' என்று கூறுவர்.

இந்தக் குடுகுடுப்பைக்காரர்கள், உஷ்ணப் பிரதேசத்தில் ஜாமத்தில் தங்களுடைய குறியைச் சொல்லிவிட்டு,

காலையில் சுமார் நான்கு ஐந்து மணிக்கு ஏதாவது ஒரு வீட்டு திண்ணையில் படுத்துத் தூங்கி விடுவார்கள். பிறகு காலை 7 மணிக்கு எழுந்து அவர்கள் அன்றிரவு எந்தெந்த வீதிகளில் ஜாமக்குறி சொன்னார்களோ அந்தத் தெருக் களில் பழைய துணிமணிகளை பிச்சைக் கேட்பார்கள். நம் மிடம் பிச்சை வாங்கிய துணிகளை, இவர்கள் அழகாக தைத்துப் பழுது பார்த்து அன்று மாலை சந்தைக்கோ கடை வீதிக்கோ வரும் ஏழை மக்களுக்கு விற்பனை செய் வதைக் காணலாம்.

மலைப் பிராந்தியத்தில் கோடங்கியர் (குடுகுடுப்பைக் காரன்) இரவு காலங்களில் வருவதில்லை. காரணம் அங்கு குளிர் அதிகம். திடீர் திடீரென்று மழையும் பெய்யும். ஆகையால் அவர்கள் காலையில் ஆறு மணிக்கு வீடு வீடாகவும், லைன்லைனாகவும் பாடி பாடியாகவும் ஹள்ளி ஹள்ளியாகவும் சென்று வருகிறார்கள். அப்பொழுது ஒரு நீண்ட அங்கியை அணிந்து வருகிறார்கள். அந்த அங்கியும் இரண்டு பாகமாக இருக்கிறது. முன் பகுதியில் இருக்கும் பாதி அங்கியை நீக்கினால் அவர்களுடைய நெஞ்சில் ஒரு பித்தளைத் தகட்டில் ''காளி''யின் உருவம் செய்து தொங் கிக் கொண்டிருப்பதைக் காணலாம். அதைத் திறந்து காட்டி, 'இந்த வீட்டில் வியாதி தேவதை இருக்கிறது. கெட்ட காற்று இருக்கிறது. ஆகையால், சில சடங்கு களைச் செய்து அவைகளை ஓட்டுகிறேன்' என்றும், ஒரு சேவல், துணி, பணம் முதலியவைகளை வாங்கிக் கொண்டும் போவார்கள். பிறகு ஆறு மாதம் வரையில் அந்தப் பக்கமே தலையைக் காட்டமாட்டார்கள். உண்மை யாகவே ஏதாவது கூறித் துணி வாங்கிக் கொண்டு போகும் உத்தமரும் உண்டு.

ஆனால் என் குடும்பத்துடன் இரவில் படுத்திருக்கும் பொழுது இந்த கோடாங்கியோ (மலையில்) அல்லது குடுகுடுப்பைக்காரனோ ஜாம நேரங்களில் ஏதாவது சொல்

லும் குரல் கேட்டதும், உடனே நான் என் காதுகளை கெட்டியாக மூடிக்கொண்டு, என் மனைவியையும், என் மகளையும் மூடிக் கொள்ளும்படி சொல்லி விடுவேன். நீண்ட நாட்களாக நான் இப்படிச் செய்யும் கருத்திற்கு என் வீட்டில் காரணம் கூறவில்லை. ஒரு நாள் என் மனைவி காரணம் கேட்டாள்.

''இதைப்போல் இரவில் இவர்கள் கூறும் விஷயங்கள் சில சமயங்களில் சிலருக்குத் திகில் தரக் கூடியனவாகவும் இருக்கும். ஆகையால், அவர்கள் கூறும் விஷயம் நமக்குப் பலிக்காமல் இருக்க என்ன செய்ய வேண்டும் என்று பல்லாண்டுகளாக பல பகுதிகளில் வாழும் இந்த இன மக்களிடம் கேட்டேன். சிலர் வழி சொல்ல மறுத்தார்கள். சிலர் உண்மையைச் சொன்னார்கள். அதாவது; அவர்கள் ஜாமத்தில் கூறும்போது, அவைகள் நம்முடைய காதுகளில் கேட்காமலிருந்தால், அவர்கள் சொன்ன ஜாமக் குறிப்புகள் பலிக்காதாம்.

இந்த இன மக்களுக்குத் தமிழ் நாட்டில் இந்தப் பெயர் வழங்குகிறது என்றால் மற்ற, ஊர்களில் என்ன பெயர்கள் வழங்குகின்றன தெரியுமா?

தெலுங்கு நாட்டிலும், கன்னட நாட்டிலும் இவர்களை 'திம்மண்ணகாரு' என்றும், பூனா, பம்பாய், கல்கத்தா முதலிய பகுதிகளில் ''சுக்காலிகள்'' என்றும், ''ஊந்த'' என்றும் கூறுகின்றனர். இந்த இன மக்கள் இந்தியாவில் எப்பகுதியில் வாழ்ந்தாலும், இனப் பெயர்கள் தான் மாறுபடுகின்றனவே யன்றி, அவர்களுடைய பழக்க வழக்கங்கள், மொழி, தொழில்கள் எதுவும் மாறுபடுவது இல்லை.

# 16. நாடோடி ஹிப்பிகளின் மூடவாழ்க்கை

என் நண்பர்கள் ஹிப்பிகளைப் பற்றி (Hippies) தாங்கள் ஏன் ஆராய்ச்சி செய்யக்கூடாது'' என்று நீண்ட நாட்களாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நானும் அதைப்பற்றி அடிக்கடி யோசனை செய்து வந்தேன்.

திடீரென்று ஒரு நாள் கல்கத்தா போகும் மெயில் வண்டியில் ஒரு ஹிப்பிப் பெண் போகிறாள். அவளைப் பகலிலேயே இரண்டு மூன்று ஆண்கள் மாறி மாறி முத்த மிட்டார்கள். இதைக் கண்டதும் அவர்கள் ''ஹிப்பீஸ்'' என்று தெரிந்து கொண்டாலும், அவர்கள் எங்கே போகி றார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அவர்களுள் ஓர் ஆணை அணுகி, ''நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

அவன் முதலில் என்னை நன்றாக மேலிருந்து கீழ் வரையில் பார்த்துவிட்டு, ''என்னைப் பற்றி, எனக்கே கவலை இல்லை. உனக்கேன் கவலை?'' என்று சாந்தமாகக் கூறினான்.

இன்னும் சிறிதுநேரம் கழித்து, நானும் என் நண்பரும் வேண்டுமென்றே காப்பி வாங்கினோம். ''எங்களுடன் காப்பி சாப்பிடுகிறீர்களா?'' என்றேன்.

''நன்றி உங்களுக்குக் கஷ்டம் வேண்டாம்'' என்று கூறிவிட்டுச் சற்றுத் தள்ளி நின்று கொண்டான். அது முதல் தடவை அன்று. அதைப்போல் கோவா கடற்கரை யிலும், பம்பாய், பூனா முதலிய இடங்களிலும் வாழும்

ஹிப்பீஸ் அனைவரும் ஒரேவிதமான பதிலைத்தான் கூறு கின்றனர். அன்று முதல் இவர்களை ஆராயவேண்டும் என்று, சில மாதங்களை ஒதுக்கி, அவர்களைப் பற்றி ஆராயத் தொடங்கினேன். அந்த ஆராய்ச்சியின் முடிவு என்ன தெரியுமா? நாட்டில் கலகம் செய்யும் சிலரைப்பற்றி நம் நாட்டு மக்களும், நம் அரசாங்கமும், ''அவர்கள் நமக்குப் பெரிய தலை வேதனை'' என்று கூறுகின்றனர் அல்லவா? ஆனாலும் கலகக்காரர்களுக்குப் பிறர் எடுத் துச் சொன்னால் ஒரு காலத்தில் அவர்கள் கலகம் செய்யா மல் நாட்டு மக்களுடன் சேர்ந்து விடுவார்கள். ஆனால் இந் தியர்களில் 25 சதவீதம் ஹிப்பிகளாக மாறினால், உலகம் அழியும் வரையில் அவர்களை மாற்றவே முடியாது. அந்த 25 சதவீதத்தினர் மீதியிருக்கும் 75 சதவீதம் மக்களையும் மாற்றிக் கடைசியில் உலகம் முழுவதும் ஒன்றுக்கும் உத வாத மக்களாக்கிவிடுவர். இறுதியில் மக்கள் சமூகம் பூண் டோடு அழிந்தே போகும் என்பது திண்ணம்.

ஆதிவாசிகளைப்பற்றி ஆராயும் எனக்கு இவர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. காரணம் வீதியில் அலையும் ஆடுமாடு, நாய், கழுதை முதலிய மாக்களுக்கும் ஒருவிதக் கட்டுப்பாடு ஒழுங்கு முறை இருக்கின்றன. ஆனால் ஹிப்பிகளோ மாக்களுக்கும் கீழான பழக்கமுடைய மக்களாக வாழ்கின்றனர்.

தலைப்பைக் கண்டதும் ஆச்சரியப்படவேண்டிய தில்லை. இன்னும் சில ஆண்டில் இவ்விதமானதொரு ''ஜாதி'' தோன்றினாலும் தோன்றும். அப்படித் தோன்றி னால் அதில் மக்கள் திரள் திரளாகச் சேர்ந்துவிடுவார்கள். அதுதான் ஹிப்பியர்களின் வாழ்க்கை. அத்தகைய வாழ்க்கை முறையில் சேர்ந்துகொள்ள விரும்புகிறவர்களும் சேர்ந்து இருப்பவர்களும் யாரென்றால், அவர்கள்தாம் இந்தியாவின் வருங்கால மாணிக்கங்களாகிய கல்லூரி வாலிபர்களாவர்.

கோவை மாணவர் மகாநாட்டில் தமிழ் நாட்டு முதல் வர் டாக்டர் திரு மு. கருணாநிதி அவர்கள் தம் மன முடைந்து பேசியது.

இன்று மாணவர் உலகத்தில் பல்வேறு நாகரிகங்கள் அலங்கோலங்களாக வந்து கொண்டிருப்பதை நான் கண்டு கண்டு மனம் புண் அடைந்திருக்கிறேன். மாணவ நண் பர்கள் அப்படி வந்திருந்தால் திருத்திக்கொள்ளவேண்டும். தலையிலே வைத்திருக்கின்ற கிராப்பைத் தாங்க அவ் வளவு பெரிய தூண்கள் தேவையில்லை.

ஏற்கனவே இளைத்துப் போயிருக்கின்ற மாணவர்கள் தங்களது உடம்பை எடுப்பாக எடுத்துக்காட்டவேண்டும் என்பதற்காக அவ்வளவு பிடிப்பாக (டைட்டாக) உடை களை அணிய வேண்டிய அவசியமில்லை. அப்படி ஒன்றும் உடைப்பஞ்சம் நாட்டிற்கு வந்து விடவில்லை.

''இவர்கள் திராவிட மாணவ முன்னேற்றக் கழகத் தைச் சேர்ந்தவர்கள் என்பதை எடுத்துக் காட்டுகின்ற வகையில், நண்பர்களே! உங்களது உடைகள் இருந்தாக வேண்டும்.

இப்போது இருக்கின்ற உடைகளில் நீங்கள் மாற்றம் செய்து கொண்டாக வேண்டும். நான் எல்லோரையும் சொல்லவில்லை. சில பேரை நான் பார்த்தேன்.

இன்றைக்கு இந்த மாணவர்களுடைய நோய் அதிகாரி களைக்கூடப் பற்றியிருக்கிறது. எங்கள் தலைமைச் செய லகத்திலே இருக்கிற அதிகாரிகளைக்கூட பற்றியிருக்கிறது.

அந்த அளவுக்கு இன்றைக்கு அந்த நோய் பரவிக் கொண்டேயிருக்கிறது. அந்த நோயைத் தடுத்தாக வேண் டும்.

புதிய புதிய நாகரிகங்களை உருவாக்குபவர்கள் மாண வர்கள்தான்.

ஆகவே அந்த அநாகரிகங்கள் தமிழ் நாட்டிலே பரவாமல் தடுத்திடவேண்டும் என்று மாணவ நண்பர்களை எல்லாம் கேட்டுக் கொள்கின்றேன்.

இது மாணவ அன்பர்களால் தான் முடியும். முறியடிக்கவும் இயலும்'' என்று டாக்டர் கருணாநிதி பேசினார்.

இன்று இந்தியாவில் வாழும் வாலிபர்கள் தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்படாதவர்களாகவும் தங்களுடைய உடை, நாகரிகம் பற்றி ஓர் ஒழுங்குமுறையைப் பின்பற்ற வேண்டும் என்ற எண்ணமில்லாதவர்களாகவும், தலைக்கு எண்ணெய் போட வேண்டுமே என்ற கவலையும் கூட இல்லாதவர்களாகவும் வாழ்கின்றனர். அவர்களைப் பார்த்து, பெரியவர்கள் ஏதாவது கூறினால் ''தற்காலத்தின் நாகரிகம்'' என்று பதில் கூறுகின்றனர். ஆனால் மறைந்த மேதை உயர்திரு அண்ணா அவர்கள் சில ஆண்டுகளுக்கு முன் ஒரு மாணவர் கூட்டத்தில், ''சுமார் பத்தாண்டுகளுக்குப் பின், மாணவர்களின் போக்கையும், வாலிபர்களின் போக்கையும் நினைத்துப் பார்த்தால்,—கற்பனை செய்து பார்த்தால்,—என் கதைகளையே நம்பக் கூடாத அளவு பயங்கரமான பாதையில் உலகம் நடந்து கொண்டிருப்பதைக் காண்கின்றேன்?'' என்று கூறினார். இன்னும் கொஞ்ச காலமானால் பெண்கள் தலையா? அல்லது ஆண்களின் தலையா? என்று பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்குத் தற்காலத்தின் வாலிபர்களின் போக்கு விளங்குகிறது.

ஆண்களும் பெண்களும் ஒரே மாதிரியான ஜிப்பாவும், தடித்த துப்பட்டி வேட்டியும் அணிந்துகொண்டு வீதியில் போவதைக் கண்டால், ''கற்றவர்களைக் காட்டிலும், கல்லாதவர்களே நல்லவர்கள்'' என்று பாரதியார் கூறியது நினைவில் வந்து நிற்கிறது. மேலும், தலையில் எண்ணெய் போடாமல் இன்று திரியும் வாலிபர்களின் வாழ்க்கை,

அவர்களின் எதிர்காலத்தில் கண்களுக்கு ஊனத்தை அவர் களே தேடிக்கொள்வதைப் போலாகும்.

மேலும், வாலிபர்கள் உடலை ஒட்டியதைப் போல் காற்சட்டைகள் (Pants) அணிவதால், அவர்களுக்குப் பிற் காலத்தில் தோல் சம்பந்தமான வியாதிகள் வருவதோடு சுமார் 40—45 வயதில் ஆண்களுக்கு அறுவை சிகிச்சை செய்துகொள்ள வேண்டிய நிலையையும் உண்டாக்கிக் கொள்ளுகின்றனர்.

இந்தியாவில் பம்பாய், டில்லி, கல்கத்தா முதலிய இடங்களில் வாலிப ஆண்களும் பெண்களும் ஹிப்பிகளைப் போல் உடை அணியாவிட்டாலும் நீண்டதோர் அங்கியை அணிந்து கொண்டும், தலைக் கூந்தலை அப்படியே தொங்கவிட்டுக் கொண்டும் வீதியில் நடந்து செல்வதைக் காணலாம். இதற்குக் காரணம் சிலர் தங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் தாம் இயேசுவும், புத்தரும் என்று கூறு கின்றனர்.

ஆனால் ஹிப்பியர் சமுதாயத்திற்குக் குறிப்பிட்ட தொரு வாழ்க்கை வழியோ கொள்கையோ, குறிக் கோளோ கிடையாது. வாழ்க்கையில் எப்படியிருந்தாலும் சரி "சாப்பிடவேண்டும். சந்தோஷமாகவும் இன்பமாக வும் இருக்கவேண்டும்" வீடு, வாசல், குழந்தைகள், மனைவி, சகோதரன் சகோதரி, பெற்றோர் முதலியவர் களைப் பற்றி எவ்விதமான கவலையுமில்லை. கவலை யும் படுவதில்லை.

இவர்களுடைய வாழ்க்கையில் சகோதரர்கள் என்ற பாகுபாடும் இல்லை. ஏதோ ஓர் ஆணுக்கு ஒரு பெண் என்று ஜாலியாகக் காலத்தைக் கழிக்கவேண்டும். மேலும், தங்களுடைய உடையின் அலங்கோலத்தைப் பற்றியோ, அது அசுத்தமாக இருக்கிறது என்பதைப் பற்றியோ, கவலையில்லாத ஒரு மனிதக் கும்பல் என்றே இவர்களைக் கூறலாம்.

கிடைத்ததைச் சாப்பிடவேண்டும்; நினைத்தஇடத்தில் தூங்கவேண்டும். இவர்கள் தங்களுடைய உடல் அழகைப் பற்றியும், சுகத்தைப் பற்றியும் வாழ்க்கையில் முன்னேற்ற மடைய வேண்டுமென்பதைப் பற்றியும் சிறிதும் எண்ணு வதில்லை. இந்தியாவின் நாகரிகத்திற்கும், பண்பாட்டுக் கும் உகந்ததாக இல்லாமல் மோசமான வாழ்க்கையை நாடி நடந்து செல்லும் ஒரு கூட்டம் என்றே இவர்களைக் கூறலாம்.

இவர்களுடைய குறிக்கோள் என்ன தெரியுமா? நாகரிகத்தையும் ஒழுங்கையும் சட்டைப்பண்ணாமல் சோம்பேறியாக வாழ்வது.

இவர்கள் கூட்டம் வளர்ந்தால் இந்தியாவில் வாழும் வாலிபர்களின் வாழ்க்கை வீணாகிவிடும் என்பது திண் ணம். மேலும் அமெரிக்காவிலும், மற்ற மேலை நாடுகளி லும் சேரியில் வாழும் மக்களுக்கு இது போன்ற வாழ்க்கை முறை மிகவும் உபயோகமாக இருக்கின்றது. மேலை நாடுகளிலும் சேரிகள் நிறைந்து இருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. தற்காலத்தில் மேலை நாட்டு ஹிப்பி களைப் பார்த்து நல்ல குடும்பத்து இந்திய மாணவ மாணவிகளும் அவர்களைப் போல் நடக்க ஆரம்பித் தால் பிற்காலத்தில் எதற்கும் உதவாதவர்கள் என்ற நிலையை அடைவது மட்டுமல்லாமல் நம் நாட்டுக்கு மிகுந்த கேட்டினையும், அன்னிய நாட்டார் நம் நாட்டின் மேல் சுலபமாகப் படை எடுக்க வசதியையும் ஏற்படுத்தி நாட்டுப்பற்றும் இல்லாமற் செய்துவிடும். ஆகவே ஹிப்பி களை உடனே இந்தியாவிலிருந்தே நீக்கவேண்டும்.

''இந்தியாவில் பண்டைக்காலத்தில் தாடியையும், மீசையையும் தலைமயிரையும் வளர்த்துக் கொண்டு சந்நியாசிகள் காட்டில் வாழ்ந்தார்கள்.'' என்று இந்தி யாவின் ஹிப்பிகள் கூறுகின்றனர். ஆனால் ஹிப்பிகளோ சந்நியாசிகளைப் போல் நாட்டிலேயே வாழ்ந்து எல்லா

வற்றையும் வெறுத்து மக்கள் கூட்டம் நிறைந்த இடங்களிலும் நிர்வாணமாகக் காட்சியளித்துத் தங்கள் சொந்த நாட்டையே குட்டிச்சுவராக்குகின்றனர்.

''ஹிப்பியர்களால் இந்திய நாட்டுக்கு ஒரு கெடுதலுமில்லை'' என்று டில்லி மந்திரி கூறினார். ஆனால் பிற்காலத்தில் இவர்களால் ஏற்படும் தலைவலி சொல்ல முடியாததோர் வேதனையாக இந்திய அரசுக்கு வந்து முடியும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. இதை அரசு எழுதி வைத்துக் கொள்ளவும். இது என் அனுபவம். இதைத் தெரிந்து கொண்டுதான் இலங்கை பிரதமர் திருமதி பண்டாரநாயகா ''எந்த ஹிப்பியும் இலங்கைக்குள் வரக் கூடாது'' என்று சட்டம் கொண்டுவந்துவிட்டார். அது போற்றக் கூடியதாகும்.

# 17. பூனா நாடோடி யாதவச்சி

சமீபத்தில் நான் பூனா சென்றிருந்தபோது, சில பூனா-நாடோடிகளான யாதவர்கள் தங்களுடைய நூற்றுக் கணக்கான ஆடுகளைப் பக்கத்தில் இருக்கும் வயல்களில் பட்டிக் கட்டி வைத்துவிட்டு, மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு பேசிக் கொண்டிருந்ததைக் கண்டேன். அவர்களைக் கண்டதும் நான் அவர்கள் நாடோடிக் கும்பலைச் சேர்ந்தவர்கள் என்று தெரிந்து கொண்டேன். ஆனால் எந்த இனத்து மக்கள் என்று மட்டும் தெரிந்து கொள்ளவில்லை. காரணம், அவர்கள் பேசும் மொழியைக் கேட்டதும், 'தெலுங்கு மொழி' என்று மட்டும் தெரிந்து கொண்டேன். பூனாவில் இவர்கள் ''எப்படி தெலுங்கு பேசுகிறார்கள்'' என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ''அவர்களிடம் பேச்சுக் கொடுக்க வேண்டுமே என்று நினைத்தேன். வழிகாட்டியின் உதவியால் பேச ஆரம்பித்தேன். அவர்களிடம் பேசிய பின், அவர்கள் நாடோடிகளாக இருக்கும் காரணத்தையும், அவர்கள் பண்டைக் காலத்தில் நாட்டை ஆண்டவர்கள் என்பதையும் அவர்கள் யாதவர்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும் தெரிந்து கொண்டேன். ஆனால், அவர்கள் தெலுங்குடன், மராட்டியும், இந்தியும் கலந்து பேசுகிறார்கள். ஆந்திரப் பிரதேசமோ தமிழ்நாடோ எங்கு இருக்கிறது என்று அவர்களுக்குத் தெரியாதாம். ஆனால், அவர்கள் மூலம் கேட்ட ஒரு நாடோடிக் கதை தான் இது:

''வெகு காலத்திற்கு முன் எங்கள் முன்னோர்கள் ஒரு பெரிய மலைப் பகுதியைத் தங்களுக்குச் சொந்தமாக வைத்துக் கொண்டு, அங்கேயே தங்களுடைய ஆடு, மாடுகளை வளர்த்துக் கொண்டு வந்தார்கள். ஆடுகளின்

தோல், பால் இறச்சி முதலியவைகளை வியாபாரம் செய்து கொண்டு வந்தார்கள். இந்த ஆயிரக் கணக்கான ஆடுகளை எப்படி மேய்ப்பார்கள் தெரியுமா? ஆடுகளுடன் ஓடி ஓடி மேய்க்கமுடியுமா? ஆகையால் ஆண்களும் பெண் களும் குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு ஆடுகளை மடக்கி னால், எங்களுடன் பட்டி நாய்களும் ஆடுகள் சிதறி ஓடா மல் மடக்க உதவி செய்யும். இன்றும், அப்படித் தான் மேய்க்கின்றோம். அக்காலத்தில் எங்களுக்கெல்லாம் அரச னைப்போல் தலைவன் இருந்தான். அவனுக்கு அழகான ஒரு பெண் குழந்தை இருந்தது. அக்குழந்தைக்கு ஒருவயது ஆவதற்குள், காட்டை ஆண்ட தலைவன் இறந்துவிட் டான். காட்டின் தலைவன் இறந்ததும் காட்டின் முறைப் படி புதிய தலைவனை மக்கள் தேர்ந்தெடுத்தார்கள்.

இறந்துபோன தலைவனுடைய மனைவி, குழந்தை யுடன் காட்டில் ஒரு பகுதியில் பொதுமக்களைப் போல், காலங்கழித்து வந்தாள். ஓர் தலைவனுடைய மகளுக்கு என்னென்ன கற்றுக் கொடுக்க வேண்டுமோ அவைகளை யெல்லாம் அவளுக்குக் கற்றுக் கொடுத்தாள் தாய். திற மைக்குத் தகுந்தாற்போல் அவளுக்கு வீராயி என்று பெயர் அமைந்திருந்தது. வீராயி வீரத்தோடு நற்குணத்திலும் சிறந்து விளங்கினாள். அவளுக்குத் திருமணம் ஆகும் காலம் வந்தது. அக்காலத்தில் காட்டின் வழக்கப்படி மற்றொரு மலையில் வாழும் தலைவனுடைய மகனைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினாள். அந்த மலை யின் தலைவனுடைய மகனும் வீராயியைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினான். இதைத் தெரிந்து கொண்ட வீராயியின் தாய், அம்மலையில் வாழும் தலைவ னுடைய மகனைச் சந்திக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாள். வழித் துணைக்கு ஒரு வேலைக்காரியையும், வீராயியின் தாயார் அனுப்பினாள். தன்னிடமிருந்த இரு குதிரைகளை இருவரும் சவாரி செய்யக் கொடுத்தாள். வீராயியின் குதிரை மிகவும் அழகானது. அதை அவள்

குட்டி முதல் தன் குழந்தையைப் போல் வளர்த்து வந்தாள். அதனை ''பாலி'' என்று அழைப்பாள்.

மேலும் அது ஓர் அதிசயக் குதிரை, வீராயியிடம் நன்றாகப் பேசும். தாயிடம் வீராயி விடைபெற்றுக் கொள்ளும் பொழுது, அவள் தாயார் ஒரு சிறிய போர்வையை அவளிடம் கொடுத்து, ''வீராயி! இந்தப் போர்வையைப் பத்திரமாக வைத்துக் கொள். இது உன்மேல் இருக்கும் வரையில் உனக்கு ஓர் ஆபத்தும் வராது'' என்று கூறினாள். வீராயி தன் தாயார் கொடுத்த போர்வையை எடுத்துக்கொண்டு ''பாலி''யின் மீது அமர்ந்தாள். வேலைக்காரியும் தன் குதிரையின் மேல் அமர்ந்தாள். இருவரும் பிராயணமானார்கள். அப்பொழுது கோடைக் காலமாதலால் வீராயிக்குத் தாகம் உண்டானது. போகும் வழியில் மலை அருவி ஓடும் ஓசை கேட்டதும் உடனே வேலைக்காரியைக் கூப்பிட்டுக் கொஞ்சம் தண்ணீரைக் கொண்டு வரச் சொன்னாள். வேலைக்காரி ''உனக்குத் தாகமாக இருந்தால், குதிரையை விட்டுக் கீழே இறங்கி, பக்கத்திலிருக்கும் அருவியில் போய் தண்ணீர் குடி. இனி நான் உன் வேலைக்காரி இல்லை.'' என்று கோபமாகக் கூறினாள். ''நாமும் கோபமாகப் பேசினால், நடுக்காட்டில் இவள் என்ன செய்வாளோ'' என்று பயந்த வீராயி, குதிரையை விட்டுக் கீழே இறங்கிச் சென்று தண்ணீர் குடித்துவிட்டு வந்தாள். வீராயியின் வருத்தத்தைக் கண்டு, ''உன் தாயாருக்குச் செய்தி தெரிந்தால் அவள் உள்ளம் உடைந்து போவாள்'' என்று ஒரு சப்தம் மந்திர அங்கியிலிருந்து உண்டானது. பதில் ஒன்றும் சொல்லாமல் குதிரையின்மேல் ஏறிக் கொண்டாள். சிறிது தூரம் சென்றதும், மறுபடியும் தண்ணீர் குடிக்க தன் குதிரையைவிட்டு இறங்கினாள் வீராயி. அப்படி இறங்கும்பொழுது, தன் தாயார் கொடுத்த போர்வையைத் தன் குதிரையின் மீதே வைத்துவிட்டாள். உடனே அதுதான் தக்க தருணம் என்று நினைத்த வேலைக்காரி, அந்தப் போர்வையை எடுத்து, தான் போர்த்திக்கொண்டு, வீராயியின் குதிரை

மீது ஏறிக் கொண்டாள். "இனிமேல் அவளுக்குப் பலம் இல்லை. பலம் எல்லாம் போர்வையில்தான் இருக்கிறது" என்று கூறி, வீராயியின் உடைகளை எல்லாம் வேலைக்காரி அணிந்துகொண்டாள். வீராயியிக்கு வேலைக்காரி தான் அணிந்திருந்த உடைகளைக் கொடுத்தாள்.

வீராயி ஒன்றும் வாயைத் திறக்கவில்லை. காரணம் நடுக் காட்டில் வேலைக்காரி என்ன செய்வாளோவென்று பயந்து போனாள். வீராயியின் பயந்த சுபாவத்தை அறிந்த வேலைக்காரி அவளைப் பார்த்து, "இந்த விஷயங்களை யாரிடமும் சொல்லக் கூடாது. நான் தான் வீராயி என்றும் நீ தான் வேலைக்காரி என்றும் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால், இந்தக் காட்டுக் காளிக்கே உன்னைப் பலி கொடுத்து விடுவேன்" என்று கூறி அவளிடம் சத்தியம் வாங்கினாள். ஆனால் வீராயியின் குதிரைக்குப் பேசத் தெரியும் என்றும், அதற்கு எல்லா விஷயங்களையும் விளக்கமாகச் சொல்லக்கூடிய சக்தி உண்டென்றும் வேலைக்காரிக்குத் தெரியாது. வேலைக்காரி—வீராயியாக மாறினாள்.

இவ்வாறு இருவரும் பிராயணம் செய்து, தாங்கள் சேர வேண்டிய மலையின் சிகரத்தை அடைந்தார்கள். இவர்கள் வருவதை மலையின் உச்சியிலிருந்து, எல்லைக் காவலன் கண்டு, தன் தலைவனிடம் கூறினான். தலைவன் தன் மகனை அனுப்பி, அவர்களை அழைத்து வரச் செய்தான். வேலைக்காரிதான் மற்றொரு மலையின் தலைவனின் மகள் என்றும், அவளே தன்னுடைய வருங்கால மனைவி என்றும் நினைத்து, அவளைத் தன் தகப்பனிடம் அழைத்துச் சென்றான். ஆனால் வீராயி ஒரு மூலையில் மௌனமாக நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுது தற்செயலாகத் தலைவன் அங்கே வந்தான். வீராயி 'பாலி'யைக் கட்டியிருந்த லாயத்துக்குள் நின்றுகொண்டு பாலியிடம் பேசிக் கொண்டிருந்தாள். அவ

ளைக் கண்டதும் தலைவன் ''நீ யார்?'' என்று கேட்டான். தன் சத்தியத்தின் நிபந்தனைப்படி, ''நான் திருமணப் பெண்ணுடன் துணையாக வந்தேன். என் வேலை முடிந்து விட்டது. தாங்கள் ஏதாவது வேலை கொடுத்தால் செய்கிறேன் என்று கூறினாள்.

'என்னுடைய ஆயிரக்கணக்கான ஆடு மாடுகளை ஒரு பையன் இருந்து காட்டில் மேய்த்துக்கொண்டு கஷ்டப்படுகிறான். அவனுடன் ஆடு மாடு மேய்க்க நீயும் காட்டுக்குப் போக விருப்பமாக இருந்தால் போ'' என்றான். மறுநாள் முதல் வீராயி ஆடு மாடுகளை மேய்ப்பதற்குக் காட்டுக்குப் போக ஆரம்பித்தாள். சில நாட்கள் சென்ற பின் வேலைக்காரி வேடம் தரித்த தலைவி, தலைவனின் மகனிடம், ''ஐயா, எனக்கு ஒரு வரம் கொடுக்க வேண்டும். நான் வரும்போது ஏறிக் கொண்டு வந்த குதிரை மிகவும் துஷ்டத்தனமுள்ளது. ஆகையால் அதைக் கொலை செய்து விடும்படி கேட்டுக் கொள்கிறேன்'' என்று கூறினாள். அவள் பேச்சைக் கேட்டதும் தலைவனுடைய மகன், உடனே 'பாலி'யை கொலை செய்து விடும்படி தன் வேலைக்காரனுக்குக் கட்டளையிட்டான்.

இக்கட்டளையை வீராயி கேட்டதும், உள்ளம் துடித்தாள். உடனே வீராயி அந்த வேலைக்காரனிடம் சென்று, கொஞ்சம் பணம் கொடுத்து, ''பாலி குதிரையை கொலை செய்த பிறகு, அதன் தலையை இந்த மலையின் எல்லையிலிருக்கும் சுரங்கத்தில் வைத்து விடு. நான் ஆடு மாடுகளை மேய்க்க போகும் பொழுதும் வரும் பொழுதும் பார்த்து விட்டுப் போகிறேன்'' என்று கூறினாள். அந்த வேலைக்காரனும் அப்படியே செய்தான். மறுநாள் முதல் வீராயியும், மாட்டுக்காரப் பையனும் ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு போகும் பொழுது வீராயி அந்த மலையடிவாரத்திலிருக்கும் குகைக்குள் போவதும் குதிரையின் தலை

யிடம் பேசுவதும், அது வீராயிக்கு ஆறுதல் கூறுவதும் வழக்கமாகிவிட்டன. பிறகு மலையடிவாரத்தில் வீராயி தன் தலையை அவிழ்த்துச் சீர்படுத்திக் கொண்டை போட்டுக் கொள்வதுவழக்கம். வீராயியின் தலைமயிர் பொன்நிற மாக இருந்ததால், மாட்டுக்கார பையன் அவள் கூந்தலை பார்த்துப் பார்த்து ரசித்து, கடைசியில் ஒரு மயிரை எடுக்க முயன்றான். இக்காட்சியைக் கண்ட வீராயி, ''காற்று வீச, மாட்டுக்காரப் பையன் குல்வாய் பறக்க வேண்டும். பிறகு கிடைக்க வேண்டும்'' என்று பாடுவாள்.

அப்படியே காற்று வீசும். குல்லாய் பறக்கும். அவன் குல்லாயை தேடி அலைந்து எடுப்பதற்குள் வீராயி தன் தலைமயிரைச் சிக்கெடுத்து சீவிக் கொண்டை போட்டுக் கொள்வாள். பையனுக்கு வீராயியின் கூந்தல் கிடைக்காத தோடு நாள்தோறும் வீராயி பாட அவன் குல்லாய் பறந்து போகும். அதை அலைந்து எடுப்பதற்குள் போதும் போதுமென்று ஆகிவிடும். இதனால் கோபம் அடைந்த பையன், தன் தலைவனிடம் எல்லாச் செய்திகளையும் எடுத்துக் கூறினான்.

இவைகளை எல்லாம் கேட்டத் தலைவன், நாளைக்குக் கவனிக்கிறேன் என்று கூறி, வீராயியின் பின்னால் மறைந்து மறைந்து சென்றான். வீராயி குகையில் குதிரை யின் தலையுடன் பேசுவதும், பாட்டுப் பாடியவுடன் பையனுடைய குல்லாய் பறப்பதும் தலைவன் நேரில் கண் டான். தலைவன் வீராயியின் எதிரில் சென்று எல்லா விஷ யங்களையும் நான் தெரிந்து கொண்டேன். நீ, என்னிடம் கூறினால் தான், சத்தியம் தவறியவளாவாய்; ஆனால் உன் துக்கங்களை ஆடுமாடுகளிடம் கூறும்பொழுது நீ தான் வீராயி. தலைவனின் மகள். அவள்தான் வேலைக் காரி. அவள் போலி வேடம் அணிந்து என் மகனை ஏமாற் றிக் கொண்டு இருக்கிறாள் என்பதை அறிந்துக் கொண் டேன். சரி உடனே வீட்டுக்குவா!'' என்று கட்டளை

யிட்டு அழைத்துச் சென்றான். அவன் வீட்டில் வீராயிக்கு ஆடை ஆபரணங்களையும், மணிகளையும் கொடுத்து அலங்காரம் செய்து, தன் மகனை அழைத்து, எல்லா விஷயங்களையும் கூறி, வீராயியைக் காட்டினான். வீராயியின் அழகைக் கண்டு, மகன் வியந்து அவளைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தான்.

உடனே தலைவன், தன் காட்டில் பறையடித்து தன் மகனுக்குத் திருமணம் என்று தெரிவித்தான். குறித்த நாள் வந்ததும் தன் மகனை ஒரு பக்கமாகவும், மணப் பெண் வேடத்தில் இருந்த வேலைக்காரியை ஒரு பக்கமாக வும், எதிர்மலை தலைவனின் மகள் வீராயியை மற்றொரு பக்கத்திலும் உட்கார வைத்தான். காட்டில் வாழும் மக்கள் நாடோடி யாதவர்களின் கூட்டம் பந்தல் முழுவ தும் நிரம்பி விட்டது. அப்பொழுது தலைவன் தம் மக்களை நோக்கி, ''தலைவன் இறந்த பின், தலைவிக்கு விரோதமாகச் சதி செய்து, ஒரு காட்டின் வழக்கத்தையே கெடுத்து, துரோகம் செய்த வேலைக்காரி ஒருத்திக்கு என்ன தண்டனை கொடுக்கலாம். நீங்களே கூற வேண் டும்'' என்று அங்கே கூடி இருந்த தன் இன மக்களாகிய நாடோடியர்களைக் கேட்டான். உடனே பக்கத்தில் தலைவி வேடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த வேலைக் காரி சும்மா இருக்கக் கூடாதா?

''தன் வினை தன்னைச் சுடும்'' என்பதுபோல் ''தலைவரே'' அப்படிப்பட்ட சதிகாரியைப் பெரிய பீப்பா யில் போட்டு, அந்தப் பீப்பாயில் காட்டு முள்ளும் சேர்த்து அவளை மலையிலிருந்து கீழே உருட்டி விடவேண் டும். அதுதான் அவளுக்குத் தகுந்த தண்டனையாகும்'' என்று கூறினாள்.

இவ்வாறு கூறியதும், தலைவன் ''நீ செய்த சதி வேலைக்கு ஏற்ற தண்டனையை நீயே சொல்லி விட்டாய். அந்தச் சதி வேலைக்காரி நீ தான்'' என்று தலைவன் கூறி,

அங்குக் கூடியிருந்த சபையோருக்கு எல்லாச் செய்திகளை யும் விளக்கமாகக் கூறிமுடித்தான். இவைகளைக் கூறியதும் வேலைக்காரி நடுநடுங்கி விட்டாள். அவளுடைய அபாய நிலையைக் கண்ட வீராயி, ''தலைவரே!'' என்று வணங்கி அவளை மன்னித்துவிடுங்கள். ஆனால், அவள் நாடோடி யாக ஆடுமாடுகளை மேய்க்கவேண்டும் என்றும், ஒரு வாரத்திற்கு ஒரு மலையில் நம்முடைய ஆடுமாடுகளை நாடோடியாகவே மேய்க்க வேண்டும் என்றும் கட்டளை யிடுங்கள்.

அவளைத் திருமணம் செய்து கொள்ளும் வாலிபனும் இந்த நிபந்தனைக்கு உட்பட்டவனாக இருக்க வேண்டும் என்றும் கட்டளை இடுங்கள் என்றாள். உடனே வேலைக் காரி உயிர்பிச்சை கிடைத்தால் போதும் என்று நினைத் துச் சம்மதித்தாள். பிறகு அன்றே அக்கூட்டத்தில் வீராயிக் கும் தலைவனின் மகன் வில்லாளனுக்கும், வேலைக்காரிக் கும், அவள் தேர்ந்தெடுத்த ஒரு வாலிபனுக்கும் திருமணம் நடைபெற்றது.

பல்லாண்டுகளுக்குப் பிறகும் வேலைக்காரியான யாதவ சந்ததியார்கள் நாடோடிகளாக ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு இருந்தனராம். அவர்களுடைய சந்ததி யார்கள் தான் நாங்கள். எங்களுடைய முன்னோர்கள் இந்தியாவில் ஏதோ ஒரு பகுதியில் அரசர்களாகவும் மிராசுதாரர்களாகவும் வாழ்ந்துகொண்டிருந்தார்களாம். காலப்போக்கில் அன்னிய அரசனின் படையெடுப்புக்குப் பயந்து சிதறுண்டு இன்று இந்தியாவில் பல பகுதிகளில் பல இனமக்களாய் வாழ்ந்து வருகின்றனர் என்று கூறி முடித் தார்கள்.

அதுவரையில் பொறுமையாக கதையைக் கேட்டுக் கொண்டிருந்த நான், அந்த மரத்தடியில் வாழ்ந்த நாடோடி, யாதவர்களை புகைப்படம் எடுத்துக் கொண்டு பூனாவுக்கு ஒரு வணக்கம் செய்துவிட்டு வந்தேன்.

# 18. எங்கும் வாழும் இலம்பாடியர்

**தா**லியைக் கழுத்தில் அணியாத இலம்பாடியர்களைக் காண வேண்டும் என்ற எண்ணம் எனக்கு நீண்ட நாட்க ளாக இருந்து வந்தது. ஆனால் பூனா, பம்பாய், ஐதரா-பாத், சோலாப்பூர், யாத்கீர் முதலிய இடங்களுக்குச் சென்றால் அல்லவா இவர்களைக் காண முடியும்? என்று மனவேதனைப் பட்டிருந்தேன் நான். என் மனவேதனை யைப் பூர்த்தி செய்தார்கள் சில பெரியவர்கள். சில நாட் கள் நான் பூனாவில் என் நண்பர்களின் இல்லத்தில் தங்கி னேன். பலரிடம் இலம்பாடியர்களைப் பற்றித் தகவல் சேகரிக்கும் போது, அவர்கள் கூறியதைக் கேட்டுக் கலங் கிப் போனேன். ''நாம் ஏன் இவ்வளவு தூரம் பூனாவுக்கு வந்தோம்'' என்ற எண்ணமே என் உள்ளத்தில் உதய மானது.

''நீங்கள் அவர்களைக் காண்பது அவ்வளவு உகந்த தல்ல'' என்றனர் சிலர்.

''நீங்கள் அவர்களிடம் பழகும்போது, தமிழ்நாட்டுக் காட்டுவாசிகளிடம் பழகியதைப் போல் பழக வேண்டாம். இவர்கள் ஒரு தனி ரகம். பெண்களுக்குக் கோபம் வந்தால் உடனே 'பளீர்' என்று அறைந்து விடுவர்,'' என்றனர் சிலர்.

''உங்கள் மேல் எவளாவது கண் வைத்தால் நீங்கள் மறுபடியும், திரும்பவே மாட்டீர்கள். அவ்வளவுதான், அவள் காலடியிலேயே விழுந்து கிடப்பீர். அவள் உங்க ளுடைய குருதியைக் குடித்த பின்தான் உங்களைப் போக விடுவாள்'' என்று சோலாப்பூரில் தங்கி இருந்தபோது நண்பர் ஒருவர் கூறினார்.

''அவர்களைத் தொட வேண்டாம். அவர்களுடைய துணிகளையும் தொட வேண்டாம். திடீரென்று கோபம் வந்தால் ஆபத்தாக முடியும்,'' என்றார் என்னுடன் வந்த நண்பர். பண்டைக்காலத்தில் இவர்கள் கிராமங்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் ஆண் குழந்தைகளையும், பெண் குழந்தைகளையும் தூக்கிச் சென்று தங்களுடைய இனத்தில் சேர்த்துக் கொள்ளுவார்கள்.

இரக்கமில்லாமல் தங்களுக்குத் தீங்கு செய்தவர்களை உயிருடன் புதைத்து விடுவார்கள். இன்னும் சில பகுதியில் இருப்பவர்கள், கழுத்துவரையில் உயிருடன் புதைத்து, பிறகு தலையின் மேல் தாங்கள் பிரயாணம் செய்யும் வண்டிகளை ஓட்டிக் கொலை செய்வார்கள். இக்காரணத்திற்காக இவர்கள், ''குற்ற இலாக்கா ஆதிவாசிகள்'' என்று அரசாங்கத்தாரால் அழைக்கப்பட்டார்கள்.'' என்றார் பூனா நண்பர் ஒருவர். முதன் முதலில் பூனாவில் இவர்களுடைய தகரக் குடிசைகளைத் தேடிக்கொண்டு போகும் போது, ஆண்களும் மங்கையர்களும், ''ஆவ் ஜீ சாப்! ஆவ் ஜீ மகாராஜ்!'' என்று அன்பாக அழைத்தார்கள்.

அதைக் கண்டு, ''இப்படித்தான் முதலில் அழைப்பார்கள். அதில் தான் ஆண்களும் பெண்களும் மயங்கிப் போகிறார்கள். ஜாக்கிரதையாக இருங்கோ. நான் ஒன்றும் அவர்களை எதிர்த்துப் பேசமாட்டேன். ஏனென்றால் நான் இந்த ஊர் வாசி'' என்று கூறி அப்போதைக்கப் போது எனக்குப் ''புரூக் லாக்ஸ்'' கொடுத்துக் கொண்டே இருந்தார் என் நண்பர்.

ஓர் இலம்பாடியது இல்லத்தின் வெளியில் ஓர் ஓட்டைக் கட்டிலின் மேல் பாய் ஒன்று போட்டார்கள். அதன் மேல் நாங்கள் உட்கார்ந்தோம்.

''உங்களைப் பார்ப்பதற்காக இவர் சென்னையிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறார். உங்களைக் கண்டதும் இவருக்கு உண்டான சந்தோஷமே சொல்ல முடியாது'' என்று இந்தியிலும், மராட்டி மொழியிலும் கலந்து பேசினார் நண்பர்.

சுமார் பத்து நிமிஷங்களில் அவர்களிடம் பழகும் தன்மையையும், நான் நடந்து கொள்ள வேண்டிய விதத்தையும் தெரிந்து கொண்டேன்.

பிறகு அவர்களை நான் கூறுவதற்கெல்லாம் தலை ஆட்டும்படி செய்து விட்டதைக் கண்ட நண்பர், ''ஏது அவர்கள் உங்களை மயக்குவார்களோ வென்று நானும் என் மனைவியும் பயந்தோம். ஆனால், நீங்கள் சொல்வதற்கெல்லாம் அவர்கள் மயங்கி அல்லவா பதில் கூறுகிறார்கள்'' என்று கூறிச் சிரித்தார் நண்பர்.

இவர்களை விடக் காட்டுமிராண்டியர்களை எல்லாம் புகைப்படங்கள் பிடிக்கும் போது, அவர்களைத் தொட்டும். அவர்களுடன் சேர்ந்து நடனமாடியும் பழகி இருக்கும் நான், இந்தப் பூனா இலம்பாடியர்கள் காட்டிய அன்பு எவ்வளவோ மேல் என்று நினைத்துக் கொண்டேன்.

இலம்பாடியர்களின் தாயகம் ஐதராபாத். அவர்கள் அங்கிருந்துதான் மற்ற ஊர்களுக்குப் பரவினார்கள். இந்த இலம்பாடிகளே, ''பிரிஞ்சாரி, பஞ்சாரி, பாய்பாரி, சுஜாலி, சுக்காளிகள்'' என்று தாம் தாம் வாழும் ஊர்களுக்குத் தகுந்தாற்போல் அழைக்கப்படுகின்றனர்.

அவர்கள், ''தொப்புளுக்குக் கீழ் பெரிய பாவாடை கட்டும் பழக்கமுள்ள மங்கையர்கள் எல்லாருமே எங்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள்'' என்று கூறுகின்றனர். ஐதராபாத்தில், நைஜாம் அரசராக இருந்த காலத்தில் இவர்கள்

சற்றுச் செல்வாக்குடன் வாழ்ந்தார்கள்'' என்று எல்லாப் பகுதிகளிலும் வாழும் மக்கள் கூறுகிறார்கள்.

## அவர்களின் தோற்றம்:

''இலம்பாடிகள் தமக்குள் சேர்ந்து பெரிய கும்பலாக வாழ்ந்தாலும் வாழ்வார்களே ஒழிய, மற்ற ஆதிவாசிகளுடன் சேர்ந்து வாழவோ, அவர்களுடன் சேர்ந்து வீதியில் நடக்கவோ, விரும்பாத ஓர் இனமக்கள்'' என்று அவர்களின் அருகில் வாழும் மற்றவர்கள் அடிக்கடி கவனித்துக் கூறுகிறார்கள்.

நான் பார்த்து ஆராய்ச்சி செய்தமட்டும் இலம்பாடிப் பெண்கள் தண்ணீர் எடுக்கக் கிணற்றின் அருகில் சென்றாலும் தனித்துத் தங்களுக்குள் தான் பேசிக்கொள்கின்றனர். இவர்கள் தங்கள் குடிசைகளை அடிக்கடி பிரிப்பதற்கு வேண்டிய வகையில் மண்ணால் நான்கு பக்கங்களிலும் சுவர் எழுப்பி, அதன்மேல் தகரத்தால் கூரை அமைத்துக் கொள்ளுகிறார்கள். காற்றினால் தகரங்கள் நகர்ந்து போகாமல் கூரையின் மேல் பெரிய பெரிய பாறைகளை வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய குடிசைகளுக்கும், வீடுகளுக்கும் ''ஜூப்டி'' என்று பெயர்.

இவர்கள் தங்கள் இல்லங்களுக்குள் தங்குவதை விட, மரத்தடியிலும், திறந்த வெளியிலும் வாழ்வதற்கு அதிகம் விரும்புகிறார்கள். இயற்கையை இவர்கள், ''கடவுள்'' என்று கருதுகிறார்கள். நாடோடி வாழ்க்கையை அதிகமாக விரும்புகிறார்கள்.

''உங்களுடைய வீட்டுக்குள் காண, எனக்குத் தயவு செய்து அனுமதி கொடுக்க வேண்டும்'' என்று இலம்பாடி மங்கையர்களைக் கேட்டேன். ''ஓ அந்தர் மே ஜூப்டி!'' என்று பேசிக் கொண்டு என்னை உள்ளே வரும்படி கைக் சைகை காட்டினாள் ஒருத்தி.

சைகை காட்டியதுதான் தாமதம் அவளுக்கு முன் நான் உள்ளே நுழைந்தேன். (அது 20'×20') பரப்புள்ள சுமாரான ஓர் 'ஹால்' மாதிரி இருக்கிறது. அந்த ஹாலின் சுவர்களில் பல பலகைப் பரணைகளை அமைத்திருக் கிறார்கள். அந்தப் பரணையின் மேல் பெட்டிகள், படுக் கைகள், அரிசி மூட்டைகள், வெங்கலப் பாத்திரங்கள், மண்பாண்டங்கள், ஒரு பக்கத்தில் விறகு மற்றொரு பக்கத் தில் கூடைகள் எல்லாவற்றையும் வைக்க வேண்டிய முறைப்படி அழகாகக் காலரியைப் போல் அடுக்கி இருக் கிறார்கள். எவ்விதமான சாமானும் தரையில் வைத் தில்லை. தரையில் வைக்காததற்குக் காரணம் கேட்ட தற்கு, "குழந்தைகள் விளையாடவும், இரவில் தாராள மாகப் படுத்துறங்கவும், இது வசதியாக இருக்கும்" என் றனர்.

மேலும், இப்படிச் செய்வது தரையைத் தினந்தோறும் சுத்தமாகப் பெருக்குவதற்கும் வாரம் ஒருமுறை மெழுகு வதற்கும் வசதியாக இருக்கிறதாம்.

ஒவ்வொரு வீட்டிற்கும் வெளியில் ஆடுகள் கட்டு வதற்கு ஒரு சிறு இடமும், அதன் பக்கத்தில் ஆட்டுச் சாணத்தைச் சேர்ப்பதற்கு ஒரு சிறு குழியும் வெட்டி வைத் திருக்கின்றனர். அவர்கள் அந்த ஆட்டுச் சாணத்தை வாரம் ஒரு முறை உழவர்களுக்கு விற்பனை செய்கிறார் கள். தங்களுடைய வீட்டுக்கு வெளியில் ஒரு சதுர அடி அளவில் சதுரமான பாறைகளைக்கொண்டு நான்கு அடி உயரத்தில் ஓர் அறையைப்போல் கட்டியிருக்கிறார்கள். அதற்குமேல் கூரை ஒன்றுமில்லை. மொட்டையாக இருக் கின்றது. அதுதான் ஒவ்வொரு வீட்டாருக்கும் குளிக்கு மிடம். ஒவ்வோர் ஊரிலும் வாழும் மக்களுடைய பழக்க வழக்கங்களைத் துருவித் துருவிக் காணும் போது, அவர் கள் எவ்வளவு சிக்கனமாயும், சாதாரணமாயும் வாழ் கிறார்கள் என்பது நமக்கே ஆச்சரியமாக இருக்கும்.

மற்றொரு விசித்திரமான ஒரு பந்தல் வீட்டைப் பார்த்தேன். அது திருமணப் பந்தலைப்போல் பொது வாகக் கட்டப்பட்டிருந்தது. அது, ''மங்கையர்களுக்கு மட்டும் என்று கூறினார்கள். அந்தப் பந்தலுக்குள் ஒரு திண்ணை கட்டி இருக்கிறார்கள். அத்திண்ணை, மங்கையர்கள் சுமார் நான்கைந்து பேர் உட்காருவதற்கு வேண்டிய அளவு இருக்கிறது. அதன் மேல்தான் மங்கை யர்கள் உட்கார்ந்து பேசுவதும், தலை பின்னுவதும், முதலிய வேலைகளைச் செய்கிறார்கள். இவர்கள் ஜடை பின்னுவது, நம்நாட்டு மங்கையர்களைப்போல் அல்ல. ஒருத்தியின் தலையில் சுமார் பத்துப் பதினைந்து சிறுசிறு ஜடைகள் பின்னப்பட்டு, அவை ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு விதமான வெள்ளிச் சங்கிலிகள் தொங்குவதைக் காணலாம்.

வேலையின் நிமித்தமாகவும் வியாபாரத்தின் நிமித்த மாகவும் பிரயாணம் செய்யும்போது தங்களுடைய சாமான்களை மூட்டையாகக் கட்டி மாட்டின் மேலோ, கழுதையின் மேலோ, எடுத்துச் செல்கின்றனர். இவர்கள் நடந்தே செல்லுவார்கள். ஆண்கள் சுமார் ஐந்தடி உயரத்துக்குக் குறைவானவராக இல்லை; அவர்கள் நல்ல பலசாலிகள். மயிர்கள் அடர்ந்த தேகக் கட்டுடன் இருக் கிறார்கள். தலைப்பாகை கட்டுகிறார்கள். சிலர் வெள்ளை அல்லது சிவப்பு, ''பைஜாமா'' அணிகிறார்கள். சிலர் வேட்டியைக் கீழ்ப்பாய்ச்சாகக் கட்டிக் கொண்டிருக் கிறார்கள்.

பெண்களின் உடையைத் தூரத்திலிருந்துக் கண்டால், அதில் பல வர்ணங்களைக் காணலாம். ஓர் இலம்பாடி மங்கை அணிந்திருக்கும் ஆபரணங்களின் எடை சுமார் பத்துப் பன்னிரண்டு பவுண்டு இருக்கும். மங்கையர்கள் தலையில் ஒரு துணியைப் போர்த்திக் கொண்டிருக்கிறார் கள். அதன் நான்கு ஓரங்களிலும் வெள்ளி நாணயங்

களை வைத்துத் தைத்திருக்கிறார்கள். அதன் பெயர், ''குங்குட்டு'' என்பர்.

கழுத்திலும் காதுகளிலும் சுமக்கக் கூடாத அளவு வெள்ளி வளையங்கள், சங்கிலிகள், தோடுகள், மூக்கில் ஒரு பெரிய வளையம் முதலியவைகளை அணிந்திருக் கிறார்கள். இடுப்பு வரையில் ஒரு துணியில நாணயங் களைக் கோர்த்து வேட்டி கட்டுவதைப்போல், கட்டி இருக் கிறார்கள். அதற்குப், ''பேட்டியா'' என்று பெயர். அதைப் போலவே மார்பில் இருக்கும் எல்லாப் பொருள் களுக்கும், ''காஞ்சிடி'' என்று பெயர்.

இலம்பாடிப் பெண்களுக்கு எல்லா நகைகளையும் விட உகந்ததும், காதலினிடமும் பெருமையாக வாங்குவது மான ஆபரணம் என்னவென்றால், தங்கள் கையில் அணியும் தந்தத்தால் செய்யப்பட்ட வளையல்தான். அதன் அகலம் இரண்டங்குலம் இருக்கும். அதில் காதலன் தன் பெயரைப் பொறித்துக் கொடுப்பான்.

இவர்கள் அணியும் ஜாக்கட்டு விசித்திரமானது. ஜாக்கட்டுக்கு மேல் முகம் பார்க்கும் கண்ணாடி வில்லை களை வைத்துத் தைத்திருக்கிறார்கள். மார்பகத்திற்கு மேலும் வயிற்றுக்குக் கீழும், பெரிய வட்டமானக் கண்ணாடித் துண்டுகளை ஜாக்கட்டுடன் இணைத்திருக் கிறார்கள். அந்த ஜாக்கட்டில் ஒன்றைக் கேட்டு வாங்கிக் கொண்டேன். அதை வாங்குவதற்குள் நான் பட்ட பாடு எனக்குத் தான் தெரியும். அந்த ரவிக்கையில் அணிந் திருக்கும் ஒவ்வொரு மணிக்கும், கண்ணாடிக்கும் ஒவ் வோர் அதிசயமான அர்த்தம் இருக்கிறது. ஜாக்கட்டின் முதுகுப் பக்கத்தில் துணிக்குப் பதில் கயிற்றால் கட்ட வேண்டும். முதுகு முழுவதும் திறந்தேதான் காணப்படும்.

கைகால் விரல்கள் ஒவ்வொன்றிலும் ஐந்தைந்து மோதிரங்கள் அணிகின்றனர். மங்கையர்கள் தம் ஓய்வு

நேரங்களில் முக்கால் பகுதியை தங்களுடைய தலையைப் பின்னிக் கொள்வதற்கும் ஜாக்கட்டுகளுடனும் பாவாடைகளுடனும் கண்ணாடிகளைச் சேர்த்துத் தைப்பதற்கும் தலையில் போர்வையாக அணியும், ''குங்கட்டுக்கும்'' ஓரங்களில் பழைய வெள்ளி நாணயங்களை வைத்துத் தைப்பதற்கும் செலவழிக்கின்றார்கள். வீண் காலம் கழிப்பதை அவர்களிடம் நான் கண்டதில்லை.

இலம்பாடிகள் இடுப்புக்குப் பெல்ட் கட்டுவதைப் போல், ஒரு கால் காப்பும், பாம்பு போல் வளைந்த ஒரு கால் காப்பும், மற்றும் சில கால் காப்புக்களும் தங்கள் கால்களில் அணிந்திருக்கின்றனர். சரம் சரமாக வெள்ளிச் சங்கிலிகளைக் காதுகளிலிருந்தும், தலையிலிருந்தும் தொங்கவிட்டிருக்கிறார்கள். இவ்வளவு சுமையைச் சுமப்பதைக் கண்டால், நமக்குப் பரிதாபமாகத்தான் தோன்றும்.

காதலனால், ஒருத்திக்குக் கொடுக்கப்பட்ட தந்த வளையல்களில் மூன்றினைக் கேட்டு வாங்கிவந்தேன். மங்கை, தன் கணவன் இறந்தபின், இந்தத் தந்த வளையல்களை அணிவதில்லை. ஆனால், அதைப் பத்திரப்படுத்தித் தன் மகளுக்குக் கொடுக்கின்றாள்.

பெண்கள் தங்களுக்குள் பதிவிரதா (பத்தினி) விரதம் நோற்கும் பழக்கமுடையவர்கள். அதனால் ஆண்களுக்குப் பெருமை அதிகம். ஆண்களை விடப் பெண்கள் தான் சொத்துடையவர்கள். ''இதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டதற்கு, ''ஒவ்வொரு பெண்ணும் அணிந்திருக்கும் ஆபரணங்களே சுமார் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ளவைகள்'' என்றனர்.

வெகு காலத்திற்கு முன் இலம்பாடிகள் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பிரயானமாகும் போது, அக்கூட்டத்தில் யாருக்காவது வழியில் பிரசவமானால், அக் குழந்தையைத் தோள் வரையில் தரையில் புதைத்து விடுவார்கள். பிறகு அக் குழந்தையின் மேல் அவர்களுடைய பிர

யாண வண்டிகளை ஓட்டிச் செல்லுவார்கள். அக்குழைந் தையின் பலியால், அன்று அவர்கள் செய்யும் பிரயாணம் மிகவும் லாபகரமாக முடியுமாம். குழந்தையை இழந்தவள் புதிய ஊரில் அழகுள்ள ஒரு குழந்தையை மற்ற இன மக்க ளிடமிருந்து திருடிக் கொள்ளுவாளாம். இக்காரணங் களால் சில சமயங்களில் இலம்பாடிகள் நீலகிரிக்கு வந் தால், இன்றும் நீலகிரி, கோவை, திருச்சி முதலிய ஊர் களில் வாழும் மக்கள் தங்கள் குழந்தைகளை வெளியில் அனுப்புவதில்லை. ஏனென்றால், இலம்பாடிகள் புடைவையைப்போல் இருக்கும் தங்களுடைய பாவாடை யைச் சுழற்றித் தெருவில் விளையாடும் குழந்தைகளின் மேல் போட்டு மூடி, அப்படியே கொண்டு போவார்கள் என்ற பயம் இன்றுமிருக்கிறது. ஆனால் இது பண்டைக் காலத்தில் இருந்த ஒரு பயங்கரமான பழக்கம்; இன்று இது மறைந்து விட்டது. மேலும், இந்தியாவில் சில பகுதி களில் வாழும் இலம்பாடிகள் நல்ல அழகுள்ள குழந்தை களைத் தூக்கிச் சென்று, தங்களுடைய குழந்தைகளைப் போல், சில மலைநாட்டு ஆதிவாசிகளிடம் விற்றுவிடுவதும் உண்டு.

''இப்பழக்கங்கள் இவர்களிடம் முற்றிலும் மறைந்து விட்டன—என்று கூறுவதற்கில்லை. ஏனென்றால எங்கே யாவது சில இடங்களில் இச்சம்பவங்கள் ஒன்று இரண்டு நடக்கின்றன'' என்று பூனாவிலும் ஐதராபாத்திலும் இவர்களிடம் பழகிய பலர் கூறினார்கள்.

இந்த இலம்பாடிகளே வெவ்வேறு ஊர்களில் வெவ் வேறு பழக்கவழக்கங்களும் ஆபரணங்களும் கொண்டு வாழ்கின்றனர். தாம் அணியும் ஆபரணங்களுக்கு அவர் கள் கூறும் காரணங்கள் வித்தியாசப்படுகின்றன.

இலம்பாடியப் பெண்கள் இரவில் படுக்கும்போது, தாங்கள் அணிந்து கொண்டிருக்கும் எல்லா ஆபரணங் களையும், ''குங்குட்டு, பேட்டியா, காஞ்சிடி'' முதலிய

துணிகளையும் கழற்றிவிட்டு ஒரே ஒரு போர்வையை மட்டும் போர்த்திக் கொள்ளுகிறார்கள்.

இலம்பாடிய மங்கையர்கள் எக்காரணத்தை முன்னிட்டும் தலையில் எந்தவிதமான பூக்களையும் வைத்துக் கொள்வதில்லை.

மேலும், இலம்பாடிப் பெண் ஒருத்தி மற்ற ஆதிவாசிகளுடனும், மலை ஜாதி மக்களுடனும் கலந்து திருமணம் செய்துகொண்டு இருபதாண்டுகள் சென்றாலும், அந்தப் பெண்ணை, ''இவள் இலம்பாடி இனத்தைச் சேர்ந்தவள்'' என்று விரைவில் அடையாளம் கண்டு கூறுவார்களாம்.

''இந்த இரகசியத்தை எங்ஙனம் கண்டறிவீர்கள்'' என்று நான் கெஞ்சிக் கேட்டேன். அவர்கள் அதைக் கூறுவதற்கு மறுத்துவிட்டார்கள்.

இலம்பாடி மங்கையர்கள் மகப்பேறு காலத்தில் நம்மவரைப்போல் படுத்துக்கொண்டு குழந்தையைப் பெறுவதில்லை. குழந்தை பெறும் மங்கைக்குச் சிவப்பு ஆடையை அணிவித்து அவளை மலஜலம் கழிப்பதைப்போல் உட்காரச் செய்து, பிற மங்கையர்கள் அவளைச் சூழ்ந்துகொண்டு அவளுடைய இடுப்பைப் பிடித்து அழுத்துவார்கள். ஆனால், பண்டைக்காலத்தில் ஆண்களும், பெண்களும், பிரசவ வேதனைப்படும் மங்கையைச் சூழ்ந்து பிடித்துக் கொள்ளுவார்களாம்.

ஆண்களும் பெண்களும் கலந்துதான் மருத்துவப் பணியைப் பார்ப்பார்களாம். பிரசவ வேதனை அதிகமானால் காய்ந்த மிளகாயை நன்றாகத் தீயில் சுட்டு, வேதனை படும் மங்கையின் மூக்கின் அருகில் காட்டுவார்கள். அவள் அப்படியும் இப்படியும் மிளகாயின் நெடியில் மூக்கைத் திருப்பினால், மற்ற மங்கையர்கள் அவளைப் பிடித்து மிளகாயை நன்றாக மூக்கின் அருகில் தேய்ப்பார்கள். அந்த நெடியைத் தாங்காமல் திக்கு முக்காடித் தும்மல் உண்டாகி. அதன் மூலம் குழந்தைப் பிரவசம்

சுலபமாகி விடுமாம். குழந்தை பிறந்ததும், அக்குழந்தையை உடனே, ''மண்ணாகப் போகக் கடவாய்'' என்று மண்ணில் போட்டு விடுவார்களாம்.

குழந்தையைப் பெற்றெடுத்ததும், சிறிது நேரத்திற்குப் பின் தாய்க்கு மிளகு, சுக்கு, கொப்பறை முதலியவற்றை அம்மியில் வைத்து அரைத்து நெய்யில் கலந்து மூன்று நாட்களுக்குக் கொடுக்கின்றனர். இந்த மூன்று நாட்களுக்கும் அவளுக்குச் சேவல் குஞ்சு சூப்புக் கொடுக்கின்றனர்.

குழந்தை பிறந்தபின், தாய்க்குப் பால் சுரக்கா விட்டால் சாராயம் கொடுத்துப் பாலை அதிகப்படுத்துகிறார்கள். குழந்தை பிறந்த அன்றே மூங்கில் தொட்டிலைக் கட்டுகிறார்கள். ஐந்து வாரங்களுக்குப் பின் குழந்தைக்கு நாமகரணம் செய்கின்றனர். அன்று விருந்தும் நடைபெறும். பிரசவித்தவள் சுமார் இரண்டு மாதங்கள் வரையில் அடுப்பைத் தொடக்கூடாது.

இலம்பாடிப் பெண்கள் ருதுவானால், வீட்டின் பின் பக்கத்தில் அவளுக்குத் தனி இடம் ஒதுக்கி வைக்கின்றனர். ஆனால் இரவில் அவள் சமையலறையில் அரிசிக்கோணீயில் தான் படுக்கவேண்டும் மறு நாள் காலையில் அவள் ஓடும் ஆற்றிலாவது குளத்திலாவது குளிக்க வேண்டும். இக்காரணத்தால் தான் இலம்பாடியர்கள் குளத்திலும், ஓடும் ஆற்றிலும் குடிதண்ணீர் எடுக்க மாட்டார்கள். குளிக்கவும் மாட்டார்கள். கிணற்றின் தண்ணீரிலோ அல்லது குழாயின் தண்ணீரிலோ குடிக்கவும், குளிக்கவும் தண்ணீர் எடுத்துக் கொள்வர்.

இங்ஙனம் கிணற்றிலும், குழாயிலும் தண்ணீர் எடுப்பதற்காகத் தான் இலம்பாடிய மங்கையர்கள கூட்டம் கூட்டமாகச் செல்வதைக் காணலாம்.

ருதுவான பெண்களை ஐந்தாம் நாளோ அல்லது ஏழாம் நாளோ நம்மைப்போல் ஆடம்பரமாகச் செலவு செய்து வீட்டுக்கு அழைப்பதில்லை. அவள் ஐந்தாம் நாள் குளித்தபின் சாதாரண பெண்ணைப்போல் இருப்பாள். ஆனால் மாதவிடாய்க் காலத்திலும் மங்கையர்கள் சாதாரணமாய் ஐந்து நாட்கள் தனியாகத்தான் இருக்கின்றனர்.

## திருமணம் :

ஆண்களும் பெண்களும் வாலிபப் பருவமடைந்து திருமணப் பக்குவமடைந்திருக்கும்போது, அவரவர்கள் விரும்பும் பூக்களையும், உருவங்களையும் தங்கள் உடலில் பல பாகங்களில் பச்சை குத்திக் கொள்ளுகின்றனர். இலம்பாடியர்களுக்குள் பால்ய விவாகமே கிடையாது. பெண்கள் ருதுவானப்பின் தான் திருமணம் செய்கின்றனர். ஆண்கள் பெண்களின் அழகைக் கவனிப்பதில்லை. தேகக்கட்டுடன் இருக்கிறாளா? வென்றும் எல்லா ஆபரணங்களும் அணிந்திருக்கிறாளா? வென்றும் கவனித்துத் தான் திருமணம் செய்து கொள்கிறார்கள். மேலும், பெண்கள் பதினான்கு வயதிலும், ஆண்கள் பதினெட்டு வயதிலும் கட்டாயம் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தமுண்டு. நல்ல நாள் பார்ப்பதில்லை. ஆனால், ''சுபதினம்'' என்று சாதாரண நாளிலேயே ஒரு நாளை அவர்கள் பிரியம்போல் சொல்லி, வளர்பிறையில் திருமணம் செய்கிறார்கள். திருமணத்திற்கு முன் மணமகளது வீட்டின் முன் பக்கத்தில் ஆங்குமரத்தில் இரண்டு கால் வைத்துப் பந்தல் போடுகிறார்கள்.

மணமகன்தான் பெண்ணின் காதில் தொங்கவிடும், ''குண்டலமும், தாலியும்'' செய்துகொண்டு திருமணத்தின் முன் இரவே, பெண் வீட்டுக்கு வரவேண்டும். திருமணப் பந்தலுக்குள் முதலில் இரண்டு உலக்கைகளை

நிற்க வைத்து, கணவனும், மனைவியும் என்ற முறையில் திருமணச் சடங்கு செய்கிறார்கள். பந்தலுக்குள் நான்கு திசைகளில் நான்கு மண்பானைகளில் தண்ணீர் வைக்கின் றனர். இரண்டு உலக்கைகளுக்கும் திருமணச் சடங்கு முடிந்தபின், மணமகனையும் மணமகளையும் மணப்பந்த லில் கிழக்கு நோக்கி உட்கார வைத்துத் திருமணச் சடங்கு கள் செய்வார்கள். பிறகு மணமகனே தாலியை மஞ்சள் கயிற்றில் கோத்துப் பெண்ணின் கழுத்தில் ஏழு முடிகள் போட்டுக் கட்டவேண்டும். விதவைகளும் திருமண மாகாத மங்கையர்களும், தந்த வளையல்களையும் குண்டலங்களையும் அணிவதில்லை. திருமணத்தில் மண மகன், மணமகளுக்குக் கழுத்தில் தாலி கட்டுகிறான். முதலில் மகன் பிறந்தால், கணவன் தன் மனைவிக்கு இரண்டாவது தாலி கட்டுகிறான். இரண்டாவது மகன் பிறந்தால் மறுபடியும் மூன்றாவது தாலி கட்டுகிறான். பிறகு மூன்றையும் ஒன்றாக உருக்கிப் பெரிய தாலி செய்து தன் மனைவிக்கு மூன்று முத்தங்கள் கொடுத்து அதைக் கட்டுகிறான். தற்காலத்தில் திருமணத்தின்போது முறைப்படி சீர்வரிசைகள் கொடுக்கின்றனர்.

முதல் தாலி கட்டித் திருமணம் செய்தபின், புதிய தம்பதிகள் புதிய ஜமக்காளத்தின் மேல் உட்கார வேண் டும். பிறகு மணமகள் மணமகனுக்குச் சர்க்கரைப் பொங் கலை ஏழு அல்லது ஒன்பது உருண்டை பிடித்து ஊட்டு வாள். மணமகனும் அவ்வாறே பதிலுக்கு உருண்டைப் பிடித்து, பெண்ணின் வாயில் ஊட்டவேண்டும்.

''இது என்ன சடங்கு?'' என்று கேட்டதற்கு 'இது காதல் விளையாட்டுக்கள்' என்று கூறுகிறார்கள்.

அன்றிரவே திருமணத் தம்பதிகள் தனி வீட்டில் இருக் கின்றனர். மறுநாள் தம்பதிகளைக் குளிக்கச் செய்து, எல் லாரும் சேர்ந்து நடனமாடுவர்.

அன்று மாலை பெண்ணின் தாயாரோ அல்லது வயதான மங்கையோ மணமகளுடைய இரண்டு காதுகளிலும் இரண்டு ''குண்டலம்'' கட்டுவாள். இது, ''திருமணமானவள்'' என்பதைக் குறிக்கும் அடையாளம். இவர்களது திருமணத்தில் பிராமணர்கள் தான் திருமணச் சடங்கு செய்ய வேண்டும். பிராமணர்கள் கிடைக்காத சந்தர்ப்பத்தில் இலம்பாடிகள் காட்டில் இருந்தால், அப்பொழுது ஒரு இலம்பாடிய வாலிபனைப் பூணூல் அணியச் செய்து திருமணச் சடங்கு செய்யும்படி ஏற்பாடு செய்வார்கள்.

திருமணச் சடங்கு செய்யும் போதும் தாலி கட்டும் போதும், இலம்பாடிப் பெண்கள் கூடி நடனமாடுகிறார்கள்.

திருமணத்தில் மணமகன் தாலி கட்டுகிறான் அல்லவா? ஆனால் இப்பழக்கம் தற்காலத்தில் உண்டானது என்று கூறுகிறார்கள். காதில் இரண்டு பக்கத்தில் தொங்கும் தொங்கட்டானும், கை முட்டியில் தொங்கும் வெள்ளை மணிகளும், காலில் கொலுசும் கால் விரல்களில் காலணியும் அணிந்திருப்பது தான் திருமணத்தில் தாலி கட்டுவதைப் போல முக்கியமானவையாம். திருமணத்தன்று, வீட்டில் ஆடு வெட்டிப் பெரிய விருந்து நடைபெறும். தற்காலத்தில் சிலரிடம் காதல் திருமணம் நடைபெறுகிறதாம். எந்தத் திருமணமாக இருந்தாலும் சரி, திருமணச் செலவு பையன் வீட்டாருடையது. திருமணம் முடிந்தபின் தம்பதிகள் தமக்குள் மஞ்சள்நீர் வீசி விளையாடுகிறார்கள்.

விதவைகள் தாம் விரும்புகிறவர்களைத் திருமணம் செய்து கொள்ளலாம். விதவைகளுக்கு புதிய துணி மட்டும் கொடுத்துச் சில பகுதிகளில் திருமணம் செய்கிறார்கள். சில பகுதிகளில் விதவைகளைத் திருமணம் செய்து கொள்வதில்லை. சில பகுதிகளில், விதவையைத் திருமணம்

செய்கிறவன் 25 ரூபாயும் சில ஆடுகளும் விதவையின் குழந்தைகளுக்காகப் பஞ்சாயத்தாரின் மூலம் கொடுத்து விட்டு, பிறகு அவளைத் திருமணம செய்து கொள்ளலாம். அல்லது அவள் ஆண்களின் ஆதரவில் இருக்கலாம். கணவனை ரத்து செய்த மங்கையைத் திருமணம் செய்யும் வாலிபன், அவளை முதலில் திருமணம் செய்து கொண்டவனுக்கு அத்திருமணச் செலவைக் கொடுக்க வேண்டும்.

குழந்தைகள் இல்லாமல், அண்ணன் இறந்தால், அண்ணியைவிட மைத்துனன் சிறிய பையனாக இருந்தாலும், அவன் விரும்பினால் அவளைத் திருமணம் செய்து கொள்ளலாம். அண்ணிக்குக் குழந்தைகள் இருந்தால், அக் குழந்தைகளுக்கு 25 ரூபாயும், ஐந்து எருதுகளும் கொடுத்த பிறகு அண்ணியைத் திருமணம் செய்து கொள்ளலாம்.

இவர்களுக்குக் காய்ச்சல் வந்தால், பல பச்சிலைகளைக் காயவைத்து டப்பிகளில் தயராக நிரப்பி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். உடம்பு சுகமில்லை என்று தெரிந்ததும், உடனே டப்பிகளில் இருக்கும் மருந்தை எடுத்துக் கியாழம் போட்டுக் குடிக்கின்றனர்.

**மயானச் சடங்கு :**

மரணமடையும் தறுவாயிலிருக்கும் இலம்பாடியருக்கு வாயில் பெரிய பனைவெல்லத் துண்டை வைப்பார்கள். உறவினர்கள் வந்தபின் இரண்டாவது நாளோ நான்காவது நாளோ பாடைகட்டி அதில் மரணமடைந்தவரைப் படுக்க வைத்தவுடன் முகத்தை முழுவதும் மூடி விடுகிறார்கள். மயானத்தில் காட்டுக் கொம்புகளைக் கொண்டு, சவத்தைச் சுடுவார்கள். பிரயாணத்தில் வழியிலேயே மரணமடையும் இலம்பாடிகளை அந்தந்த இடங்களிலேயே சுடுவார்கள். தகப்பனுக்கும் தாய்க்கும் மூத்த மகன் தான் கொள்ளி வைக்கவேண்டும்.

சவத்தை மயானத்தில் கொளுத்திய பிறகு அங்கிருந்து இலம்பாடியர்கள் வாயில் புல்லை வைத்துக் கொண்டு வீடு வரையில் வருவார்கள். தங்கள் இல்லத்திற்கு வந்ததும் கை கால் சுத்தம் செய்யும்போது புல்லைத் துப்பி விடுகின்றனர்.

ஒரு வீட்டில் ஆண்கள் இறந்தால், இறந்த இடத்தில் சில சுமங்கலிகள் கூடி, அன்றே தாம்பூலத்தைப் படைப்பார்கள். உடனே அதை எடுத்து எல்லாரும் வாய் நிறையப் போட்டுக் கொள்வார்கள். மூன்றாம் நாள் மயானத்தில் எரித்த சாம்பலை ஒன்றாகச் சேர்த்து, அதில் பாலை ஊற்றிக் கலக்குவார்கள். பிறகு அதைப் புதுப் பானையில் வைத்துப் புதைத்து விடுவார்கள். அன்று மூத்த பையனுக்கு, மாமன் வீட்டில் விருந்து நடைபெறும்.

இவர்கள் கருமாதிச் சடங்கு செய்வதைக் காண வேண்டுமென்று நான் துடியாகத் துடித்தேன். ஆனால், ''அச்சடங்கை எப்பொழுது செய்வீர்கள்? அல்லது அதைப் போல் செய்து காட்ட முடியுமா?'' என்று கேட்டால் பூனாவாசிகள் கூறியது போல், ''பளீர்'' என்று அறைந்தால் என்ன செய்வது என்று பயமாக இருந்தது.

இலம்பாடியரில் ஒருவர் மரணமடைந்த பன்னிரண்டாம் நாள் இரவு கழுநீரை ஒரு புதிய பானையில் வீட்டுக்கு வெளியில் வைத்து விடுவர்.

பதின்மூன்றாம் நாள் காலையில் சுமங்கலிகள் குளித்த பின் அப்பானையைச் சுற்றிப் பாட்டுப் பாடி, நடனமாடுவார்கள். பிறகு ஒவ்வொருவராகப் பானையில் இருக்கும் கழுநீரைப் பார்ப்பார்கள். அந்தக் கழுநீரில் மாட்டின் குளம்பு, அல்லது பாம்பின் அடையாளம் அல்லது வேறு எந்த அடையாளம் தெரிகிறதோ, அந்த அடையாளம் கொண்ட உயிரினமாக, மரணமடைந்தவர், மறு ஜென்மத்தில் பிறப்பாராம். கழுநீரில் தெரியும் உருவம் பன்றியா

கவோ கழுதையாகவோ தெரிந்தால், உடனே பஞ்சாயத் தார்கள் கூடி முடிவு செய்து, தங்கள் குல தெய்வத்திற்குப் பூஜை செய்கின்றனர். அங்ஙனம் செய்தால் அந்த உருவம் மாறி மனிதனாகப் பிறப்பாராம்.

இச்சடங்கு செய்வதில் அவர்களுக்கு நம்பிக்கை அதிகம் இருக்கிறது. கைக்குழந்தை முதல் பெரியவர்கள் வரையில் இதே சடங்கைத்தான் செய்கிறார்கள். இச் சடங்குதான் அவர்களின், ''கருமாதிச் சடங்காம்.''

## பஞ்சாயத்து:

பஞ்சாயத்துத் தலைவன் ஒவ்வொரு இலம்பாடிக் கூட்டத்திலும் ஒருவன் உண்டு. அவருக்கு, ''நாய்க்'' என்று பெயர். உதவித் தலைவனுக்குக் ''கார்வாரி'' என்று பெயர். இவர்கள் பஞ்சாயத்துத் தலைவனைத் தேர்ந்தெடுக்கும் முறை உயர்ந்த நோக்கத்தையுடையது. விஷயம் தெரிந்தவராகவும், சற்றுப் பணக்காரராகவும், இரண்டு மூன்று மனைவிகள் இருப்பவராகவும், ஆங்கிலம் தெரிந்தவராகவும், தெய்வ பக்தியுள்ளவராகவும் இருப்ப வரைப் பார்த்துத் தேர்ந்தெடுக்கும்போது, மனைவிக்கும் கணவனுக்குமே தெரியாத அளவில் ஓட்டுப் போடுகிறார் கள்.

பொதுக் குற்றம் செய்கிறவர்களுக்கும், குடும்பத்தில் ஏற்படும் கணவன் மனைவி சிக்கல்களுக்கும் ஊர்ப் பஞ்சா யத்தார்களும், நாய்க்கும், கார்வாரியும் சேர்ந்து சரியான தீர்ப்பு அளிக்கின்றனர் குற்றம் செய்தவனுக்கு அதற்குத் தக்கவாறு ரூபாய் ஐந்தோ அல்லது ஆறோ அபராதம் போடப்படுகிறது. நாமும் இப்பொழுது வரும் தேர்தலில் இந்தியாவுக்குத் தொண்டு செய்யும் உண்மையான இந்திய னைத் தேர்ந்தெடுப்போமா?

## உழைத்தலும் பிழைத்தலும்:

ஆண்களும் பெண்களும் பண்டைக் காலத்தில் போர் வீரர்களுக்குப் பல வகையில் தொண்டாற்றி வந்தார்கள். இன்று சிலர் காட்டு மூலிகைகளைக் கொண்டு பலருக்கு லேகியமும், மருந்தும் செய்து கொடுக்கின்றனர்.

வாலிபர்கள் அன்றும் இன்றும், ''கோப்பன்'' என்ற ஒருவித, 'கவுண்டிக்கல்''லைக் கொண்டு பறவைகளையும், சிறுசிறு விலங்குகளையும் அடித்து வேட்டையாடிப் பிழைக்கின்றனர். காட்டு முயலை மட்டும் வலை வைத்துப் பிடிக்கின்றனர். தற்காலத்தில் சிலர் சில நிலங்களில் சிற்சில பயிர்களைப் பயிராக்குகிறார்கள். இலம்பாடியர் பலர் பாம்புக் கடிக்கு மருந்து வைத்திருக்கின்றனர். பெண்கள் காடுகளில் தங்கள் கால்நடைகளை மேய்ப்பதில் மிகவும் சமத்தர்கள்.

தற்காலத்தில் இவர்களில் சிலர் சில பகுதிகளில் சுரங்கங்களிலும், வயல்களிலும் எஸ்டேட்டுகளிலும், தொழில் செய்து வருகின்றனர். சிலர் கூலிவேலையும் செய்கிறார்கள்.

இலம்பாடியர் எல்லாம் அம்பு, ஈட்டி, கேடயம், வாள் முதலியவைகளை வைத்திருக்கின்றனர். அம்பையும் ஈட்டியையும் எறியும் பழக்கத்தைச் சிறு குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கின்றனர்.

இவர்களில் அநேகர் மைசூர்ச் சண்டையில் கலந்து கொண்டார்கள், என்ற காரணத்தால் ''பட்டா'' வைத்திருக்கிறார்கள். எனவே மைசூர்ப் பகுதிகளில் வாழும் இலம்பாடியர்கள் தங்களுக்கென்று, திப்பு சுல்தான் கொடுத்த சில நிலங்களை வைத்திருக்கிறார்கள். அதில் இவர்கள் பயிர்த்தொழில் செய்கிறார்கள்.

இவர்கள் கால்நடைகளுக்கு மருந்து கொடுப்பதில் மிகவும் சமர்த்தர்கள்.

இலம்பாடிகள் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பிரயாணம் செய்யும் போது, சில நேரங்களில் காட்டில் தங்க வேண்டிய நிலை ஏற்படுவதுண்டு. அப்பொழுது காட்டு விலங்குகளுக்குப் பயந்து, அவர்கள் தங்கி இருக்கும் இடங்களைச் சுற்றிப் பள்ளம் தோண்டி அதில் நெருப்பு மூட்டி நடுவிடத்தில் படுத்துக் கொள்ளுவார்கள்.

இத்தீயால் இம்மக்களுக்குத் தீங்குசெய்ய வரும் காட்டு மாக்களுக்கு மயக்கம் உண்டாகி கண்தெரியாமல் போகுமாம். இது இவர்களது நம்பிக்கை. மேலும், ஓர் ஊரிலிருந்து கால் நடைகளைச் சந்தைகளுக்கு ஓட்டிக் கொண்டு போகும் போது, வீதியில் ஏற்படும் புழுதிகள், தங்கள் வாயிலும், மூக்கிலும் புகாவண்ணம், மார்வாடி மதகுருவைப் போல் வாயைத் துணியால் மூடியது போல் கட்டிக் கொண்டு நடப்பார்கள்.

வேலைக்குப் போகும்போதோ அல்லது வியாபாரத்திற்குச் செல்லும் போதோ யாராவது தும்மினால் உடனே அதே இடத்தில் உட்கார்ந்து சிறுநீர் கழித்த பின் செல்லுவார்கள். இதற்குக் காரணம் ''அபசகுனம் நீங்கி விட்டது'' என்ற கொள்கையாம்.

## உணவு:

இலம்பாடியர்கள் மதுபானம் குடிப்பதுண்டு. ஒரு நல்ல நாளில் மதுபானத்திற்காக இவ்வளவு ரூபாய் செலவு செய்தேன்! என்று இவர்கள் பெருமையாகச் சொல்லிக் கொள்ளுவார்கள். சோளம் இவர்களுக்கு ஒரு முக்கிய மான உணவுப் பொருள். சிலர் சோளத்தில், ''ஜவ்வாரி ரோட்டி'' செய்து அதன் நடுவில் இறைச்சித் துண்டுகளை வைத்து, இரண்டையும் ஒன்றாகக் கடித்துக் கடித்துச் சாப்பிடுவார்கள். இங்ஙனம் சாப்பிடுவதற்கு ''ஏக்தம்'' என்று கூறுவார்கள். இதைப்போல் ஒவ்வொருவரும் நான்கு, ஐந்து ''ஏக்தம்'' சாப்பிடுவார்கள். என்னால் இரண்டு ''தம்மே'' சாப்பிட முடியவில்லை.

சிலர் பத்து ''தம் கூடச் சாப்பிடுவார்கள். சாப்பிட்ட பிறகு பெரிய செம்பு அளவு தண்ணீரைக் குடிக்கின்றனர்.

சோளத்திற்காக இவர்கள் சுமார் இருபது மைல்கூட நடக்க அஞ்சமாட்டார்கள். அராக்கு இவர்களுடைய பிரியமான பானம். ஆனால் கிடைக்காது. பெண்களும் குடித்துவிட்டு மேளம் அடித்துக்கொண்டு குலதெய்வத்திற்கு நடனமாடுவார்கள். அதை ஆண்கள் சூழ்ந்துகொண்டு பார்த்துத் தாங்களைக் கேலி செய்ய வேண்டுமென்ற ஆசை மிகுதியால் குதூகலத்துடன் இவ்வாறு நடனமாடுவார்கள். இவர்கள் இறைச்சி வகைகளில் எல்லாவற்றையும் சாப்பிடுவார்கள். திங்களன்று அவர்கள் எந்த இறைச்சியையும் உண்பதில்லை, திங்கள் தங்கள் குலதெய்வத்தின் நாளாம். அன்று மூன்று வேளையும் ''ஜவ்வாரி'' ரோட்டிதான் உண்பார்கள்.

## கடவுள் வணக்கம்:

இலம்பாடியர் எல்லாரும் கோவிலுக்குள் செல்லலாம். துல்ஜாபூர்—''அம்பாபாய் தேவி''யை இவர்கள் விசேஷமாக வணங்குகிறார்கள். அத் தேவிக்கு ஒவ்வோர் ஆண்டும், ஆடு பலி கொடுக்கின்றனர்.

இவர்களுக்கு ''நாந்தடு'' என்ற ஊரிலிருக்கும் ''சேவாபாய் தேவி'' தான் குல தெய்வம். இவர்கள் கிருஷ்ணன், காட்டு காட்டேரி, பாலசரஸ்வதி முதலிய தெய்வங்களையும் வணங்குகிறார்கள்.

சிலர் சில உருண்டையான சிறிய பாறைகளை ஒரு மரத்தடியில் வைத்து, அதற்குச் சிவப்பு வர்ணத்தைத் தடவி, அதைத் தங்களுடைய குல தெய்வம் என்று வணங்குகிறார்கள். இதைப்போல் பல சிவப்பு வர்ணங்கள் தீட்டிய தெய்வங்களைப் பூனாவில் காணலாம்.

''ஏன் சிவப்பு வர்ணங்களைத் தீட்டியிருக்கிறார்கள்?'' என்று அவர்களைக் கேட்டதற்கு அர்ச்சகர்களுக்கே அதன் பொருள் தெரியவில்லை.

இவர்கள் ஞாயிறு, செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் பூஜை செய்கிறார்கள். ''பூர்ணிமா'' என்ற நாளில்தான் இவர்கள் திருவிழா கொண்டாடுகிறார்கள்.

அன்று தங்களுடைய ஆடுகளில் கொழுத்திருக்கும் ஒன்றைத் தெய்வத்திற்கென்று காணிக்கையாகப் பலி யிட்டு விருந்து நடத்துகிறார்கள். பேய், பிசாசு, மந்திரம், சூனியம் முதலியவைகளில் இவர்களுக்கும் பூரண நம்பிக்கை உண்டு. ஆண்களும் பெண்களும் கூடி, ''கண்ணகிக்கும், கோவலனுக்கும் குரவைக் கூத்தாடு கிறார்கள். கண்ணகியையும், கோவலனையும் இவர்கள், ''வீர தெய்வங்கள்'' என்று வணங்குகிறார்கள்.

தம்பதிகளுக்குக் குழந்தைகளே பிறக்காமல் சில ஆண் டுகள் கடந்து சென்றால், தம்பதிகள் இருவரும் பிள்ளை யாரைத் தூககிப் பார்ப்பார்கள். அந்தப் பிள்ளையார் அவர்கள் கையிலிருந்து நழுவி விழுந்து விட்டால் உடனே அந்தத் தம்பதிகளுக்குப் புத்திர பாக்கியம் கிடை யாது என்று தீர்மானித்து, இரண்டாம் தாரம் திரு மணம் செய்து கொள்வர். மேலும், இவர்கள் தங்கி இருக் கும் காட்டில் யாராவது நோய்வாய்ப்பட்டாலும் மரண மடைந்தாலும் உடனே அக் காட்டுத் தேவதைக்கு ஆடோ அல்லது கோழியோ பலி கொடுத்தபின், அந்தக் காட்டை விட்டு மற்றோர் இடத்திற்குச் செல்லுவார்கள். அங்ங னம் இவர்கள் இடம் விட்டு இடம் சென்றால், ''தங்கள் மரணத்திலிருந்து தப்பிப் பிழைத்தோம்'' என்றதோர் எண்ணம் கொள்கின்றனர்.

இலம்பாடியர்களும் அந்த வியாதியும் தொடர்ந்து பிரயாணமானால், இரண்டு எல்லைகளுக்கும் மத்தியில் இவர்கள் ஓர் ஆட்டை உயிருடன் புதைக்கிறார்கள். தலை மட்டும் மேலே இருக்கும். பிறகு ஒரு எல்லையில் நின்று கொண்டு அந்த ஆட்டின் தலையின் மேல் ஒவ்வொரு வராகக் காலை வைத்து மற்றோர் எல்லைக்குத் தாண்டு வார்கள். அந்த ஆடு மரணமடையும் வரையில் அப்படிச்

செய்வார்கள். கடைசியில் ஆடு பலியானதும், எல்லாரும் அந்த வியாதி தங்களைப் பின்தொடராது என்று குதூகலத்துடன் பாட்டுப் பாடிக்கொண்டு, புதிய எல்லையில் நடந்து போவார்கள். இந்தப் பழக்கத்திற்குப் பண்டைக் காலத்தில் நரபலியே கொடுத்தார்களாம். அது எப்படி? என்று ஓர் இலம்பாடியப் பெரியவரைக் கேட்டேன். அதற்கு அவர், ''பலி கொடுக்கும் நாளன்று காலையில் பக்கத்து ஊருக்குப் போவார்கள். அந்த ஊர் மக்களில் யார் அவர்களுடைய கண்களுக்கு முதலில் தென்படுகிறாரோ அவரை அப்படியே மயக்கித் தூக்கிச் சென்று, யாருக்கும் தெரியாத இடத்தில் கழுத்து வரையில் தரையில் புதைத்து விடுவார்கள். பிறகு இலம்பாடிகள் எல்லாரும் அவர் தலையின்மேல் கால் வைத்துத் தாண்டிச் செல்லுவார்கள். அப்படியும் புதைக்கப்பட்டவனுக்கு உயிர் போகாவிட்டால், கொஞ்சம் விறகும், செத்தைகளையும் அவனுடைய தலையின்மேல் போட்டு, எண்ணெய் ஊற்றித் தீ வைப்பார்கள். இக்காட்சிகள் யாருக்கும் தெரியாமலிருக்கவும், அவன் கத்தும் குரல் யாருக்கும் கேட்காமலிருக்கவும், அந்தத் தலையைச் சுற்றிச் சுற்றி நடனமாடிக்கொண்டு கூக்குரல் இடுவார்கள். அவன் இறந்தபின் பிரயாணமாவார்கள்.

இதை வாசிக்கும் போது நமக்கு 'ஐயோ பாவம்! இப்படியுமா மக்கள் பண்டைக்காலத்தில் வாழ்ந்தார்கள்'' என்று நினைக்கிறோம் அல்லவா? ஆனால் நாகரிகமடைந்த இன்றோ ஒரு நாளைக்கு அதைப்போல் எத்தனையே கொலைகள் நடக்கின்றன அல்லவா? அன்று அவர்கள் காலை வைத்தார்கள். ஆனால் நம்மில் சிலர் இன்று லாரியையும், காரையும் ஏற்றி மக்களைக் கொலை செய்கிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம்.

ஆனால் இந்தக் கொடிய பழக்கம் இன்று இலம்பாடிகளிடம் பூண்டோடு அழிக்கப்பட்டு விட்டது'' என்று இலம்பாடியப் பெரியவர் கூறினார்.

இவர்களுக்குள் பெரிய சண்டைகளும், வியாதிகளும் வந்தால் இலம்பாடியப் பூசாரி, ''அக்கினி குண்டம்'' என்ற நெருப்புக் குவியலைக் கொண்டு, அவர்களின் குல தெய்வத்தை அழைப்பார். அப்படி அழைக்கும் போது திருமணமாகாத வாலிபர்கள் அங்கு இருக்க வேண்டும்.

அப்பொழுது அவர்களில் யாருக்காவது திடீரென்று ''மறல்'' உண்டாகி (ஆவேசம்) குற்றம் யாருடையது? என்றும் அதற்கு என்ன பரிகாரம் என்றும் கூறுவார். பிறகு மறலில் கூறியபடி பரிகாரம் செய்யப்படும்.

சில சமயங்களில் இலம்பாடிகள் கூட்டமாகத் திருப் பதியிலிருக்கும், ''பாலாஜி கோவிலுக்கு'' போய் பணம் கொடுத்து அர்ச்சகரிடம் ''அருள்'' கிடைக்க வேண்டுவார் கள். அருள் கிடைத்ததும், அதை எடுத்துக் கொண்டு திருப்பதியிலிருந்து பூனாவுக்கோ, ஐதிராபாத்துக்கோ அல்லது மற்ற ஊர்களுக்கோ ஆயிரம் மைலாக இருந்தா லும் மாதக் கணக்கில் நடந்தே வருவார்கள்.

போகும் போது இரயில் வண்டியில் சென்றவர்கள், வரும்போது இரயில் வண்டியில் ஏறினால் அவர்கள் வாங்கி வரும், ''அருளுக்குத் தீட்டு'' பிடித்து அதன் சக்தி குறைந்து விடுமாம். அங்ஙனம் நடந்து வரும்போது வழி யில் பல இடங்களில் கூடாரமடித்துத் தங்குவதுண்டு.

இவர்களைப் போலவே கான்பூரிலிருந்து மராட்டியர் கள் பண்டரிபுரம் செல்லும்போது, சென்னை பெரம் பூரில் கூடாரமடித்துத் தங்குவதை இன்று சென்னை வாசிகளில் பலர் பார்த்திருக்கலாம்.

இலம்பாடியர்களுக்கு ''ஒலி''ப் பண்டிகை உண்டு. அன்று மண்ணால் சிலைகள் செய்து வணங்குவார்கள். அன்று நடனமாடுவதும் உண்டு. இவர்கள் தீபாவளியும், பொங்கலும் கூடக் கொண்டாடுகிறார்கள்.

இலம்பாடிகளின் பாடியில் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டும், அவர்களுடன் மரத்தடியில் உட்கார்ந்து,

அவர்களுடைய இல்லங்களில் நுழைந்து கவனித்தபோதும் இலம்பாடிப் பெண்களின் முக ஜாடை இல்லாத சில வாலிபச் சுமங்கலிகளைக் கவனித்தேன். அங்ஙனம் பல ஊர்களில் கவனித்த எனக்குச் சில எண்ணங்கள் உதய மாயின.

பண்டைக் காலத்தில் நல்ல அழகுள்ள பெண்களைச் சிலரிடமிருந்து வாங்கியவர்களின் சந்ததியார்களோ இவர்கள் என்று யூகித்தேன். அதைக் கேட்டுப் பார்த்து விட்டேன். அவர்கள் அதற்கு, "அவர்கள் எல்லாம் எங்களுடன் சேர்ந்து எங்கள் ஆண்களைத் காதல் திருமணம் செய்து கொண்டார்கள்," என்று கூறினார்கள்.

## கல்வியும் மொழியும்:

இலம்பாடியர்களின் மொழிக்கு இலக்கணமும், இலக்கியமும் கிடையா. இவர்கள் பேசுவது, "இலம்பாடிமொழி." ஆனால் அதில், "இந்தி, உர்து, சமஸ்கிருதம், மராட்டி, குஜராத்தி, மார்வார் மொழி, தமிழ், மலையாளம், தெலுங்கு, முதலிய எல்லா மொழிகளையும் கலந்து பேசுகிறார்கள். அதாவது ஒரு வாக்கியத்தில் எல்லா மொழிகளின் சொற்களும் கலந்திருந்ததைக் கண்டுபிடித்தேன். மேலும் இவர்கள் எந்தெந்த ஊர்களில் வாழ்கிறார்களோ, அந்தந்த ஊர் மொழியையும் தங்கள் மொழியுடன் கலந்து பேசுகிறார்கள். இக்காரணத்தால் அவர்கள் மொழியில் கலப்பு அதிகமாகின்றது.

வெகுசிலரே சில ஊர்களில் நிலையாக நிலைத்து வாழ்கிறார்கள். அவர்கள் மட்டும் தங்கள் குழந்தைகளை நிலையான ஒரு மொழியைக் கற்கப் பள்ளிகளுக்கு அனுப்புகிறார்கள்.

